# சமுதாயம் ஒரு
# சைனபஜார்

பூவை. எஸ். ஆறுமுகம

**வாசு பிரசுரம்**

*185, லாயிட்ஸ் ரோடு, சென்னை-14*

*தொலைபேசி எண் : 82499 : : த. பெ. எண் : 659*

# இலக்கியத்தில் சமூகப் பணி

அணிமையில், 'கலைமகள்' இதழில் இடம் கண்டு, இடம் காட்டிய 'நாவல் பிறந்த கதை' எனும் தொடர்ச்சித்திரத்தில் நான் என்னுடைய 'சமுதாயம் ஒரு சைனாபஜார்' என்னும் இந்த நாவலை எடுத்துக் கொண்டு எழுதியபோது, என் சிந்தனைகள் இவ்வாறு ஓடின.

நாவல் என்றால் என்ன?

சமூகத்தின் ஆன்மாதான் நாவல்.

சமூகம் என்பது எது?

நானும் நீங்களும் சேர்ந்தது சமூகந்தான். நம்மோடு மற்றவர்களும் சேர்த்து.

சமுதாயத்தை மனிதர்கள் உருவாக்குகிறார்கள்.

மனிதர்களைச் சமுதாயம் உருவாக்குகிறது.

சமூகமும் சமூகத்தின் மனிதர்களும் இவ்வாறு ஒன்றில் ஒன்றாகப் பின்னி, ஒன்றுக்கு ஒன்றாக ஆதாரமாகி, பிணைந்தும் பிணைக்கப்பட்டும், இணைந்தும் இணைக்கப்பட்டும் உயிரும் உயிர்ப்புமாக நிலவுகிற இந்த ஒட்டுறவு, சமூகத்தின் விதியாக மட்டுமில்லாமல், சமூகத்தின் மனிதர்களின் விதியாகவும் விளங்கும். இவ்விதியை நியதி என்றும் வரம்பறுக்கலாம்; யதார்த்த உண்மையும் இதுவேதான். ஆனால், இந்த உண்மைதான்—இவ்வுண்மையின் நிலைமைதான் சமூகத்துக்கு—சமூகத்தின் மனிதர்களுக்கு வாய்த்திட்ட விதியா? விதிமுறையா?

சிந்தனைக்கு விருந்து படைக்கும் வினா இது.

ஆனால், வினாவுக்கு விடை என்ன?

அந்த விடை என்னிடம் மாத்திரமல்ல; உங்களிடமும் தான் இருக்கிறது. ஏன், சமுதாயத்தில் அங்கம் வகிக்கும் ஒவ்வொரு சராசரி மனிதனிடமும் அந்த விடை இருக்கிறது. எனவே, அவ் விடையை நாம் அந்தரங்க சுத்தியோடு எண்ணிப் பார்த்துத் திருவாய் மலர்ந்தருள வேண்டாமா? அது நம் கடமை அல்லவா?

சைனாபஜார் 'ஒய்யாரக் கொண்டை'யாக அழகு காட்டித் தொலையட்டும். உள்ளே இருக்கும் ஈரும் பேனும் பற்றி நமக்கு அக்கறை இல்லை. அந்த அக்கறை இந்த நிலா உலா நாகரிகத்தின் தலையிலே விழுந்து தொலையட்டும்.

ஆனால், சமுதாயம் அவ்வாறு வெறும் 'ஒய்யாரக் கொண்டை'யாக விளங்கலாமா? அப்படிப் போலித்தனமாக-பொய் வேடம் புனைந்து திகழச் செய்யலாமா? அங்ஙனம் திகழும் பட்சத்தில், அது சமுதாயத்தின் குற்றமாகுமா?

எய்தவன் இருக்க, அம்பை நோவது தர்மமாகுமா? பண்பு ஆகுமா? விதியாகுமா? அப்படியென்றால், சமூகத்துக்கு உருக் கொடுத்து, காவல் செய்யக் கடன்பட்ட இலக்கியம், கலா சாரம், அரசியல், பாரம்பர்ய மரபு, பொருளாதாரம், பண்பாடு போன்ற வாழ்வியலின் பலவேறு நிலைப்பட்ட பல வேறு அரங்குகளினின்றும் 'ஏ, தாழ்ந்த சமுதாயமே!' என்று பேசும் நிலையும், சமுதாய விரோதிகளின் பட்டியலும் இன்ன மும் நீண்டு கொண்டேதான் போகவேண்டுமா? சமூகத்தைக் குற்றவாளிக் கூண்டிலே நிறுத்திவிட்டு, குற்றவாளிகளே நீதிபதிகளாக ஆகிற துர்ப்பாக்கியமான ஓர் அநீதியை இனியும் அனுமதிப்பது தருமமாகுமா?

கசக்கின்ற இக் கேள்விகளுக்கு விடை காண வேண்டிய பொறுப்பு எனக்கு மாத்திரம் அல்லவே?...

சிறுகதை மன்னன் அதிவீரராம பாண்டியன், அழகுப் பாரிஜாதம் குமாரி பரிமளம், காந்திபக்தர் வீரபாகு, கோயில் குருக்கள் புண்ணியகோடி!—சமுதாயம் என்பது இந்த நாலு போதாமா?—யார் சொன்னது?

'ட்ரெடில்' வருகிறது; இலக்கியத் திருட்டும் வருகிறது; காதல் வருகிறது; 'மஞ்சள் பத்திரிகை'யும் வருகிறது. வாழ்க்கை வருகிறது; விதியும் வருகிறது; கேள்வி வருகிறது; சிந்தனையும் வருகிறது!

இந் நவீனத்தை வேண்டிப் பெற்று, தொடரும் கதை யாக "மணிக்கொடி"யில் வெளிப்படுத்தியபோது, 'இதில் வரும் பெயர்களும் சம்பவங்களும் கற்பனையே' என்ற அபாய அறிவிப்பு செய்யப்பட்டிருந்துங்கூட, இக்கதை தொடர்ந்த போதும் சரி, தொடர்ந்து நிறைந்த போதும் சரி, இதை படித்தவர்களும், படித்ததைக் கேட்டவர்களும் 'நம்மைத் தான் சந்தியில் நிறுத்தியிருக்கிறுனே?' என்று மனிதப் பண்பு கொண்டு, சுயதரிசனப் பான்மையுடன் 'சத்தியச் சோதனை' நடத்திக் கொண்ட ஓர் அதிசயத்தையும் நான் கேள்வி யுற்றேன்.

ஆகவே:

என்னுடைய இந்த நவீனம் அதற்கு என்னுல் விதிக்கப் பெற்ற சமுதாயப் பணியினை மனச்சான்று ஒளிகாட்ட—ஒலி காட்ட முடித்துக் காட்டியிருப்பதாகவே நான் கொள்ளலாம் அல்லவா?

சென்னை-1.
25—3—'72

பூவை ஆறுமுகம்

# 1. வாலைக் குமரி

வைத்தியக்காரர்களை மட்டும் அல்ல; பணக்காரர் களையும்தான் பத்துப் பேர் சுற்றிச் சூழ்ந்து கொள்ளுகிறார்கள். இந்தப் பத்துப் பேர்கள் அத்துடன் நின்று விடுகிறார்களா என்றால், அதுதான் கிடையாது! அவர்கள் பாவம், தெய்வங்களையும் வேறல்லவா மொய்த்துக் கொண்டு விடுகிறார்கள்!

சரி.

பத்துப் பேர்—பத்துப் பேர் என்று மட்டும் கன கச்சிதமாக வரம்பு கட்டிச் சொல்லிவிட்டிருக்கிறார்களே, அந்தப் புண்ணியவான் யார்?—ஏன் அப்படிச் சொன்னான்?—எப்போது அவ்வாறு செப்பினான்?

யார் அந்தப் பத்துப் பேர்?

ஊஹூம்!—யாருக்குத் தெரியும்?

கேள்விகள் கேள்விகளாகவே இருக்கின்றன.

கேள்விகள், விடைகளாக 'அவதாரம்' செய்ய வேண்டாமா? வேண்டும்; பேஷாக வேண்டும்!

மானிடப் பிண்டத்திற்கு வினாக் தொடுக்க மட்டுமே தெரியும்!

ஆண்டவனுக்கோ விடை சொல்லத்தான் தெரியும்!

சரி, சரி!

அதோ, பாருங்கள்!

தமிழோடு விளையாடும் திருமுருகன், படைப்பின் தவத்தோடு—தார்மீகத்தின் நீதியோடு—நியதியின் விதியோடு நின்று, அந்த வெள்ளி ஐந்தடுக்குத் தீபத்தின் நெஞ்சுருக்கும் ஆராதனையை ஏற்றுக்கொண்டே இருக்கிறான்!

ஆஹா! மறை நாயகனின் அந்த அருட் புன்னகையை வருணிக்க பாலவாய்ப் பசுந்தமிழுக்குத் தானே தெரியும்!

பூஜை முடியும் நேரம் நெருங்குகிறது.

தலை வணங்கப் பிரியம் கொண்டவர்கள் அவரவர் நெஞ்சைத் தொட்டுப் பாரத்துக் கொண்டே 'அவனை'த் தரிசியுங்கள்.

காலதாமதம் செய்யக் கூடாது.

ஏன் தெரியுமா?

ஆலயங்களுக்கும் எட்டு மணி நேர வேலைதான்!

ஃ ஃ ஃ

தெய்வத்தின் திருச்சந்நிதியில் எள் போட்டால் எள் விழ இடம் இல்லை; அவ்வளவு கூட்டம் கூட்டம் என்றால், சாமானியமான கூட்டமா?—பக்தர்களின் கூட்டம் அல்லவா?

சுந்தரேசன் விபூதிப் பிரசாதத் தட்டை நாகரிகமாகக் கையிலேந்திய வண்ணம், மண்டிய முகத்தை நேர்வசமாக நிமிர்த்தியவனாக, படிக்கட்டுகளைக் கடந்து இறங்கினான்.

பளிச்சென்று தெரியும் வறுமையைப் போல, கறுப்புச் சுருடடை முடிகள் பளிச்சிட்டன. தெய்வத்தின் புதிர்ப் புன்னகையை நித்தம் நித்தம் பார்த்துப் பழகிய தோஷம் காரணமாக, அவனும் ஒரு பூடகமான புன் முறுவலோடு பக்தர்களின் திருக்கூட்டத்தைத் தன்னுடைய அழகு விழிகளால் அளந்தான். 'பெண்கள் பகுதி'

என்ற எச்சரிக்கைப் பலகையை கடைசிக் கட்டத்தில் பார்த்து விட்டு அப்புறம்தான், ஆண்கள் பகுதியை நோக்கினான் ஜூனியர் குருக்கள் சுந்தரேசன்.

வயதில் மூத்தவருக்குத்தான் முதல் மரியாதை செலுத்த வேண்டும். இது, அவ்வாலயத்தில் செயற்படுத்தப்பட்டு வந்ததொரு மரபும் ஆகும். ஆகவே அவன் தன்னுடைய சிவப்பு நெற்றியில் சுருக்கங்களை வரவழைத்தவாறு கூட்டத்தை மீண்டும் ஊடுருவிப் பார்ப்பதில் முனைந்தான். அவனால் ஒரு முடிவுககும் வரமுடியவில்லை. தவித்தான்.

அன்றைக்கென்று ஒரு கிழம் கட்டையைக் கூடக் காணோம்! 'அப்பனே!' என்று பரிதாபத்தோடு மனதிற்குள் முணு முணுத்துக் கொண்டே இளைய பிராணைப் பார்வையிட்டான.

அப்போது:

"அப்பனே!" என்ற எதிர்க் குரலொன்று திடீர் என்று எதிரொலி பரப்பிக் கேட்டது.

திரும்பினான் சுந்தரேசன். குரல் வந்து நின்ற திசையிலே புண்ணியகோடி குருக்கள வயதை மறந்து, வயதை மறைத்து, கழுத்தில் பகவான் பாம்பை மாலையாகப் போட்டிருக்கிற மாதிரி, இவர்கள்—புண்ணியகோடி குருக்கள் பொன் உருத்திராட்ச மாலையை அணிந்தபடி நின்று கொண்டிருந்தார்.

"அப்பனே! எம்பெருமானே!...பிரபோ!" என்று நெஞ்சம் நெக்குருகி, அந்த உருக்கத்தில் ஒன்றிய ஓர் அமைதியின் நிழலில் ஒடுங்கி நின்ற நிலையிலே இரண்டு கன்னங்களிலே மாறி மாறிப் போட்டுக் கொண்டு கரங் கூப்பிக் கும்பிடலானார். நீண்டது கண்ணீர்—விதியாக—வினையாக!

கணங்கள், பேய்க் கணங்களாக ஊர்ந்தனவோ?

சின்னக் குருக்கள் சுந்தரேசன் சற்றுமுன், முன்னே முக்கால் விநாடி நேரம் இந்த மண்ணில் இலயி

இப்போது சுயப்பிரக்ஞை வந்து விட்டது. "அப்பா! விபூதி எடுத்துக்குங்கோ. பொடிப் பயலை அனுப்பிச்சு இருந்தா, பிரசாதம் அனுப்பிச்சிருக்க மாட்டேனோ?" என்று சன்னக்குரலை பாசத்தில் தோய்த்தெடுத்துச் சொல்லிக் கொண்டே விபூதித் தாம்பாளத்தைத் தந்தையிடம் நீட்டினான். வலது கையில் இழைந்திருந்த தங்கக் கடிகாரச் சங்கிலி மின்னியது.

பெரிய குருக்கள் ஒரே கொத்தாக விபூதியை அள்ளினார். நலிந்து மெலிந்த அவரது கரங்கள் ஏன் அப்படி நடுங்குகின்றன? அள்ளி எடுத்த திருநீற்றில் செம்பாதியை வாயில் போட்டுக் கொண்டு, மறு பாதியை அகன்று பரந்து கிடந்த தம்முடைய நெற்றி மேட்டில் பூசிக் கொண்டார். பிறகு பெரிய குருக்கள் தம்மை மறந்து சிரித்துக் கொண்டார்.

அந்தச் சிரிப்பின் பயங்கரமான மெல்லலைகளைப் பயங்கரமாக மிதித்தபடி சுந்தரேசன் வெண்ணீறு விநியோகத்தில் ஈடுபட்டான்.

"சுவாமி, எனக்குக் கொடுங்க!"

"ஆபீசுக்கு டைம் ஆயிடுச்சு!"

"நேக்கு, மாமா!"

"ஸார், இங்கே பாருங்க!"

"சாமி, ஊர்வசியை மறந்திடப் போறீங்க!"

"பத்து மணி பஸ் ஓடிடப் போகுதுங்க. சீக்கிரம் கொடுங்க!"

பக்தர்கள் கூட்டம் பக்தி செலுத்துவதில் மட்டும் போட்டியிடவில்லை. இப்போது, விபூதி பிரசாதம் பெறுவதிலும் போட்டி போட்டது.

சுந்தரேசக் குருக்களுக்கு வழிந்த நெற்றி வேர்வையை வழித்து விடக்கூட நேரம் இல்லை. மடப் பள்ளியில் பள்ளிக் கொண்டிருந்த வெள்ளிக் கூஜாக் காப்பி அவர் நெஞ்சிலும் நினைவிலும் ஊறத் தொடங்கி விட்டது!

பெரியவர் புண்ணியக்கோடி குருக்களுக்கு மூச்சு முட்டியது. ஆகவே வெளிப்பிரகாரத்துக்கு வந்தார். 'சிவனே' என்று காத்துக் கிடந்த அந்த ஒட்டுத் திண்ணையில் உட்கார்ந்தார். உட்கார்ந்தவருக்கு என்ன தோன்றியதோ, எழுந்தார். பஞ்சக்கச்சத்தைச் செம்மைப்படுத்திக் கொண்டார். ஒருகணம் அவர் கண்களை மூடினார்.

நல்லவேளை, மறுகணத்தில் அக்கண்கள் திறந்தன. வலது கையில் ஒட்டியிருந்த விபூதியைத் தட்டினார். கையில் ஊர்ந்த ஆறு பவுன் காப்பிக் கொட்டைச் சங்கிலி காலை வெயிலில் பள பளத்தது—கன்னிப் பெண்ணின் கள்ளவிழிக் குறுஞ்சிரிப்பைப் போல இடுப்பின் இடது கோடியில் செருகப்பட்டிருந்த பொடி டப்பாவை எடுத்தார். பெரிய துமமலொன்று வெடித்தது.

வடதிசைத் தூணிலே நின்ற அனுமாரைச் சேவித்துக் கொண்டிருந்த ஊர்வசியின் இடுப்பில் இருந்த குழந்தை வீரிட்டதை அவர் எப்படி அறிவார்?

"அப்பனே! பிரபோ!" மெய்ம் மறந்த பாவனையில் பெரிய குருக்கள் நின்றார். இரட்டை நாடிச் சரீரம் குலுங்கி அடங்கியது. திண்ணையில் உட்கார்ந்து அட்டணைக்கால் போட்டுக் கொண்டார் முதியவர்.

"சாமி, கும்பிடுறேனுங்க!" என்று சொல்லிக் கொண்டே வந்து நின்றாள் ஊர்வசி. சொன்னபடியே செய்தாள். குவித்த கரங்களுக்கு மத்தியில் இங்கிலீஷ் பாக்கட் புத்தகமொன்று திண்டாடிக் கொண்டிருந்தது. இடுப்புக் குழந்தை, தோள் குழந்தையானதோடும் ஓய வில்லை. திருமதி ஊர்வசியின் வாரி விடப்பட்டிருந்த முடிக் கற்றைகளைக் கலைக்கத் தலைப்பட்டது. 'ம்...மா!' பாட்டையும் நிறுத்திவிடவில்லைதான். பதுக்கி வைக்கப்பட்டிருந்த வெண்முடிகள் சில இளங்காற்றில் பறக்கத் தொடங்கின. பதட்டத்துடன் புத்தகமும் கையுமாகத் தலைமுடிகளைச் சீர் செய்வதில் முனைந்தாள் ஊர்வசி.

"மகராசியா இரு" என்று கிடைத்த ஆசீர்வாதம் அவளை ஆனந்தக் கடலாடச் செய்திருக்க வேண்டும்.

ஆழிக்காற்று கண்ணியமான பாங்குடன் தவழ்ந்து கொண்டேயிருந்தது.

ஒரு சிமிட்டா பொடி போய்ச் சேர வேண்டிய இடத்துக்குப் போய்ச் சேர்ந்தது.

"சௌக்கியமா ஊர்வசி?" என்று க்ஷேமலாபம் விசாரித்தார் பெரிய குருக்கள்.

'ஜீன்' உடுப்பில் திமிரித் திகழும் பருவ கவர்ச்சியோடு கூடிய பத்திரிகைப் படம் ஒன்றை ஜாடையாகப் பார்த்தவாறு இருந்தார். அவரது இடது புறத்துத் தோளில் சரிந்து கிடந்த ஜரிகைத் துண்டு பொலிந்தது. பொக்கைவாய்ச் சிரிப்பு இன்னமும் அடங்கவில்லை; ஒடுங்கவில்லை.

"உங்கப் புண்ணியத்திலே சௌக்கியத்துக்கு என்னுங்க குறைச்சல்!" கம்பீரமான பூரிப்புத் துலங்க விடை கொடுத்தாள் ஊர்வசி. பாலமுதம் உண்ணத் துடித்து பகிரங்கமாக வம்பு செய்து கொண்டேயிருந்த பாப்பாவை ஒரு கிள்ளு கிள்ளினுள்—ரகசியமாக. குழந்தை என்றால், அதுவல்லவோ குழந்தை—அசல் குழந்தை. வாயைத் திறக்க வேண்டுமே! மூச்!... 'தில்லாறு மோகனும்பாள்' கவுன் டால் அடித்தது; போதாதா?

சிந்தனை வசப்பட்டிருந்த புண்ணியகோடி குருக்கள் சிந்தனை கலையப் பெற்றார். "என்ன சொன்னே... ஊர்வசி?" என்று மீளவும் வினு முடுக்கினார்.

முடுக்கி விட்டால் பொம்மை வண்டி மட்டும்தான் ஓடவேண்டும் என்று நியதி இல்லையே? சட்டம் கிடையாதே?

ஊர்வசி வயதைத் தாண்டிய வாளிப்போடு சிரிக்கலானாள். சிரிப்பல்ல; இளநகை அது. "உங்க புண்ணியத்திலே நல்லா இருக்கிறதாகச்

சொன்னேனுங்க, ஐயா" என்று தன்னுணர்வு சிதறாமல் சிதற விடாமல் செப்பினார். கொண்டைப் பூச்சரத்தில் டிசம்பர்பூக்கள் தனித்து நின்று அழகு காட்டத் தவறி விடவில்லை

பெரியவர் விநயபூர்வமாகப் புன்னகை செய்ய முயன்றார். "என்னோட புண்ணியம் என்ன?...எம் பெருமான் புண்ணியம்னு சொல்லிக்கோ!" இணைபபுச் சங்கிலிகளென ஒன்றோடொன்று பிணைத்துக்கொள்ள ஓடித் துடித்து வந்த ஏதேதோ சிந்தனைகளை 'நூற்றி நாற்பத்தி நாலு' போட்டு மடக்கி விட்டார் பெரிய குருக்கள்.

குனிந்த தலை நிமிராமல், சிமெண்டுத் தரையில் கால் பெருவிரல் கொண்டு கோலம் போட்டுக் கொண்டிருந்த ஊர்வசி மெல்ல மெல்லத் தலையை நிமிர்த்தினாள்.

அவள் விழிகளும் அவர் கண்களும் சந்தித்துப் பிரிந்தன.

தங்கக் கழுத்தில் ஊசலாடிய வைர நெக்லஸை நெருடி வருடியவாறு ஓர் அரைக்கணம் மௌனம் காத்து நின்றாள் ஊர்வசி. வைர அட்டிகையைத் தாண்டி முகம் காட்டியது தங்கத்தாலி.

"இப்போ எப்படி இருக்கிறது வாழ்க்கை?" என்று பதமான தொனியில் கேட்டார் முதியவர்.

"என்னமோ ஓடுதுங்க!"

"ஓடட்டும், ஓடட்டும், மேள தாளத்தோடே நன்னு ஓடட்டும்! 'ஓடக் காண்பது பூம்புனல் வெள்ளம்' என்கிறது திருமூலர் பாட்டு...ஊம்...அப்பனே!" நெடு மூச்சுப் புறப்பட்டது. ஊர்வசியின் கையிலிருந்த பாக்கெட் புத்தகம் அவருடைய கண்களை வெகு நேரமாக உறுத்தியது போலும்! கைகளை விரித்து, அந்தப் புத்தகத்தைப் பிடுங்கிப் பார்த்தார். மூக்குக் கண்ணாடியைக் காதுகளில் பொருத்திக் கொண்டு வாசித்தார். 'லேடி சாட்டர்லீஸ் லவர்!' இளமைக்

கனவுகளின் முற்றுப் பெறாத ஒரு சோகத்தின் ஏக்கத்தை யொத்து, வறட்சி மிக்க சிரிப்பைச் சிந்தினார் புண்ணியகோடி.

பெரியவரின் முகவிலாசத்தில் விளைந்திட்ட சுருக்கங்களின் கூடுதலைக் கவனிக்கத் தவறவில்லை ஊர்வசி. "சாமிக்கு வேணுமா இது? ரொம்பக் காலமாய்த் தேடிக்கிணு இருந்தேன். எதுக்கும் வேலை வரவேணுமா? இப்பத்தான் கிடைச்சுது" என்று விளக்கம் ஈந்தாள்.

பெரியவர் தலையில் அடித்துக் கொண்டார். "சிவ, சிவா! கர்மம்...கர்மம்! சரி, சரி, நீ புறப்படு தாயே!" என்று தடித்த குரலில் 'வசனம்' பேசிவிட்டு, அங்கு இருந்து எழுந்து மடப்பள்ளியைத் தஞ்சமடைந்த நேரத்தில் ஒரு விஷயம் பற்றிக் கேட்டுத் தெரிந்து கொள்ள மறந்து விட்ட விவரத்தை உணரலானார். 'ஊர்வசிக்கு எப்போ இந்த பேபி பிறந்தது...?' முளைத்த இக்கேள்வியை மண்டையில் அடித்தார்.

"சாமி உடம்பு ரொம்ப இளைச்சுப் போயிட்டுதே! கவனமாய்ப் பார்த்துக்கங்க" என்று ஆறுதல் தோய்ந்த எச்சரிக்கையை நழுவ விட்டுச் சென்ற ஊர்வசியின் சொற்கள் அவரது இதயத்தின் இதயத்தில் எதிரொலிக்கத் தொடங்கின.

❖ ❖ ❖

மடப் பள்ளியினின்றும் வாயைத் துடைத்துக் கொண்டே வெளியே வந்தார்கள் தந்தையும் தனயனும்.

திருக்கல்யாண மண்டபத்தின் மேலச் சுவரில் ஆடிக் கொண்டிருந்த ஆடியில்—கண்ணாடியில், கீழ்ப் பகுதியில் இருந்த சுவர்க்கடிகாரம் முகம் பார்த்துக் கொண்டிருந்தது.

பொய்மை வாழ்விலே மெய்மையை உணரத் துடிக்கின்ற ஓர் உண்மை மனிதனுக்கு நேராக, சுடிகாரம் 'பத்து முறை, முறை வைத்து' அடித்தது; ஓய்ந்தது.

"ஓ, மைலார்ட்"—புண்ணியகோடி அவசரத் துடிப்புடன் கைவிரல்களைச் சொடுக்கிக் கொண்டார். கையிலிருந்த பையைத் திண்ணையில் வைத்து, கையை உள்ளே நுழைத்துத துழாவினார். எடுத்த எடுப்பில் சிக்கி விட்டது, அந்தப் பழைய டைரி. அதன் ஜம்பம் அவரிடமா சாயும்? புரட்டினார்.

"ஐயா...!"

விச்ராந்தியாக திண்ணையில் உட்காரலாமென்று இருந்த அவருக்கு இப்படிப்பட்ட சோதனையா வர வேண்டும்? "யாரது?" என்று ஓங்கிய குரலில் கேட்டு விட்டு, தலையை வெளியுலகம் நோக்கி ஒடித்து நீட்டினார். சூடுபிடிக்கத் தொடங்கியிருந்த தம்புச் செட்டித் தெருவில் கல்யாண ஊர்வலம் ஒன்று நெளிந்துகொண்டிருந்த காட்சிதான் அவரது விழி விரிப்பில முலன் முதலாக ஏடு விரிந்தது. பொட்டுப் பொழுதுக்கு, நெற்றிப் பொட்டில் யாரோ, அல்லது எதுவோ தட்டினாற்போல் ஓர் உள்ளுணர்வு கிளர்ந்தெழுந்தது. அப்பனைத் துணைக்கு அழைத்தார். அந்நிழல் கொடுத்த அமைதியோடு, 'ஐயா' என்று விளித்த குரலை இனம் காண விழைந்தார் பெரிய குருக்கள். பெரிய உடம்பில் மூச்சு இரைத்த ரகசியம் அந்தக் குரலுக்கு உடையவருக்குத் தெரிய வேண்டாமா, என்ன? வெளியுலகம் காண ஓடிய பார்வை, அதே சடுதியில் ஓடி வந்தது, சே!

குஷ்டரோகிப் பிச்சைக்காரன் ஒருவன் வாசல் முகப்பில் நின்றான். "டே, அம்பி! கதவை அடைடா! டைம் ஆயிடுத்து!" என்று ஆணையிட்டுப் பாசத்தின் குரலை இறக்கி வைத்து விட்டு, "என்னப்பா!" என்று முகத்தை மறுபடியும் திருப்ப ஒப்பாமல், குரலை மட்டிலும் வாசலுக்குத் திருப்பினார் முதியவர்.

"பசிக்குதுங்க சாமி!"

"பசிச்சா சாப்பிடேன்!"

"வழி இல்லீங்க!"

"லோகத்தில் வழிக்குக் கூடவா பஞ்சம் வந்திடுத்து? பைத்தியக்காரன்!...நாலு திசையிலேயும் வழி பிரிஞ்சுக் கிடக்குதப்பா!"

"கும்பி கொதிக்குதுங்க எனக்கு! நீங்க கேலி பண்ணுறீங்க!...சாப்பிட வழியில்லீங்க!" இட்ட அடி நோக எடுத்த அடி கொப்புளிக்க, அந்த நடுத்தெரு நாராயணன் முன்னேறினான்.

"ஏ, பகவான் சந்நிதி இது. அங்கேயே நின்னுக்க. துட்டு தந்திடறேன்" என்று சொல்லி அவனுக்கு— அல்லது, அவனோடு தெய்வம் மாதிரி நீக்கமற நிறைந்திருந்த பெருநோய்க்குப் பயந்தவராக, பையிலிருந்த பர்ஸைப் பதட்டத்தோடு எடுத்து, கையில் கிடைத்த துட்டை அவசரம் அவசரமாக வெளியே தூக்கி

"தர்மப் பிரபுவுக்கு நல்ல சாவு கிட்டுமுங்க!" என்று அந்தத் தொழுநோய்ப் பிச்சைக்காரன் வாழ்த்திச் சென்றதைக் கேட்டதும், அவருக்குத் திகீரென்றது! என்னவோ ஒரு சந்தேகத்தில் பர்ஸைப் பிரித்தார். மீண்டும் திகீரென்று ஆகிவிட்டது. காந்தித் தலை போட்ட ஒரு ரூபாய்ப் பணம் அவுட்!—ஆமாம், 'தர்மம் வெளியே போகும் வழி'யில் சென்றிருக்கிறது!

"பரவாயில்லே. மறுபடியும் மிஸ்டர் அதிவீரராம பாண்டியனைச் சந்திக்கிறப்ப, இன்னொரு காந்தி ரூபாய் பணம் வாங்கிட்டால் போச்சு! போகிற வழிக்கு நேக்குப் புண்ணியம் கிடைக்கட்டும். பரவாயில்லே" நல்ல மூச்சு விடலானார் புண்ணியகோடி.

மிஸ்டர் அதிவீரராம பாண்டியன் பிரபலமான எழுத்தாளர் மட்டுமில்லே! விசித்திரமான இந்த லோகத்திலே அழகாப் பொழைக்கிறதுக்கும் கத்துண்டிருக்கிற கெட்டிக்காரரும்கூட!

இல்லேன்னு, சினிமாவிலே கிடைச்ச துட்டைக் கொண்டு கீழ்ப்பாக்கத்திலே அழகான பங்களாவைச் சொந்தத்துக்கு வாங்கி இன்னிக்கு காலம்பற குடி போயிருப்பாரா?...

மன்னன்னு மன்னன்!...சிறு கதை மன்னன்! சின்னக் குட்டிங்களெல்லாம் பாண்டியனோட கதை யிலே என்னமா மயங்கி நிற்குதுங்க...!

நினைவுகள் பிசிறு தட்டின. மிஸ்டர் பாண்டியனை எத்தனை பொண்ணுங்க மொய்ச்சிண்டு இருக்குதுங்க! கொடுத்து வைத்த மனுஷன்!

கோடியில் ஒரு சுவரொட்டி தென்பட்டது.

ஊன்றிக் கவனித்தார் அவர்.

பாரதப் பிரதமரின் தமிழ்நாட்டு வருகையை அறிவித்த சுவரொட்டி அது. தள்ளாத வயதில் பாசத்தின் உந்துதலினால் மெரினாவிற்குச் சென்று கேட்டு வந்த நிகழ்ச்சியை அவரால் மறக்க முடியாது. 'எவ்வளவு நன்னாப் பேசறாங்க இந்திரா காந்தி! அப்பா மாதிரி ரொம்ப லாஜிக்கலாவும் பேசறாங்க. ஒருவகை யிலே பார்த்தால், அப்பாவைக் காட்டிலும் துணிச் சலிலே ஒரு படி கூடுதல்னு கூட சொல்லிடலாம். பத்திரிகைகளை இட்டு நிரப்பறதுக்குதானோ என்னமோ அரசியலிலே திடீர் திடீர்னு எவ்வளவு திருப்பங்கள் சம்பவிச்சிண்டிருக்கு! நல்ல தலைவர்களை ஜனங்க ஸ்டடி பண்ணிப் புரிஞ்சுக்கக் கத்துண்டு வர்றாங்க!

அன்றையப் பத்திரிகையில், ராஜாஜி ஹாலில் பேரறிஞர் அண்ணாவின் படத்தை பாரதப் பிரதமர் திறந்து வைத்த வைபவம் குறித்துக் குறிப்பிட்டிருந்த இரண்டாவது பக்கம் மடிப்பில் தெரிந்தது

கதவுகளை அடைப்பதற்கு 'வேளை' பார்த்திருந்த சுந்தரேசனுக்கு, நந்தியருகே நின்று கண்ணீர் பெருக்கிக் கொண்டிருந்த ஓர் உருவத்தைக் கண்டதும் கண் கலங்கத் தொடங்கியது. நாசூக்காகச் சமாளிக்க வேண்டியவன் ஆனான். 'பாவம் அருணகிரி! ஜவுளியிலே பெரிய லட்சாதிபதியாக இருந்த இந்த மனுஷன் இப்போ சோத்துக்கே லாட்டரி அடிக்கிறாரே!

கையில் வைத்திருந்த ட்ரான்ஸிஸ்டரை 'ட்யூன்' பண்ண எண்ணிய நேரம் பார்த்துத்தானா, இந்த டெலிபோன் மணி அடிக்க வேண்டும்?

பெரியவர் பழைய பத்திரிகை ஒன்றைப் புரட்டிக் கொண்டிருப்பதை அறிந்ததும், உடனே தொலை பேசியின் கடமையைக் கண்ணியத்தோடு அங்கீகரித்து நெருங்கினான்.

"ஹலோ! ஸ்பீக்கிங்" என்று வெகு நயமாக வாயைத் திறந்தவன், மறுகணம், "ஓ...வீரபாகு ஸாரா? ஒரு செகண்ட் ப்ளீஸ்!" என்று சொல்லி, வாயை—தன் வாயை அல்ல, தொலைபேசியின் வாயைப் பொத்திக் கொண்டே, "அப்பா, அவா பேசறு, மாம்பலத்திலே இருந்து. இன்னிக்கானும் என் கனவு பலிச்சிடணும். இல்லாட்டா, என் மாரேஜ் விஷயத்துக்கு நான் 'ஓ கே' சொல்லமாட்டேனாக்கும்" என்று சின்னப் பாப்பா மாதிரி சிணுங்கத் தொடங்கினான் சுந்தரேசன்.

உட்கார்ந்திருந்த புண்ணியகோடி முதல் அலுவலாக எழுந்து நின்று கொண்டார். அடுதத கடனாக, நாரியச் சிரிப்பு ஒன்றுக்கும் ஒத்திகை நடத்திப் பார்த்தார். பிறகு சுந்தரேசனை நோக்கினார்.

"சரிடா சுண்டு. நீ அழப் படாது. நீ அழுதா நான் அழுவேன்னுதான் நோக்குத் தெரியுமே! முடிச்சுடுறேன். கவலை வேண்டாமடா சுண்டு, கவலை வேண்டாம்" என்று 'அபயம்' அளித்து விட்டு, அருமைத் திருமகனின் முகாரவிந்தத்தைக் காண முகத்தை நிமிர்த்தியபோது, 'அபாயம்' என்ற மின் இயக்க எச்சரிக்கைப் பலகைதான் கண்களில் பட்டது. சுரீரென்றது பகவானை நெஞ்சில் இருத்திக்கொண்டு தொலைபேசிக் கருவியைப் பற்றினார்.

"வணக்கங்க...வணக்கம்!...வணக்கம்! அப்படிங்களா? 'ஓ கே' தானே?...பேஷ்...பேஷ்! 'ஓ கே'... சமாச்சாரம்?...அப்புறம் சி எம். விஷயம்? பிறகு? ஓ...அப்படிங்களா? ஆல் ரைட்! நேரிலே பேசுவோமே! இந்த ஏழையை இவ்வளவு தூரம் தாங்கள் நினைவு வச்சிண்டிருக்கிறது என்னோட பூர்வ ஜென்மப் புண்ணியந்தான்! ஓஹோ! ஆமா! ஆமா! என் பேரே புண்ணியகோடிதான்னு 'ஜோக்' அடிக்கிறீங்களாக்கும்.

சரிங்க. இப்பவே அம்பாஸிடரை எடுத்திட்டு வந்திடறேன்! ஆமா, பையனையும் அழைச்சிண்டுதான் வரப் போறேன். உங்களோட கொஞ்ச நாழி மனம் விட்டுப் பேசணும். தாங்க்யூ வெரிமச், சார்!”

தொலைபேசி அதற்குரிய இடத்தை அடைந்து விட்டது.

பொடி டப்பா காலியாகப் போவதாகப் பயமுறுத்துகிறது!...பொடிப்பயலைக் காணோம்!

தெய்வத்தை அல்ல, கோவிலை அடைக்க அப்பாவும் பிள்ளையும் முனைந்தனர்.

அப்போது:

பத்துத் தப்படி இடை வெளி காட்டி நின்றுக் கொண்டிருந்த ஒரு பெண் உருவம் பூங்கரங் குவித்துக் கும்பிட்டுக் கொண்டிருந்தது.

ஒரு புத்தம் புதிய துறவுப் பார்வையை அமைத்துக் கொண்டு, அப்பெண் பதுமையை இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார் பெரிய குருக்கள்.

விசித்திரமான அங்கேரத்தைத் தனக்குச் சாதகமாக்கிக் கொண்ட சுந்தரேசன், பக்திப் பரவசத்தில் தன்னை மறந்து நின்ற அந்த வாலைக் குமரியை பாதாதி கேசம் வரைப் பார்த்தான். பிறகு, உள்ளங்கையில் இழைந்த எலுமிச்சம் பழங்களைப் பார்த்துக் கொண்டே தன்னுடைய நீண்ட மூக்கின் அருகில் கொண்டு சென்றான். தேவதையா இந்தப் பொண்ணு? இல்லை, தெய்வமா? அழகின்ஞ இப்படியொரு அழகா? எழிலார்ந்த மார்பகத்தில் அடங்கிக் கிடந்த தங்கச் சங்கிலியின் வெள்ளைக் கல் பதக்கத்தின் எழிலை ரசிக்கக் கூடத் தோன்றவில்லை அவனுக்கு. மூக்கின் முனையில் ஒய்யாரமாக நுனிவிரலை அமைத்து பிரஷாதமாக யோசித்து விட்டு தன்னுள் எழுந்த கொதிக்கும் பிரச்னைக்கு தீர்வு கண்டு, அத்தீர்வை தனக்குத்தானே

அங்கீகரித்தவனாக, அம்பாளிடமிருந்து நோக்கி அடி எடுத்து வைத்தான்!

பெரிய குருக்கள் இப்போதுதான் இம்மண்ணுக்குத் திரும்பினார். உடனே அவருடைய கைகள் ஒரு பக்தி உணர்வை ஏந்தி ஒன்று சேரக் குவியலாயின. அடைபட்ட கதவுகளுக்கு உள்ளே அடைபடாமல் நின்ற உமையவள் அவரது நெஞ்சத்தில் நிழல் ஆடினாளோ? “தாயே!” என்று நெஞ்சம் நெக்குருகிக் கூவினார். விழி பிதுங்கி ஓடிய கண்ணீர் வழி மிதித்து ஓடிக் கொண்டிருந்தது.

“தாயே” என்ற அழைப்பு, அந்தப் பெண் பதுமையைக் குமரியாக்கியதோ? அவள் விழி மலர்ந்தாள். பெரியவர் புண்ணியகோடி குருக்களை ஊடுருவினாள். ஏனோ அவளது இதயத்தின் இதயம் இனம் புரியாத பாசத் தவிப்பிலே மருண்டது; துடித்தது! துவண்டது, தடுமாறினாள். “ஐயா! கேவலம் சாதாரண மானுடப் பெண்” என்று விம்மினாள் அந்த வாலைக் குமரி!

அவளுடைய அந்த இடது கன்னத்துத் திருஷ்டி மச்சம் எத்துணை பாங்குடன் திகழ்கிறது!

பெரியவர் கண்ணீரை விலக்கி விட்டார். “அம்மா, தெய்வம் உன்மாதிரி ரூபத்திலே வரப் பழகிண்ட காலம் தாயே இது! அதுசரி!...நீதானே ராத்திரி பிரபல எழுத்தாளர், மிஸ்டர் அதிவீரராம பாண்டியன் முன்னே துர்க்கை மாதிரி நீதிச் சோதனை—உரிமைப் போர் நடத்தினே?” என்று கேட்டார். அவர் கண்கள் அந்தத் திருஷ்டி மச்சத்தை ஏன் அப்படி ஊடுருவுகின்றன?

அவள் வாய் திறக்கவில்லை. நகரலானாள். ‘ஐயையோ! தெய்வமே! என் தெய்வமே!’ என்று மனம் ஓலமிட்டது. நடந்தாள்

அவள்: குமாரி பரிமளம்!

## 2. மலர்ந்தும் மலராத...

வாலைக் குமரி பரிமளத்தின் மனம் ஓடியது; ஓடியது; அப்படி ஓடியது!

தம்புச் செட்டித் தெருவின் அமைதி மண்டிய சுறு சுறுப்பு சூடு பிடித்த வேளை அது.

உதய சூரியனின் பொற்கதிர்கள் கட்டுப்பாட் டுடன் சூட்டை ஏற்றிக் கொண்டிருந்தன.

எதைப்பற்றியுமே அக்கறை கொள்ளாமல், கருமமே கண் ஆனது மனித மந்தை.

ஆபீஸ் நேரம்

தொழிற்சாலையின் நேரமும் கூட.

அவரவர்கள் தலை தெறிக்க ஓடிக் கொண்டும், நடந்து கொண்டும் இயந்திரங்களாக இயங்கியதில்— இயக்கப்பட்டதில் வியப்பில்லை அல்லவா?

எந்தப் பட்டணம் எங்கே கொள்ளை போய் விட்டதோ?—டாக்ஸி ஒன்று ஒருவழிப்பாதை என்பதையும் மறந்து அல்லது மறைத்தபடி பறந்து வந்தது.

நல்லவேளை பரிமளம் தப்பித்தாள்—உயிர் தப்பித்தாள். மயிரிழை தப்பியிருந்தால் அவளது 'கன்னி உயிர்!' இந்நேரம் மிஸ்டர் எமதர்ம ராஜனின் பாசக்கயிற்றில் ஐக்கியமாகியிருக்குமே! 'ஐயையோ! தெய்வமே!' என்ற ஓலம் மீண்டும் அவளது நெஞ்சின் அடிவாரத்தினின்றும் எதிரொலிக்கத் தொடங்கியது.

'ஐயையோ தெய்வமே!'—இந்தப் பல்லவிதான் அவளுக்குப் பாடமோ? நெஞ்சுருக, நினைவுகள் பெருக, சிலையாக மலைத்துப் போய் அப்படியே சிலையாக நின்று விட்டாள் பரிமளம். உள்வட்டமாகச் சுழன்ற அந்த

அழைப்பு—தெய்வத்தைக் கூப்பிட்டுக் கதறிய அந்த அழைப்பு அவளைத் தலை சுழலச் செய்திருக்க வேண்டும். நடைபாதை வாசிகளுக்கு மத்தியில் குருக்ஷேத்திரம் நடந்தது.

பரிமளம் கால்பாவி நின்ற இடத்தைச் சுற்றிச் சூழ பார்வையிட்டாள். தன்னையும் மீறியதொரு பாதுகாப்பான இடத்தில் ஒதுங்க நேர்ந்த விந்தையையும் அவள் உணர்ந்தாள். அவ்வுணர்வின் தலைவாசலில் நின்ற அவளுக்கு அப்போதுதான் தன்னுணர்வு சிலிர்த்த மாதிரித் தோன்றியது. 'எப்படியோ நான் தப்பி விட்டேன்' என்று மனத்திற்குள் எண்ணிக் கொண்டாள். அவ்வெண்ணம் கடுகத்தனை நிம்மதியை யாவது கொடுத்ததா? இல்லை, 'எந்த நிம்மதியும் இனிமே எனக்கு வேண்டாம்; தேவையும் இல்லை!' என்று ஆங்காரத்தோடுத் தேம்பினாள் குமரிப் பெண்.

செக்கச் சிவந்திருந்த வலது கை விரல்களில் ஈரம் படர்ந்ததை அறிந்தாள். கண்களைத் தாழ்த்தினாள் கண்ணீர்த் துளிகள் சில விரல்களைத் தஞ்சமடைந்து இருந்தன. என்ன தோன்றியதோ, அவசரம் அவசரமாக அத்துளிகளை புடவை முன்றானையைக் கொய்து துடைத்தெடுத்தாள். இளஞ் சிவப்பு நிறம் பூத்த ரோஜா மடல்களில் விளிம்பு கட்டி முத்தம் கொடுக்குமே பனிமணிகள் அம்மாதிரி, அந்த நைலக்ஸ் முந்தியின் ரோஜாப்பூக்களில் அவளுடைய சொந்தக் கண்ணீர்த் துளிகள் பரவிக் கிடந்தன.

ஏதோ ஒரு காரின் பயங்கரமான 'ஹார்ன்' சத்தம் அவளை எச்சரித்தது. பயத்துடன் அவள் மேல் வசமாக ஒதுங்க முனைந்தாள். சுவர் இடித்தது. பாங்குச் சுவர் வலிக்காதா, பின்னே முதுகைத் தடவி விட்டுக் கொண்டாள். அவளையும் மீறிய நிலையில் அவள் சிரித்து விட்டாள்.

குமாரி பரிமளத்துக்குச் சிரிக்கக்கூடத் தெரிகிறதே...?

'அடிமைப்பெண்' சிரித்தாள்!

பதட்டத்தோடு தலையை இறக்கி, தன்னைத்தானே கூர்ந்து பார்த்துக் கொண்டாள் அவள். பகீரென்று துடி; சரிந்து விழத் துடித்துக் கொண்டிருந்த சேலை மேலாக்கைச் சரி செய்து கொண்டாள்.

...ப்பிடு தொலைவில், சீனத்துக் கடைவீதி காட்சி அளித்துக் கொண்டிருந்தது.

பாரிமுனைக்கென்று இப்படியொரு கம்பீரமான எழிலா?

ஏதேதோ நினைவுகள் வீம்பு பிடிக்கும் பாலகனைப் போல முரண்டு பிடிக்கத் தொடங்கி விட்டன. சிடு மூஞ்சித் தாய் அமைதிபிழந்து குழந்தையின் பண்டை யில் ஓங்கி அடிப்பது மாதிரி அவள் ஆனாள். அடிபட்ட நினைவுகள் உள்ளுக்குள்ளாகச் செருமின. தென்புறம் நோக்கி அடிபெடுத்து வைத்தாள். 'தெய்வமே! இனி என் கதி என்ன?' கேள்வியைச் சொடுக்கினாள். ஆனால், விடை சொல்லத் தெரிந்த தெய்வம் ஏனோ அவள் முன் தரிசனம் கொடுத்து விடை கூறவில்லை. சற்றுமுன், ஆறுமுகனைக் கையெடுத்துக் கும்பிட்டுக் கண்களைத் திறந்தவுடன் தென்பட்ட கிழவர் புண்ணியகோடியின் உருவம் அவள் மனக் கிழியில் சித்திரமாகி நின்றது. சித்தம் தடுமாறினாள். சித்தம் கலங்கி, 'ஐயையோ, தெய்வமே!' என்று மனம் கதறிய வண்ணம் ஓடிவந்த சம்பவத்தை அவள் மறந்து விட்டாளோ?

எதை மறப்பாள் அவள்?

எதை நினைப்பாள் அவள்?

நினைவும் மறதியும்தான் படைப்புக் கடவுளின் பகடைக் காய்களோ?...

❦ ❦ ❦

"ஆம்; கீழ்ப்பாக்கம்தான் இனி என்னோட அடுத்த படையெடுப்புக் கேந்திரம்!" அநீதிக்குப் பாடம் சொல்லிக் கொடுக்காமல் உறங்க மாட்டேன்! ஆமாம்!...இவ்வாறு பரிமளம் ஒரு முடிவுக்கு

அம்முடிவின் ஆரம்பம் போலவும், ஆரம்பத்தின் முடிவு போலவும் பலதரப்பட்ட நினைவுகள் அழுகு காட்டியும், அலைக்கழித்தும கிளர்ந்தெழுந்தன. அந்நினைவுகளின் பரிணாம மாற்றத்தின் காரணமாக, அவள் ஒரு விநாடி சித்தம் இரங்கி நின்றாள். குதிரைப் பந்தயத்தில் எடுத்த எடுப்பில் பெருந்தொகையைக் கோட்டைவிட்ட செல்வந்தன், அடுத்த முயற்சியில் பணமும் கையுமாக சபலம் தட்டி நிற்பானே, அதுபோல அவளது மன நிலையும் மலர்ந்தும் மலராத நூதனமான ஒரு நப்பாசை யோடு இயங்கத் தலைப்பட்டது.

உடனே அவள் நாசூக்காகக் கண்களைத் துடைத்துக் கொண்டாள். காதளவோடிய கயல் விழிகள் கரைமீன்களாகத் துடித்துக் கொண்டிருந்தன.

மனம் ஒருநிலைப் படவே மாட்டாதோ?—'மிஸ்டர் அதிவீரராம பாண்டியன்!'—அவளது உள்மனம் நெடு மூசெறிந்தது. காலம் அவளது கழலடியில் தஞ்ச மடைந்து கனவின் கதைகளை நினைவூட்டியது. 'எத்தனை ஆவலோடு மிஸ்டர் பாண்டியனைச் சந்திக்க மாம்பலத்திலேயிருந்து இரவு புறப்பட்டேன்! ஆனால் நடந்தது?...புயல்!...பிறகு? நல்ல வேளை, தோழி தமிழ்ச் செல்வி புகல் அளித்தாள். இப்போது ஒடிந்த உள்ளத்தோடு திரும்புகிறேன்!...தெய்வமே! தாயே!'

பரிமளத்தின் நெஞ்சில் அவள் தாய் தோன்றினாள். 'அம்மா!...' விழிகள் நிரம்பின. 'உன் மகளுக்கு நேர்ந்த துர்ப்பாக்யத்தைப் பார்த்தாயா?...அம்மா, உன் மரணப் படுக்கையில் நான் விடுத்த சூளுரையை மறந்து விடுவேனா?...'அப்பா!'—கடவுளே!...'

மேனி நடுங்கிற்று

முருகன் கோயிலில் சந்தித்த பெரிய குருக்கள் அவளது மனக்கண்ணில் தோன்றினார். 'யார் இந்தக் குருக்கள்?...என்னை ஏன் கும்பிட்டார்?'—மனம் திசை திரும்பியது.

மீண்டும் அவள் மனம் "அப்பா!" என்று கூவியது. 'அப்பா!—அப்பாவுக்கு நான் செய்க

போவேன்?...என் அப்பாவை எப்படி, எங்கே கண்டு பிடிக்கப் போகிறேன்?...' அன்னையின் மரணப் படுக்கையில் தான் கொடுத்த வாக்கை—அந்தச் சபதத்தை நினைவு கூர்ந்தாளோ?... தவித்தாள்!...

"அப்பா!"—

சித்தம் பேதலித்த மாதிரி அவள் தனக்குத்தானே முணுமுணுத்தாள்.

இப்போது தொழிலதிபர் வீரபாகுவின் கம்பீரமான அந்த அன்பு உருவம் அவளது நெஞ்சரங்கிலே தோன்றியது! வீரபாகு ஐயாவைப் பார்த்துக்கூட நாள் ஆயிட்டுது!...ஐயோ, மிஸ்டர் பாண்டியன் அதிவீரராம பாண்டியன் என்னைப் பைத்தியமாக அடிச்சிட்டாரே? ஐயோ! அதனாலேதான் அவர் கீழ்ப்பாக்கத்துப் பங்களாவுக்குப் போகப் போகிறாரா?...தெய்வமே!...அம்மா!'

அகன்ற நெற்றியைச் சுற்றிலும் பூவிரல்களை இழைய விட்டாள். காற்றில் அலைந்து கண்களை மறைத்திருந்த சுருளலை படிந்த குழற்கற்றையின் முடி இழைகளைக் கோதிவிட்டுக் கொண்டாள். காதோரங்களில் இருந்த பூஞ்சை மயிர்த் துணுக்குகளையும் செம்மைப் படுத்தினாள். காது வளையங்களும் அவளது சோதனைக்கு இலக்காயின. வலது புறத்தில் சற்றே நெகிழ்ந்திருந்த மாரகச் சேலைப் பகுதியைச் சீர் செய்தன கோலவிழிகள். அடிவயிற்றின் சிவப்பு வண்ணம் மட்டும் லேசாகத் தெரிந்தது. மாரபகத்தில் மையம் அமைத்துக் கிடந்த—பூந்தொட்டிலிலே கண்மலரும் மழலையெனக் கிடந்த அந்தச் சங்கிலி டாலரை 'வாகு' பார்த்துச் சரிப்படுத்தவும் தவறவில்லை பரிமளம். கைவிரல்களை நகர்த்தினாள். ஆனால், அவளுள் ஏற்பட்ட இன்பக் கிளர்ச்சியின் இனிய அலைகள் மட்டும் நகர்ந்து விடக் காணோம்!

இடது கன்னத்தின் "திருஷ்டி மச்சம்" எவ்வளவு கவர்ச்சியோடு விளங்குகிறது!...

மீசை நரைத்தும் ஆசை நரைக்காத தொண்டு கிழவனின் உள்ளடங்கிய ஆசாபாசங்களைப் போல,

ணமை வெய்யில் காய்ந்தது. மந்தாரம் கவிழப் போகிறது மழையின் ஞாபகம் அவளை எங்கோ இட்டுச் சென்றிருக்க வேண்டும்! "இந்தத் தமிழ்ச் சமுத்ா யத்திலே அழகைப் போல, அன்பும் விலைபோக ஒரு வழியே கிடையாதா?"—ஒரு நினைவு, ஓராயிரம் நினைவுகளைப் பெருக்கி விட்டது. வெய் துயிர்ப்பு புறப் பட்டது. இனி, அவளால் எதையுமே நினைகக முடியாது!...மண்டை வெடித்துவிடும்; சிதறிவிடும்!...'

ஃ ஃ ஃ

தியாகராயநகர் பஸ் ஒன்று அசுரகதியில் ஓடிக் கொண்டிருந்தது.

அழகு குலுங்க அன்னநடை பயின்றாள் குமாரி பரிமளம். பசி வயிற்றைக் கிள்ளியது. கிள்ளுப் பட்டால, வலிக்காதா, என்ன? வலி மெல்லப் படர்ந்தது. கீழ்ப் பகுதியில் "தக்காளி ஜூஸ்" விற்றுக் கொண் டிருந்தார்கள்.

கறுப்புப் பணத்தைப் பதுக்கி வைத்திருப்பார்கள் பாருங்கள், அந்தப் பாவனையில், கவர்ச்சி கனிந்த சோளியின் உட்பகுதியில் ஒளிந்திருந்த பர்ஸைத் தொட்டுப் பார்த்துக்கொண்டாள் பரிமளம்; "ஓ, கே"!

பழரசக் கடையில் மனித ஈக்கள் மொய்த்துக் கிடந்தன. அவசர யுகத்தின் நாகரிகப் பிரதிநிதிகளாக ஈக்கள் வந்து கொண்டும் போய்க் கொண்டும் இருந்தன. "தமிழக அரசு பரிசுச் சீட்டு ஒரு ரூபாய்!... குலுக்கலுக்கு இன்னும் நாலே நாலு நாள் தான் இருக்கு!" என்ற எச்சரிக்கைக் குரல்கள் வியாபார நெளிவு சுளுவுகளோடு ஒலித்தன. பழரசம் அருந்தினால் தேவலாம் என்ற சபலத்தை அந்தக் கும்பல் மாற்றவே; அவள் மீண்டும் நடந்தாள்.

மஞ்சள் பூச்சுத் திகழ எதிர்ப்பட்ட தமிழ்ச் செல்வி ஓர் அரைச் சிரிப்பை நழுவ விட்டவாறு நடந்து சென்றதை அவள் கவனிக்க வில்லை.

"லிப்ஸ்டிக்" வழிய, 'ஸ்கர்ட்' நிரம்பி வழிய டம்பப் பையும் தானுமாகக் குறுக்கு மறித்து வந்தாள், ஓர் ஆங்கிலேய இந்தியப் பெண். பரிமளத்தின் பேரில் மோதப் பார்த்தாள். சமாளித்துக் கொண்டாள். கண்களை நிதானமாக நிலைநிறுத்தினாள் ஆச்சரியக் குறியும் வினாக் குறியும், சாகஸம் சுழித்திட்ட அந்தக் கண்களிலே விளையாடியது, "ஹல்லோ பரிமளா!... சௌக்கியமா?...யூ ஆர் நௌ ஆல்ரைட்?..." என்று க்ஷேமலாபம் விசாரித்தாள். உடல் நலனிலும் லாப நஷ்டக்கணக்கு பார்க்கப்படுகிறதே!...

பரிமளம் சுய உணர்வை மீட்டுக் கொண்டு, "எஸ்—மிஸ் ஸ்டெல்லா தாஸ்!...சுகம்தான்!" என்று முத்துக்களை காட்டி, விடை மொழிந்தாள். குறுக்குப் பாதையில் போலீஸ் துணையுடன் கடந்து சென்ற ஜனங்களோடு தானும் இணைந்து அப்பால் கடந்து சென்றுவிட வேண்டுமென்ற ஆதங்கம் அவளைப் பிடரி பிடித்துத் தள்ளியது. ஆனால் அந்த அந்நியப் பெண் அவளை லேசில் விட்டு விடவில்லை. "வா, பரிமளா!" என்று சொல்லிக் கொண்டே, அவளைக் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு போய், பழரசக் கடையின் முன்னே நிறுத்தி விட்டாள்.

'டொமாட்டோ ஜூஸ்—டு...! ஐஸ் போடுப்பா!" என்று ஆணை பறப்பினாள். உதட்டுச் சாயம் வழிந்து கொண்டிருந்த பிரக்ஞையே அவளுக்கு அற்றுப் போய் விட்டது போலும்!

கண்ணாடித் தம்ளரை ஏந்தினாள் ஏந்திழை. வெட்கத்தோடு கனி இதழ்களைப் பொருத்தினாள். கனிச் சாற்றை உறிஞ்சத் தொடங்கினாள், பரிமளம்.

"அம்மா, இந்த லாட்டரிச் சீட்டு அசல்தானுங் களே? ஒரு காந்தி ரூபா குடுத்து வாங்கினேன்!" என்று 'கையம்' பாடி—பாட்டுப் பாடி அல்ல—கையம் பாடி, கையில் இழையப் பயந்த அந்த லாட்டரி டிக்கெட்டை நீட்டினான், அந்தக் குஷ்டரோகிப் பிச்சைக்காரன்.

பரிமளம் மனம் இரங்கினாள். ஆனால், ஸ்டெல்லா தாஸ் அந்தக் குஷ்டரோகியைக் கையைப் காட்டியே விரட்டி அப்புறப்படுத்தி விட்டாள்! "சே! அசிங்கம்!" என்று திட்டினாள்.

இன்னும் பாதி கிளாஸ் பாக்கி.

பிச்சை கேட்டு இரு சிறுவர்கள் வந்தார்கள்.

"இந்திய நாட்டின் ஏகபோக உரிமையாக நிலவி வரும் வறுமையை அகற்றியாக வேண்டும். இப் பணியில் நம் ஒவ்வொருவருக்கும் பங்கு உண்டு என்பதை நாம் ஒவ்வொருவரும் உணர வேண்டும்!"

ஜவஹர்லால் நேருஜியின் பேச்சுக் குறிப்பு பரிமளத்துக்கு நினைவில் முட்டியது. பர்ஸை இடது கையால் எடுக்க முற்பட்டாள். ஆனால் இப்போது, ஸ்டெல்லா முந்திக் கொண்டாள்.

அதைச் சிறுவர்கள் "ரொம்ப டாங்க்ஸ்!" என்று நன்றி சொல்லிவிட்டு நகர்ந்து விட்டனர்.

"எங்கே இருக்கே?" என்று கேட்டாள் ஸ்டெல்லா தாஸ்.

"இங்கேதான்," சிரித்தாள் பரிமளம்.

ஸ்டெல்லா தாஸும் கூடவே சிரித்தாள்.

அப்போது 'ஹெரால்ட்' கார் ஒன்று அவர்கள் நின்ற இடத்தின் ஓரமாக வந்து நின்றது.

"பரிமளம், இனி நான் வெறும் ஸ்டெல்லா ஆயிப் போறேன்!" என்றாள் ஸ்டெல்லா தாஸ்.

நெருப்பைத் தீண்டியவளாகப் பதைத்தாள் பரிமளம். அவள் காரை நோக்கினாள். மறுகணம், தீண்டிய நெருப்பு நெஞ்சில் கொட்டி விட்டாற் போன்று துடிதுடிக்கலானாள்! மிச்சம் மீதியிருந்த தக்காளிச் சாற்றோடு கண்ணாடித் தம்ளரைத் தட்டுப்

பலகையில் பதட்டத்தோடு வைத்தாள். ஓரக்கண்ணால் அந்தக் காரைப் பார்வையிட்டாள்.

முதுகைக் காட்டியபடி, கம்பீரமான ஒயிலுடன் நடந்து கொண்டிருந்த அந்த நவநாகரீக இளைஞனின் காலடியில் அவனிடமிருந்த டைரியிலிருந்து நழுவி விழுந்தது கடிதம் ஒன்று.

இக்காட்சியைக் கவனிக்கத் தவறவில்லை பரிமளம் "நான் அவசரமாகப் போகவேணும் மிஸ் ஸ்டெல்லா, அடுத்த தடவை நாம் ரெண்டு பேரும் மகிழ்ச்சிகரமான சூழலிலே சந்திப்போம்" என்று ஆங்கிலத்தில் சொல்லி விட்டு விடை பெற்று, ஓர் அரைக்கணம் ஏனோ நிலை கலங்கி நின்றாள். இப்போது 'சூட், பாண்ட்' திகழ நடந்து சென்ற அவ்விளைஞன் அவள் பார்வையில் தென்படவில்லை. நெடுமூச்செறிந்தாள், நெஞ்சம் கொதித்தது. 'மிஸ்டர் அதிவீரராமபாண்டியன்!'... ஊம்!—அவள் சுபாஷ் சந்திரபோஸ் நெடுஞ்சாலையைக் கடக்க எண்ணி நடக்க முயன்ற இந்நேரத்தில் மீண்டும் காட்சி கொடுத்தது அந்த உருவம்

கடவுளா அது?

இல்லை!

"மிஸ்டர் பாண்டியன்!..."

பரிமளம் பெருமூச்சை வெளியேற்றினாள்!

மலர்ந்தும் மலராத பூவாக நினைவுகள் சிமிட்டி யதோ?

அந்தக் குஷ்டரோகிப் பிச்சைக்காரன்! "—டாட்ஜ்" காரை விழுங்கி விடுகிற பாங்கிலேயே நின்று கொண் டிருந்தான், பாவம்!

குமாரி பரிமளம் பாதங்களைப் பெயர்த்து வைத்தாள். அப்போது, காலடியில் ஏதோ பின்னிக்

கிடைக்கவே, குனிந்தாள், சரிந்து விழுந்த சேலையை இடது தோளில் கொய்து போட்டவாறு, தலையை நிமிர்த்தினாள். இப்போது, அவளது பூங்கரங்களில் கசங்கிய கடிதமொன்று இருந்தது. பிரித்தாள், மூச்சு நின்றுவிடும் போலிருந்தது.

"அன்பிற்குரியவரே!

அதிவீரராம பாண்டியரே!

அஞ்சலிகள் ஆயிரம், ஆயிரமாயிரம்!

அடியாளை மறந்துவிட மாட்டீர்களே?

நினைவூட்டல் அல்ல இது. தூய நெஞ்சப் பதிவு முடங்கல் இது!

நாம் சந்திப்போம் மீண்டும்!

மெரினா நம்மை அழைக்கிறது.

காந்தி சிலை!...

நினைவிருக்கட்டும்.

பிற நேரில்.

தங்கள் அன்பின் உயிர்
பரிமளம்"

பிரித்ததைத் தாறுமாருக மடித்து, தன்னுடைய சோளிக்குள் திணித்தாள். ஊடுருவிப் படர்ந்த இன்பக் கிளுகிளுப்பின் சுகத்தில், கண்ணீரை மறந்து; வெகு டீபமாகக் குறுக்கே கடந்தாள்.

∴ ∴ ∴

தியாகராய நகர் பஸ் பரிமளத்தையும் சுமந்தது.

பரிமளத்துக்குத் 'திகீர்' என்றது!

பஸ் புறப்பட்டது.

ட்ரான்ஸிஸ்டரிலிருந்து "எலந்தைப் பழம் பாட்டு" மிகமிக மெல்லிய தொனியில் இழைந்து கொண்டிருந்தது.

சுற்றிலும் பார்வையை மேயவிட்டாள் பாவை.

அவளுக்குப் பின்புறமிருந்த ஆசனத்தில் கிழவர் புண்ணியகோடி குருக்களும் அவரது அருமந்தப் புதல்வன் சுந்தரேசனும் வீற்றிருந்தார்கள்!...

# 3. மதயானை

அதிசயங்கள் இல்லையென்றால் வாழ்க்கை சுவைக்காது, ருசிக்காது என்று விதிக்கப்பட்டுத் தானோ என்னவோ, அதிசயங்கள் விதியாக—வினையாக உருவாகின்றன; அல்லது உருவாக்கப்படுகின்றன!

பஸ் ஓடிக் கொண்டிருந்தது!

கண்மூடி, கண் திறக்கும் நேரத்திற்குள் பரிமளம் தவித்துப் போய்விட்டாள். 'நான் ஏன் சுற்றுமுற்றும் பார்த்துத் தொலைத்தேனும்?'' என்று தன்னைத்தானே நொந்து கொள்ளவும் முனைந்தாள்! 'சிவனே!' என்று இருந்த இடத்திலேயே கண்களை இழுத்துப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருக்கக் கூடாதா என்றும் வருந்தினாள். புண்ணியகோடி குருக்களும் அவரது செல்வ மைந்தன் சுந்தரேசனும் இன்னமும் அவளது மனத் திரையில் படம் காட்டிக் கொண்டுதான் இருந்தார்கள். மனத்தைத் திசை திருப்ப எண்ணி, விழிகளை வேறு திசைக்குத் திருப்பி விட்டாள்.

என்றாலும், அவள் பார்வை சென்ட்ரல் ஸ்டேஷனின் பரபரப்புக் கொண்ட எழிலிலே ஒட்டவில்லை. ஆனால் மனம் மாத்திரம் அவ்விரு புண்ணியவான்களின் உருவக் காட்சியில் ஒட்டி விட்டது. வேண்டாததை விரும்பிச் செய்யும் குழந்தை மனம்கூட அப்படித்தான்!

"டிக்கட், ப்ளீஸ்!"

கண்டக்டர் மீண்டும் குரல் கொடுத்தான்.

கட்டெறும்பு ஊர்ந்த மாதிரி அப்போதுதான் அவளுக்கு பூதலத்தின் நினைவு வந்தது உடனே, நயமானதொரு லாகவத்தோடு கோலமதர் விழிகளை மார்புக்கு நேராக இறக்கினாள்; எம்பித் தணிந்தவாறு இருந்த சோளியின் உட்புறத்தே கைவிரல்களை நுழைத்து, பர்ஸை பதட்டத்துடன் எடுத்தாள்

முப்பது காசை எடுத்து கண்டக்டரிடம் நீட்டினாள் பரிமளம் "மாம்பலம் ஒரு டிக்கட்!" என்று தெரிவித்தாள். குரல் கம்மியிருந்தது. நீட்டிய டிக்கெட்டை கை நீட்டிப் பெற்றுக் கொண்டாள். நுண்கலைச் சிற்பி செதுக்கியதை நினைவூட்டும் வண்ணம அழகு கொண்டு விளங்கிய எடுப்பான மூக்கின் நுனியில் முத்தார்ந்திருந்த வேர்வை முத்துக்களை வருடி விட்டாள். புடவைத் தலைப்பைச் சீர் செய்தாள். உட்கார்ந்த வண்ணம் கம்பிகளைப் பற்றியபடி, அவள் வேடிக்கை பார்ப்பதில் மனத்தைச செலுத்தினாள்.

ஆனால் அந்த மனமோ கழிந்த காலத்தை நினைவூட்டித் தொலைத்தது. "மூதேவிச் சனியன்'?—முணுமுணுப்புதான் மிச்சம்! யாரைத் திட்டப் போகிறாள்? பாவம் தனக்குத்தானே திட்டிக் கொண்டாள். அவ்வளவுதான்!

எண்ணினாள். "நான் இப்போது மாம்பலத்துக்குப் போகிறேன்! மிஸ்டர் அதிவீரராமபாண்டியன் நல்வாக்குக் கொடுப்பார்னு ஆசையாக வந்தவள், இப்போது மாம்பலத்துக்கு நிராசையோடு போய்க் கொண்டிருக்கேன்! பெரிய எழுத்தாளர் பாண்டியன் ஆனா, அவர்...?"—மாம்பலத்தின் நினைவிலே அந்தப் பெருமனையும் அந்தச் சிறுகுடிலும் நிழலாடின!...

சீக்காரன் வெடிகுண்டு வெடித்த மாதிரி திடுதிப்பென்று தும்மல் சத்தமொன்று வெடித்தது. பஸ்

பிரயாணிகள் எல்லோரும் பயந்து போய்த் திரும்பிப் பார்த்தார்கள்.

பரிமளம் அவளையும் மீறிய வகையில் பின்புற மாகத் திரும்பிப் பார்க்க வேண்டியவள் ஆனாள்.

முதியவர் புண்ணியகோடி குருக்களைத் தவிர இவ்வளவு பெரிதாக வேறு யாரால் தும்மல் பறிக்க முடியும்?

அவளுக்குச் சிரிப்பு வெடித்தது. அந்தம் நிறைந்த கனி இதழ்களில் அழகான சிரிப்பு, அழகின் சிரிப்பாக ஊறியது.

அருகிலிருந்த பெண் ஒருத்தி இப்போது முதன் முதலாக பரிமளத்தின் கண்களைச் சந்தித்து, தன் பங்கும் குறைந்துவிடக் கூடாதேயென்று சிரித்தாள். "என்னைப் போல நீங்களும் பயந்திட்டீங்க போல!" என்று ஈளினமான தொனியில் கேட்டாள்.

பரிமளம் சிரிப்பை மறந்து விடாமல், "ஊம்!" என்று தலையை உலுக்கினாள் இடது பக்கக் கன்னக் கதுப்பில் ஒட்டி உறவாடி 'திருஷ்டி மச்சம்' கவர்ச்சியோடு விளங்கியது. கொண்டையில் இருந்த மல்லிப் பூச்சரத் துணுக்குகள் சில அவள் மடியில் உதிர்ந்து விழலாயின. உதறி விட்டாள். கைவளைகள் குலுங்கி அடங்கின.

தும்மல் சத்தம் கேட்டதும், பின் வசமாகத் திரும்பிய நேரத்தில், எல்லோரையும் விட்டுவிட்டு, குருக்கள் கிழவர் தன்னை வெறித்துப் பார்த்த விசித்திரத்தை இப்போதுதான் பரிமளம் நினைவு கூர்ந்தாள்! 'திக்'கென்றது. 'ஏன் அந்தக் கிழவர் என்னை அப்படிப் பார்க்கிறார்?'...கேள்வி விசுவரூபம் எடுக்கத் தலைப்பட்டது. எல்லாம் வல்ல வேல்முருகன் சந்நிதியில் பிரார்த்தனையை முடித்துக் கொண்டு, நயனங்களை மலரத் திறந்த நேரத்தில், அவள் சந்தித்த புண்ணியகோடியின் கண்களை எண்ணிப் பார்த்தாள். அப்போது விளைந்த அதிர்ச்சியையும் அவள் மனம் அப்படியே

பதிவு செய்து காட்டியது. உள்ளம் ஏற்படுத்திய புல்லரிப்பில் மேனி நடுங்கியது. நடுக்கத்தில் விளைந்தது பயம். அதன் பலனாக, விழிகள் பொடித்தன. 'நான் ஏன் அந்தக் குருக்களைக் கண்டதும் அப்படி அலறிப் புடைத்துக் கொண்டு ஓட்டமெடுத்தேன்?' கேள்விக்கு விடை தெரியவில்லை; புரியவில்லை. ஆனால் விழிமுனைகள் கசிந்தன. அக்கசிவில் ஏதேதோ நினைவின் நிழல்கள் ஒளிப்புள்ளிகளென ஏடு விரியத் தொடங்கின; 'ஈஸ்வரா...!'

பஸ் அண்ணா சிலையைத் தாண்டியது.

பரிமளம் வாய்ப்பு நேரும் போதெல்லாம் அதைப் பார்க்கத் தப்புவது கிடையாது. ஆனால், இன்று தவறி விட்டாள்.

இதயத் தடாகத்தின் அடித்தளத்தில் சுழி பரப்பிய ஏக்கத்தை அடக்கிக் கொண்டு—அடக்க முடியாமல் பொங்கிக் கொண்டிருந்த கண்ணீரை வெகு நயமான—நாகரிகமான பாங்கோடு துடைத்துக் கொண்டாள் அவள். வெளி உலகத்தை வேடிக்கைப் பார்த்து விட்டுத் திரும்பியவள் போன்று கண்களை நேர்வசமாக நிறுத்தியபடி, நிமிர்ந்து உட்காரலானாள். எதிர்ப் புறத்தில் ஒரு கட்டளை காணப்பட்டது. சிரிக்க முயன்றாள் பரிமளம்.

இடுக்கண் வரும்போது, சிரிக்க வேண்டுமாம்!—ஆணை இது. பின் சிரிக்காமல் இருக்கலாமா? இருக்க முடியுமா?

ஃ ஃ ஃ

பஸ் ஓடிக் கொண்டேயிருந்தது!

காலத்திற்கு மட்டுந்தான் ஓடத் தெரியும் என்பது இல்லையே!

"ஸிஸ்டர்...'

"ஸிஸ்டர்...!"

காசி முனைத் தவம் செய்தாளாம் உமையவள்—மஹேஸ்வரனுக்காக!

பரிமளம் என்ன தவம் செய்தாளோ? அருகில் கதைப் புத்தகமும் கையுமாக லயித்திருந்த பெண் இரண்டாவது தடவை அலட்டியதை, அவள் முதல் தடவையாகக் கேட்டதும், சரியென்று பரவியதோர் உள்ளுணர்வுடன், பக்கவாட்டில் திரும்பினாள்.

"என்னையா அழைச்சீங்க, ஸிஸ்டர்?"

"பின்னே, யாரை அழைச்சேனும்?...என் பக்கத்திலே ஒரேயொரு ஸிஸ்டர்தானே உட்கார்ந்திருக்குது?"

'ஸிஸ்டர்' என்னும் அந்த ஆங்கிலப் பதம், தமிழில் வடிவு கொண்டு, பாசத்தின் பதச்சோறாக அவள் நெஞ்சில் விளையாடத் தொடங்கியது. 'உண்மையான அன்பை—பாசத்தை—பரிவை அனுபவிச்சு எத்தனை நாள் ஆகிவிட்டது!' அவள்—பரிமளம் இயல்பாகவே புன்னகை செய்தாள்.

"ஓ...அப்படிங்களா?" என்றாள்.

"எஸ்!...உங்களைத்தான் கூப்பிட்டேன். பிரமாதமாகச் சிந்தனையிலே மூழ்கியிருந்தீங்களேன்னு கருதி, உங்களோட கற்பனைக்கு ஒரு 'சேஞ்ச' கொடுக்க நினைச்சுத்தான் அழைச்சேன், சிஸ்டர்!'

"ஒன்றுமில்லை, பை தி பை...என் பேர் பரிமளம்!"

"அப்படியா? சந்தோஷம். எதையோ பறிகொடுத்த மாதிரி சதா உங்க முகம் சோகத்தில் தவிசசுக்கினு இருந்திச்சு; நான் நோட் பண்ணிட்டேன்!"

'இஸ் இட்?—ஓ...மை குட்னெஸ்!" தவிப்பு அடங்கக் காணோம், பரிமளத்தின் தரப்பில்! என்றாலும், நம்பிக்கைத் துரோகம் செய்து விடாமல், அவளுக்கு அனுசரணையாகக் குறுஞ்சிரிப்பு நிலைத்திருந்தது. எழுத்தாளன் உலகத்தைப் படைப்பவன். ஆனால், அவனுக்கு உலகமே மறந்து விடுமாம்! சதாசர்வ

காலமும் சிந்தனையிலேயே மூழ்கி விடுவாளும்!... அப்படித்தான் நானும் ஆகிவிட்டேன் போலிருக்கு" என்று அவள் மாதிரியே சன்னக் குரலெடுத்து உரைத்தாள் பரிமளம்.

கம்பியிலிருந்த கைப்பிடி வாரைப் பற்றிக்கொண்டு நின்ற 'அல்ட்ரா மாடர்ன்' இளவட்டம் ஒன்று இப்படியா அவளை முறைத்துப் பார்க்கும்? அழகுக் கன்னிகளை அவன் இதுவரையிலும் பார்த்ததே இல்லையோ, என்னவோ? இதுவரை, எந்தக் காட்டில் அஞ்ஞாத வாசம் செய்தானோ, என்னவோ?

பக்கத்து ஆசனத்தில் ஒயிலாக வீற்றிருந்த பெண் 'கட கட'வென்று சிரித்தாள்.

"அப்படியா?...அப்படியென்றால், உங்களுக்கும் கதை எழுதத் தெரியுமோ?" என்று கேட்டாள். கேட்டுவிட்டு அவள் பரிமளத்தை விநய பூர்வமான உன்னிப்போடு கூர்ந்து நோக்கினாள். பரிமளத்தின் இடது கன்னத்திலிருந்த அந்த மச்சம் அவளை வெகுவாகக் கவர்ந்தது. 'பெண்ணுக்குப் பெண் மயங்கும் அழகு அல்லவா பரிமளத்தோட அழகு"

பரிமளம், கேட்கப்பட்ட கேள்விக்கு விடையாக தலையை உலுக்கி, "அந்தப் பாவத்தை மட்டும் நான் பழகிக் கொள்ளவில்லை" என்று அழுத்தமான தொனியில் ஏமாற்றங்களின் ஆற்றாமையோடு வெளியிட்டாள்.

"அழுவதா, சிரிப்பதான்னு எனக்கு விளங்கல்லே, பரிமளம்" என்று சொன்னாள் அந்தக் கறுப்புத் திராட்சை அழகி. "என் பெயரையும் நீங்க அறிஞ்சுக்கிட விரும்பாமல் இருக்கமாட்டீங்கன்னு எதிர்பார்க்கிறேன்" என்றும் தெரிவித்தாள்.

"சொல்லுங்க சகோதரி. சொல்லுங்க; நானே கேட்கலாம்னு துடிச்சுக்கிட்டிருக்கேன். அதுக்குள்ளே வேறு என்னமோ சிந்தனை!"

"பேஷ்! சொல்லிடுறேன். என் பேர் தேவ மனோஹரி!...தேவமனோஹரி ராகம் என்றால் எனக்கு ரொம்பப் பிடிக்கும்"

"ரொம்ப அழகான பெயர். உங்கள் அழகுக்கு கன பொருத்தம்"

"கேலி பண்ணலியே? நான் ஒண்ணும் நம்பர் கறுப்பு ஆச்சே?" மஞ்சள் பூசசை அழுத்தி விட்டு ஒளிர்ந்தது வாசனைப் பவுடர்!

"அந்தக் கறுப்பு, உடலின் நிறத்தை ஒட்டியது. ஆனா, உங்களோட அழகு சிவப்பு ரோஜா. உங்க மனசு படு வெள்ளை. நான் ஒரு செகண்டிலே உங்களை படிச்சுக்கிட்டேனாக்கும், தேவமனோஹரி ஸிஸ்டர்."

தேவமனோஹரி வாய் கொள்ளாமல் புன்னகை புரிந்தாள்.

ஒற்றைக்கல் மூக்குத்தி பிரகாசித்தது. "ஓஹோ! அப்படியா? என்னை ஸ்டடி பண்ணிட்டீங்களா அதுக் குள்ளே?...என கதை புதிசு; அது மட்டுமில்லே. ரொம்பவும் பெரிசு. சுபம் போட முடியாத ஒரு தொடர்கதை என்னுடையது. சரி, சரி. அதைப் பத்தியெல்லாம் மற்றொரு சமயம் பேசுவோம். வாய்ப் பேச்சில் மறந்து விடப் போகிறேன். ஆமாம். என்னுடைய மனசைப் படிச்சிட்டதாகச் சொன்னீங் களே, அப்படியென்றால் உங்களுக்கு கதை எழுத வரும் போலத் தோணுதே?" என்று இடைமறித்துப் பேசினாள் தேவமனோஹரி.

பரிமளம் சிரிப்பதற்காகப் போதையூட்டும் தன்னுடைய உதடுகளைப் பார்த்தாள்.

"கதை எழுத ஆசை இருக்கிறது. நேற்று ஒரு விஷயம கேள்விபபட்டேன். ஒரு தய; அவள் கெட்ட நடத்தை உள்ளவள். அவளுக்கு ஒரு ஆண் குழந்தை. அந்த வாது போகிற ஆடவர்களைப பார்த்து விட்டு 'அம்மா, இவ்வளவு பேர் வர்றாங்களே? இதுலே யார்

அம்மா, என்னோட அப்பா?' என்று சந்தேகம் கேட்கிறது. உடனே தாய், மனம் உடைந்து தற்கொலை செய்து கொள்கிறாளாம். இந்த ப்ளாட்டை வைத்து நல்ல கதை எழுதி விட மனம் துடிக்கிறது.”

மனம் ஒரு மதயானை!

உணர்ச்சிகளின் உத்வேகம் தூண்டப் பெற்றுத் தன்னை மறந்து—சூழலை மறந்து பேசினாள் குமாரி பரிமளம். உறைத்த வெய்யில்கூட அவளுக்கு உறைக்கவில்லை போலும்!

ஆர்வம் பொங்க எதையோ சொல்லத் துடித்தாள் தேவமனோஹரி!

பஸ் நின்றது; பிறகு ஓடத் தலைப்பட்டது!...

# 4. கரு ஒன்று

காலத்திற்கு மட்டும்தான் ஓடத் தெரியுமோ?

பஸ்ஸுக்கும் ஓடத் தெரியும்!

உருப் பெற்றுச் சுழன்று கொண்டிருந்த இலக்கிய உலகம் தோழிமார் இருவரையும் சுற்றிச் சுழன்று கொண்டேயிருந்தது.

பரிமளம் தன் தோழியின் துடிப்பை உணர்ந்தாள் சிரித்தாள். “ம்...சொல்லுங்க, மனோஹரி!”

கறுத்த தன்னுடைய கழுத்தில் இழைந்த ஆபரணங்களை நெருடிவிட்டவளாக, பள்ளத்தில் பாயும் நீர்போல குறுக்கே பாய்ந்து பேசினாள், தேவமனோஹரி

“பரிமளம், நீங்க இலக்கியத்தில் இவ்வளவு தூரத்திற்கு இன்டரஸ்ட் வச்சிருக்கிங்களே! அதை நான் வரவேற்கிறேன். ஏன்னா, இலக்கியத்திலே எனக்கும் உங்க மாதிரி ஒரு ஆர்வம் உண்டு. அதை ‘வெறி

அப்படின்னுகூட நான் சொல்லிடணும் போலத் தோணுது. தமிழ் இலக்கியத்தில் எனக்கு இருக்கிற ஈடுபாடு. எனக்குக் கொடுத்து வருகிற ஒரு தனித் துணிச்சலை என்னோடே மலையாளச் சிநேகிதி அம்முக் குட்டி வெகுவாகப் பாராட்டும்! 'மனோஹரி, நீ ஒரு அதிசய ஜீவி', அப்படின்னு புகழும்!...''

இவ்வாறு சொல்லிவிட்டு, சிறு பொழுதுக்குக் கண்களை தியான நிலையில் மூடிவிட்டு, பின்னர், மூடிக் கொண்ட அக்கண்களை மறந்து விடாமல் திறந்தாள். மனோஹரி. ''உங்க ஆர்வத்துக்குக் குறுக்கே நான் நிற்கிறதாக நீங்க தப்பா எண்ணாமல் இருக்கும் பட்சத் திலே உங்ககிட்டே என் அபிப்ராயத்தைத் தெரியப் படுத்திறதுலே தப்பு எதுவும் இருக்காதுன்னு நினைக் கிறேன்!'' என்று பீடிகை போடலானாள் தேவ மனோஹரி.

''ஓ... தாராளமாகச் சொல்லுங்க. இனி நாம் ரெண்டு பேரும் உயிருக்கு உயிர்!'' என்று தூண்டுதல் கொடுத்தாள் கன்னிப்பூ.

''பரிமளம், நீ சொன்ன அந்தக் கருவை வச்சிட்டு மிஸ்டர் அதிவீரராம பாண்டியன் கதை எழுதினால், ரொம்பப் பிரமாதமாக இருக்கும். அவருக்கு இந்த மாதிரி பிளாட் கிடைச்சிட்டால், அப்படியே 'ரியாலிஸம்' பளிச்சிட ஒரு அழகான பிரச்னைக் கதையையே உருவாக்கிடுவார்!'' என்று கருத்துத் தெரிவித்தாள் தேவமனோஹரி.

''அதிவீரராமபாண்டியன்!''—இந்தப் பெயரைக் கேட்டதும், பரிமளம்—குமாரி பரிமளம் அரைக்கணம் மின் அதிர்ச்சி அடைந்தாள். பழைய உலகம் ஒன் றுக்குத் திரும்பி மீண்டாள். புதிய சஞ்சலத்தின் தலை வாசல்தான் அவளை வரவேற்கக் காத்திருந்தது. தோழியின் பேச்சு—அவளுக்கு இலக்கியத்தின் பாலுள்ள நாட்டம் அவளுக்கு வியப்பை அளித்திருக்க வேண்டும். மனம் என்னும் மதயானையை அடக்கி ஆள

அங்குசம் கிடைக்காமல் தடுமாறுபவளைப் போல— அல்ல, அங்குசத்தை விரும்பாதவளைப் போன்று, தேவ மனோஹரியின் அந்தப் பேச்சு அமைந்திருந்ததாகவே பட்டது. நிலைமையைச் சமாளிக்க வேண்டும். எனவே, அவள் பொய்யானதொரு இளமுறுவலை செம்பவள இதழ்க்கரையில் ஒதுக்கிக் கொண்டே சிநேகிதியை ஆழ்ந்து நோக்கினாள் பரிமளம்.

தேவமனோஹரியின் புடவை சரிந்து விழுந்து கிடந்தது. பொய் குவியல்களுக்கு மத்தியில் தனித்து நின்று ஒளியூட்டும் ஒற்றைத் தனி விண்மீனாக ஒரு மஞ்சள் தாலிக்கயிறும் காட்சியளித்தது! "தேவ மனோஹரி என் மாதிரி குமாரி இல்லை. கல்யாணமான குடும்பப் பெண்!"—இந்நினைவில் பூத்த மரியாதை யோடு அவளைப் புதிய பார்வை கொண்டு மீண்டும் உறுத்துப் பார்த்தாள் பரிமளம்.

தேவமனோஹரி இன்னமும் சுயப்பிரக்ஞை கொள்ளக் காணோம்!

மதுக்குடம் ஏந்திய மணமலராகத் திகழ்ந்தாள் தேவமனோஹரி.

உடனே, பதட்டம் மூள, தோழியின் சரிந்து விழுந்த 'ஷிபான்' பட்டுப் புடவைத் தலைப்பை இடது தோள்பட்டையில் எடுத்துப் போட்டாள் பரிமளம். பிறகு ஓரக்கண்ணால் பக்கவாட்டில் பார்வையைச் சாய்த்தாள். இன்னமும் அந்த நாகரீக இளைஞன் தேவ மனோஹரியை விழுங்கி விடுகிற மாதிரி வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான்.

"மனோஹரி...சகோதரி!"

"ஓ!..." என்று தன்னுணர்வு எய்தலானாள் தேவ மனோஹரி

பஸ் ஆயிரம் விளக்கைத் தாண்டி மடங்கியது.

தேவமனோஹரியின் மார்பில் சாய்ந்து விட்டாள் பரிமளம்.

கைப்பிடி வாரைப் பற்ற மறந்த அவ்விளைஞன் பரிமளத்தின் மண்டையில் இடித்துக் கொண்டான். குனிந்து முழங்கையைத் தடவி விட்டுக் கொண்ட போது, அவனது சட்டைப் பைக்கு வெளியே தலை நீட்டிய ஒரு சிறிய அட்டைத் துண்டில் 'இளஞ் சோழன்—நாடக நடிகன்' என்ற பெயர் விவரம் காணப் பட்டது.

சாய்ந்த கணத்திலேயே சமாளித்துக் கொண்டு எழுந்து, அழகாக அமர்ந்தாள் பரிமளம். அந்தப் பெயர் அறிமுக அட்டை அவள் மனக்கண்ணில் அச்சேறி விட்டது.

'பரிமளம், மிஸ்டர் அதிவீரராம பாண்டியனை உங்களுக்குத் தெரிந்திருக்க வேணுமே?"

மனச்சாட்சியில் சூடுபட்ட மாதிரி இருந்தது... "ஊஹூம்!" என்று பதில் மொழிந்தாள் குமாரி.

"அதிவீரராமபாண்டியனைச் சொல்லவில்லை. அவரது எழுத்துகளைச் சொன்னேன்."

"ஓஹோ! அப்படியா?..." பரிமளம் பேச்சை பாதியில் நிறுத்தினாள்.

"இன்றைக்கு தம்புச் செட்டித் தெருப்பக்கமாக வந்துகிணு இருந்தேன். எனக்கு வேண்டப்பட்ட ஊர்வசி வீட்டிலேருந்து திரும்பிகிணு இருக்கையிலே, பரிதாபத்துக்குரிய குஷ்டரோகிப் பிச்சைக்காரன் ஒருத்தன் ஹைதர் காலத்துப் பத்திரிகையிலே ஏதோ கதையைப் படிச்சுக்கிட்டு இருந்தான். யாசகம் போட்டுட்டு அவன் கையிலே பேச்சுக் கொடுத்தேன். "என்னைப்பத்தி தத்ரூபமான ஒரு கதையை அதிவீரராமபாண்டியன் என்கிறவர் எழுதியிருக்கா ருங்க, அம்மா. அந்தப் புண்ணியவானை நேருக்கு நேர் பார்க்கணும்னு ஆசை துளைக்குதுங்க. தாயே!"

அப்படின்னு சொன்னன். சிறுகதை மன்னர் அதிவீரராமபாண்டியன் பெயர் இப்ப ரொம்ப ரொம்பப் பிரபலமாகிட்டுது!—' பெருமை பிடிபடவில்லை. 'பிடி' யென அது திமிறியது.

பரிமளம் ஒரு புதிய கனவின் சபலத்தோடு, "சகோதரி, உங்களுக்கு மிஸ்டர் அதிவீரராமபாண்டி யனைத் தெரிந்திருக்குமே?" என்று கேட்டாள.

ஏக்கம், வெட்கம், சஞ்சலம் ஆகிய பல்வேறு உணர்வுகள் சங்கமிக்க, அவள் சொன்னுள் "இது வரை பார்த்தது இல்லை! நீங்களும் பார்த்திருக்க மாட்டீங்கண்ணுதான் நான் நினைக்கிறேன்!"

"ஆமாம்!" என்று தெரிவித்தாள் குமாரி பரிமளம். பொய்! எங்கேயோ சூடுபட்டாற் போன்று ஓர் உணர்வு ஊடுருவியது. நெஞ்சைத் தடவி விட்டுக் கொண்டாள்.

சலனம் இரு மருங்கிலும் விளையாட்டுக் காட்டி யதோ?

மறுபடியும், கர்ண கடூரமான அந்தப் பழைய தும்மல் கேட்டது.

தோழிமார் இருவரும் திசை திரும்பினார்கள்.

கிழவர் புண்ணியகோடி குருக்களும் அவர்தம் அருமந்தப் புத்திரசிகாமணி 'சுண்டு' என்கிற சுந்தரே சனும் எழுந்து நடந்து கம்பி வளையத்தைப் பற்றிய வாறு இறங்குவதற்குத் தோதாக நின்றார்கள்.

"ரொம்ப டைம் ஆயிட்டுதுடா, அம்பி. அவா... அதாண்டா மிஸ்டர் வீரபாகு பெரியவா நமக்கோசரம் பாவம், வெயிட் பண்ணிண்டிருப்பா நல்ல சமயத்திலே அம்பாஸிடர் மக்கர் பண்ணியிருக்கலேன்னு, இந்நேரம் ராஜா மாதிரி—ராஜாவும் இளவரசும் மாதிரி நாம ஜாம் ஜாம்னு போய் காப்பி குடிச்சிட்டு பேசிண்டிருப்போம். ட்ரான்ஸிஸ்டர் பத்திரம்டா, அம்பி" என்று உபதேசம் செய்தார் பெரியவர். பொடி டப்பாவைத் திறந்தார், அவர்.

தேவமனோஹரியும் பரிமளமும் சகட்டு மேனி யாகத் தும்மினார்கள்!

ஃ ஃ ஃ

'பவர் ஹவுஸ்' தங்கலில் பஸ் நின்றது.

"பரிமளம், என்னோடே நீங்களும் இங்கேயே இறங்கி விடுங்கள். ப்ரொட்யூஸர் ஒருவரைப் பார்த்து விட்டு, உடனே என்னோடே பங்களாவுக்குத் திரும்பிடலாம்" என்று சொல்லிக் கொண்டே டம்பப் பையையும் கதைப் புத்தகத்தையும் ஒரு கையில் இடுக்கிக் கொண்டு, நிதானமாக எழுந்தாள் தேவமனோஹரி

மெல்லவும் முடியாமல், விழுங்கவும் முடியாமல், திண்டாடிய பரிமளம், 'சிவனே' என்று புதிய சிநேகிதி யின் வேண்டுகோளை அரை மனத்தோடு அங்கீகரிக்க வேண்டியவள் ஆனாள்.

தோழிமார் இருவரும் விரைவு பாய்ச்சி இறங் கினார்கள்.

அவர்கள் இருவரையும் இமைக்காமல் பார்த்தவாறு நின்றார்கள், புண்ணியகோடி குருக்களும் சுந்தரே சனும்.

அருகில் காதலர்கள் இருவர் காதல் பேச்சு நடத்திக் கொண்டிருந்தார்கள்.

"பரிமளம் புறப்படலாமா?... அடடே மறந்து விட்டேன். முதலில் இதைப் பாருங்களேன். ஒரு சஸ்பென்ஸ் விடுபட்டு விடும்" என்று தளிர்ப் புன்னகை தவழ புதிர் போட்டவளாக, டம்பப் பையிலிருந்து ஒரு கடிதத்தை எடுத்து, அதைத் தோழி பரிமளத்தின் கரங் களில் ஒப்படைத்தாள் தேவமனோஹரி.

பரிமளம் அக்கடிதத்தை ஆவலோடு பார்த்தாள்.

இப்போது, குமாரி பரிமளத்தின் உடும்புப் பிடியில் சிறு கதை மன்னன் அதிவீரராம பாண்டியன் அகப் பட்டு விழித்துக் கொண்டிருந்தான்!

# 5. "அம்மா!"

'கெட்டும் பட்டணம் சேர்' என்பார்கள்.

உச்சிச் சூரியனுக்கு வேறு போக்கிடம் இல்லை போலிருக்கிறது.

பட்டணத்தில் காய்ந்து கொண்டிருந்தான்.

வெய்யில் என்றால், படு உக்கிரம்.

தேவமனோஹரிக்கு வேர்த்துக் கொட்டியது. வேர்வை முத்துக்களை வெகு பத்திரமாக ஒற்றி எடுத்தாள். முத்துக்கள் அல்லவா? நிதானம் தவழ்ந்த கவனம் இல்லையென்றால் முத்துக்கள் பறி போய்விடும் அல்லவா? நெற்றித் திலகத்தைச் சுற்றி பூ விரல்களைச் சொகுசான நளினத்தோடு இழைய விட்டாள் அவள் பிறகு, அவ்விரல்களைக் கண் விரிப்பில் ஊரச் செய்தாள். சிந்தூரப் பொட்டு கலைந்திருந்ததற்கு அடையாளமாக அவளுடைய கண்ணில் மசந்நிறம் பிசிறு தட்டிக் காணப்பட்டது.

"பரிமளம், என்னோட நெற்றிப் பொட்டு கலைஞ்சிருக்கான்னு பார்த்துச் சொல்லுங்களேன்" என்று கெஞ்சினாள்.

ஆனால், தோழியின் அவ்வேண்டுகோள் பரிமளத்தின் செவிகளில் ஏறியதாகத் தோன்றவில்லை எழில் தழைத்த அவளுடைய தலையின்மீது சுமை ஒன்று ஏறிக் கொண்ட உண்மை நிலையை—உண்மையின் நிலையை தேவமனோஹரி அறியமாட்டாள்!

"ஸிஸ்டர்!" என்று அவசரமாகக் கூப்பிட்டு, அவள் தோளைக் குலுக்கினாள் தேவமனோஹரி.

"ஆ!" என்று பரதவிக்கலானாள் குமாரி பரிமளம். சிநேகிதி குலுக்கிய குலுக்கலில் நழுவி விழுந்த

புடவைத் தலைப்பைப் பதட்டத்துடன் தற்காத்துக் கொள்ள வேண்டியவள் ஆனாள்.

"என்ன கேட்டீங்க, மனோஹரி?" என்று வினவினாள். நெற்றியில் புடைத்திருந்த பச்சை நரம்புகளைத் தடவி விட்டுக் கொண்டாள்.

தேவமனோஹரி பாங்குற நகை கக்கினாள். வெள்ளைக் கலை உடுத்திய அவளது கோலம், உடலின் கறுப்புக்கு விடப்பட்ட சவால் போல காட்சி தந்திருக்க வேண்டும்.

"வேர்வையைத் துடைச்சேன், அந்த அவசரத்திலே, என்னோட நெற்றிப் பொட்டையும் துடைச்சிட்டேனோ என்னமோ, தெரியலே. பார்த்துச் சொல்லுங்கன்னு கெஞ்சினேன். அவ்வளவுதான் சமாச்சாரம்" என்று மறுபடியும் சிரித்தாள்.

நாணம் பூத்த தளிர்ச் சிரிப்பு துலங்க, மீன் விழிகளை மெள்ள மெள்ள உயர்த்தி, தோழியின் நெற்றியை நோக்கினாள் பரிமளம். வேர்வை வழிந்து கொண்டுதான் இருந்தது.

"நகம் லேசாகப் பட்டுட்டுது போலிருக்கு. ஆனா, பார்க்க ஒண்ணும் அசிங்கமாய் இல்லே, சகோதரி." என்று ஆறுதல் கூறினாள். கடமை முடிந்தது என்கிற நிறைவோடு உள்ளங் கையைப் பார்த்தாள்.

பாவம், அதிவீரராம பாண்டியன் மூச்சு முட்டிய நிலையிலே விழித்துக் கொண்டிருந்தான்!

உள்நாட்டு முடங்கலின் தலைப்பில் இருந்த அதிவீரராம பாண்டியன் என்ற எழுத்துக்கள்—விதியின் எழுத்துக்கள் அல்ல. கையின் எழுத்துக்கள், அப்போது பரிமளத்தைச் சோதித்தனவோ, என்னவோ? அடியில் படிக்க வேண்டும் என்ற துடிப்பு மிகுந்தது.

ஆனால், ஏனோ, அவள் அவ்வாறு செய்யவில்லை. விளைந்த துடிப்பு தன்னுடைய உயிர் மூச்சையே

அடக்கி விடும் போன்றதொரு அச்சம் அவளை ஆட்கொள்ளத் தலைப்பட்டது.

விரிந்த கடிதத்தை மடித்தாள். பார்வையை அருகில் திருப்பியபோது புண்ணியகோடியும் அவரது மகன் சுந்தரேசனும் இன்னமும் நகராமல் நின்று கொண்டிருப்பதைக் கண்டாள். அச்சத்தின் மறு பகுதியில், இப்போது இனம் விளங்காத வேதனையும் கலந்தது—அற்ப சொற்பமாக அல்ல—இரண்டறக் கலந்தது!

தேவமனோஹரியின் ஸ்லிப்பர் பரிமளத்தின் கஞ்ச மலர்ப் பாதத்தைத் தீண்டிவிட்டன! 'அம்மா!' என்று சிணுங்கினாள்.

"சாரி, ஸிஸ்டர்!" என்று மன்னிப்பு வேண்டினாள் கறுப்பு அழகி.

"இதோ இருக்குதே சாரி!" என்று பாங்கியின் புடவையைப் பாங்குடன் தொட்டுக் காட்டினாள் பரிமளம்.

"நீங்க ரொம்பக் குறும்பு!" என்று வெட்கம் அடைந்தாள் தேவமனோஹரி. மேனியின் புல்லரிப்புக்கு கெடு ஒன்றரை விநாடிதான்!

"வாங்க போவோம். நம்ப பங்களாவுக்கு" என்று துரிதப்படுத்தினாள்.

"ஆல்ரைட் தேவமனோஹரி!" என்று பெருங் குரலில் கூறிப் புறப்படத் தொடங்கினாள் பரிமளம். உள்ளங் கையில் உறுத்திக் கொண்டிருந்த கடிதத்தின் மேற்பகுதியில் இருந்த தேவமனோஹரி என்ற கை எழுத்தைப் பார்த்தபடியே நடை பயின்றவள், அருகில் நின்ற புண்ணியகோடி குருக்களின் பாதத்தை மிதித்து விட்டு, அத்தவற்றை உணர்ந்து தவித்தாள்.

புண்ணியகோடி குருக்கள் அந்தக் கன்னியின் தவிப்பை உணர்ந்து கொண்டிருக்க வேண்டும்.

"அம்மா கொழந்தே! பரவாயில்லே. பகவான் ரொம்ப நல்லவன். உன்னோட அழகுக்குத் திருஷ்டி பட்டுடப் படாதேன்னு ஒரு மச்சத்தையும் நோக்கு வச்சுட்டான். எம்பெருமான் முருகன் தமிழ்க் கடவுள் ஆனபடியினாலே, தமிழ் மண்ணிலே இருக்கக் கூடிய உன்னோட வினையைத் தீர்த்துடுவான். ஏன் தெரியுமோ கொழந்தே! என் அப்பனுக்கு, வினை தீர்த்தான்னு நாமமே உண்டாக்கும். பெயர்னா அப்படிப் பொருந்தி ஆகணும்!" என்று 'உபந்யாசம்' நடத்தினார்.

தேவமனோஹரி கதிகலங்கி நின்று விட்டாள்.

குமாரி பரிமளத்தின் கண்கள் கசிந்தன! 'அம்மா கொழந்தே' என்ற பாசத்தின் குரல் அவளை எங்கெல்லாமோ இட்டுச் சென்றது. பெரிய குருக்களை ஏறிட்டுப் பார்த்தாள். தொண்டையை அடைத்தது.

அதற்குள், "அப்பா!" என்று தூண்டில் போட்டான் செல்லப்பிள்ளை.

டிரான்ஸிஸ்டரின் வாயைக் கட்ட எல்லாம் வல்லவனுக்கு யாரும் சொல்லிக் கொண்டிருக்க மாட்டார்களா?

"இருடா, அம்பி" என்று கெஞ்சி முடித்து விட்டு, இடுப்பில் பொடி டப்பாவுக்கு அடுத்த இடத்தில் செருகி வைத்திருந்த ஒரு 'விசிட்டிங் கார்டை' அவளிடம் நீட்டி, "அம்மா கொழந்தே! நோக்கு எப்ப வரணும்னு தோணறதோ அப்ப எங்க ஆத்துக்கு வாம்மா, ஸ்ரீதேவி வீடு தேடிண்டு வர்ற காலம்தான் இது. மண்ணடி போஸ்டாபீஸண்டை இருக்கு நைனியப்பன் தெரு. அங்கு 'நல்லழகு உணவு விடுதி' இருக்கு...யாரைக் கேட்டாலும் சொல்லுவா; அதுக்குப் பககத்திலேதான் என் வீடு" என்றார். பாசத்தின் நெகிழ்ச்சியில் குரல் தழுதழுத்தது.

பாசம் என்னும் தத்துவம், ஒரு தவமா? இல்லை, வெறும் சோதிப்புத்தானா?

குமாரி பரிமளம் தலையை ஆட்டினாள். அந்த முகவரிக் குறிப்பு அட்டையை சோளிக்குள் திணித்தாள். கள்ளத்தனம் பயின்று அஞ்ஞாத வாசம் புரிந்த அந்தக் கசங்கிய—கசக்கப்பட்ட வீரபாண்டியனின் கடிதம் அவளது விரல் நுனியை கிமிண்டி வேடிக்கை பார்த்துத் தொலைத்தது.

அப்படியென்றால், அவள்—பரிமளம்—குமாரி பரிமளம் வேடிக்கைப் பொருளா, என்ன?

"அப்பா, டாக்ஸி வந்துடுத்து" என்று கூச்சல் போட்டான் சுந்தரேசன்.

'டெர்லின் ஸ்லாக்' கண்ணைப் பறித்தது.

யாருடைய கண்ணை?

ஒற்றைக் கண்ணன் இங்கே எங்கு வந்தானாம்?

வாடகைக் கார் பறந்தது.

'அம்மா!'—அடங்காச் சோகம் அலறிப்புடைத்தது. அவள்—குமாரி பரிமளம் தன்னிடம் தேவமனோஹரி நீட்டிய கடிதத்தைப் படிக்க முனைந்தாள். மறுகணம்?

பரிமளத்தின் கைப்பிடிப்பில் தவித்த அதிவீரராம பாண்டியனின் கடிதத்தை காக்கை முறுக்கைத் தட்டிப் பறிப்பது மாதிரி, பறித்தாள் தேவமனோஹரி!

## 6. சொல்லித் தெரிவதுண்டு!

முறுக்கைத் தட்டிப் பறித்துக் கொண்ட காக்கை பறந்தோடவும் இல்லை. அவள் கைகளில் முறுக்கும் கிடையாது! ஆனால், சிறுகதை மன்னன் அதிவீரராம பாண்டியனின் கடிதம் மட்டும் இருந்தது!

அவள் தன் லயிப்பில், தன் லயத்தில் தன் கனவில் மிதந்து கொண்டிருந்தாள்; கவர்ச்சி கனிந்த கறுநிற

இதழ்களில் நளினம் நிறைந்த புன்னகைப் பூவைத் தூவியவளாக, பரிமளத்தையே வைத்த கண் வாங்காமல், பார்த்துக் கொண்டே நின்றாள்.

அவள்: தேவமனோஹரி

பரிமளம் மோகினிச் சிலை ஆனாள். நெற்றியின் வேர்வையும் கண்களின் நீரும் சங்கமித்து அவளது சிந்தூரக் கன்னங்களை முத்தமிட்டுத் தழுவிக் கொண்டிருந்தன.

'தேவமனோஹரி' என்று அவளது உள் மனம் தவித்தது. 'மிஸ்டர் அதிவீரராம பாண்டியன்!—சகோதரி தேவமனோஹரி!'—அவளது வெளி மனம் சினம் பப்பி, சிந்தையைக் கலக்கியது—எதையோ எண்ணினாள். எதுவுமே இடைச் செருகலாக நினைவில் முட்டியது. மாடு முட்டிய பாலகியாகத் தவித்தாள்; தடுமாறினாள்; அச்சம் கொண்டாள் அவளது கோல விழிகளின் உட்பரப்பில் சிவப்புக் கொடி கட்டிப் பறந்தது. அதிகாலையில் நடந்த நிகழ்ச்சியை—அல்லது நடத்திக் காட்டிய நிகழ்ச்சியை நினைத்துக் கொண்டாளோ? அழகு கொழித்த இளம் நெஞ்சம் அழகு கொழிக்க எம்பி எம்பித் தணிந்தது.

"ஸிஸ்டர், பரிமளம்!"

பரிமளத்தின் இதயத்தில் பதித்திருந்த பார்வையை மேலே உயர்த்தி விளித்தாள் மனோஹரி. இடது கையில் டம்பப் பையின் கைப்பிடிப்பில் ஒண்டிக் கிடந்த அந்தக் கடிதத்தை அயாசமான அகம்பாவத்தோடு ஓரக்கண் பதித்துப் பார்த்த வண்ணம் இருந்த அவள், இப்போது பரிமளத்தின் நெஞ்சைத் தொட்டுக் கூப்பிட்டாள். இதழ்க் கங்குகளில் மாயக் கவர்ச்சிப் புன்னகை கண் சிமிட்டியது.

பதறிப் போய்த் தலையை நிமிர்த்தினாள் பரிமளம்.

"ஏன் அழறீங்க, பரிமளம்?"

இப்போது பரிமளம் அழவில்லை; சிரித்தாள். மௌனம் சூள் உரைத்த சிரிப்பு அது. தோழியை வெறித்துப் பார்த்து விட்டுச் சொன்னாள்:

"நான் அழுதேனா? ஆமாம், அழுதேன் தான்!" ஏதேதோ சொல்லத் தூண்டியது மனம்

"விளையாட்டுக்காக அந்த லெட்டரைப் பறிச்சேன், பரிமளம்!"

"நானும் விளையாட்டுக்காகத்தான் அழுதேன், மனோஹரி."

"நான் உங்க ஸிஸ்டர்!"

"அதை நான் மறந்திடலே. புதிய உறவாச்சே?"

"வாஸ்தவம்தான். நானும் என்னோட சகோதரியை மறந்திடலேதான்!"

"ரொம்பச் சந்தோஷம்!" சொல்லிக் கொண்டே பாண்டி பஜார் நோக்கிக் கால் பாவ முனைந்தாள் குமாரி பரிமளம்.

குறுக்கே ஓடும் பூனையானாள், தேவமனோஹரி. "பரிமளம், ப்ளீஸ்...ப்ளீஸ்!" என்று பல் எல்லாம் தெரியக் காட்டி நைப்புச் சிரிப்புச் சிரித்தாள். அவள் சிரிப்புக்கென்று இப்படியொரு மனமோகனக் கவர்ச்சியா?

"ப்ளீஸ், என்னைப் போக விடுங்க, மனோஹரி. எனக்குத் தலைக்கு மேலே வேலை இருக்கிறது" என்று நிர்த்தாட்சண்யமான கண்டிப்புடனே பேசினாள் பரிமளம். அவளுடைய மென்விரல்கள் சோளிக்குள் உறங்கிய அதிவீரராம பாண்டியனின் கடிதத்தைத் தடவிக் கொடுத்தன போலும்! மீண்டும் அடியெடுத்து வைக்க முனைந்தாள்.

"பரிமளம், என்னை நீங்க இன்னும் சரிவரப் புரிஞ்சுக்கிடலே! நான் என்றைக்குமே உங்க கூடப் பிறந்த

சகோதரியாட்டம்தான். அக்காளென்றே கூட வச்சுக்கிடலாம் நீங்க! மன்மதக் கலைதான் சொல்லித் தெரிவதில்லேன்னு சொல்லுவாங்க ஆனா, பாசம் கூட சொல்லித் தெரியாலே என்கிறதை உங்க விஷயத்திலே தான் என்னாலே காண முடிஞ்சிது!" பேசிக் கொண்டே கண்களைத் துடைத்துக் கொண்டாள் தேவமேனுஹறி.

கழுத்தில் இழைந்த ஆபரணங்களுக்கு மத்தியில், பொய்களினூடே ஒளிரும் உண்மையென அந்த மஞ்சள் தாலி பளிச்சிட்டது.

மனேஹரியின் கண்களையும் கண்ணீரின் கண்களையும் அந்தத் தாலியையும்—தாலியின் மஞ்சள் கயிற்றையும் மாறி மாறி—மாற்றி மாற்றி பார்வையிடலானுள் பரிமளம். என்ன நினைத்தாளோ, மனேஹரியை நெருங்கினுள்.

"உங்க மனசை நான் புண்படுத்திட்டேன். என்னவோ ஒரு 'மூட்' இப்படித்தான் சில சமயம் ஆயிடுது. ராத்திரிகூட நான் என்னை மறந்து போயிட்டேன் அப்படி ஒரு சோதனை நடந்திடுச்சு. விதி ஆடின கூத்து!...என் வரைக்கும் என் பேரிலே ஒரு குற்றமும் இருக்க நியாயமில்லே. நியாயம் சோதனைப் பொருளாக ஆக விடலாமா, ஸிஸ்டர்?...சரி, சரி! எங்கேயோ போக வந்தேன் எங்கேயோ வந்து நிற்கிறேன் எங்கேயோ போகப் போகிறேன்!...நல்ல உலகம்!'—சில தமிழ்த்திரைப்படங்களிலே சம்பந்தமில்லாமல் கதாநாயகி 'டயலாக்' பேசுவாள் அல்லவா, அந்தப் பாவனையில் தான் பரிமளமும் பேசியிருக்க வேண்டும்.

தேவமனேஹறி கள்ளப் பார்வையை ஓட்டினுள்; அல்ல, ஒட்டினுள். "பரிமளம்! நான் விளையாட்டுக்காகவேதான் இந்த லெட்டரை உங்க கையிலிருந்து பறிச்சேன். இந்த லெட்டரைப் பிரிச்சப்பவே குருக்கள் காலை மிதிச்சிட்டீங்களே, அப்புறம் இதைப் படிக்கத் தொடங்கிட்டீங்கன்னு, இன்னம் யார் மண்டையை

உடைப்பீங்களோன்னு பயந்துதான் அப்படிப் பறிச்சேன். பயம் என்கிற ஒரு பதத்துக்கும் இந்தத் தேவமனோஹரிக்கும் ஏழாம் பொருத்தம். ஆனாலும் உங்க விஷயத்திலே என்னமோ எனக்குப் பயம் தோணுச்சு. சரி, இந்தாங்க, படிங்க" என்று அழுத்தமான குரல் எடுத்துக் கூறினாள் தேவமனோஹரி கூறியதோடு நிற்காமல், அக்கடிதத்தைத் தோழியின் கைகளிலே திணிக்கவும் முயன்றாள்.

பரிமளத்தின் கைகள் நடுங்கின. "ஊ...ஹூம், வேணும். அந்த லெட்டரை நான் பார்க்காமல் இருக்கிறதுகூட ஒரு வகைக்கு சலாக்கியந்தான். ஆல்ரைட்" என்று தீர்மானமான குரலில் கருத்தைப் பரப்பினாள் பரிமளம்.

ஃ ஃ ஃ

ஆச்சரியக் குறியில் கேள்விக்குறி ஒட்டியது.

"ஏன் அப்படிச் சொல்றீங்க" என்று விசாரித்தாள் தேவமனோஹரி. கேள்வியின் துடிப்பில், காது வளையங்கள் குலுங்கின. "மிஸ்டர் அதிவீரராமபாண்டியனைப் பிடிக்காதா உங்களுக்கு?" கேட்டாள்.

விநயமான ஆற்றாமைச் சிரிப்பை உதிர்த்தாள் பரிமளம். முகத்தைத் துடைத்துக் கொண்டாள். "திடுதிப்னு பெரிய கேள்வியாகக் கேட்கிறீங்களே? ஒரு கன்னிப்பெண் இதுக்கு என்ன பதில் சொல்வாள்? எப்படிப் பதில் சொல்ல முடியும்? மிஸ்டர் அதிவீரராமபாண்டியனைப் பிடிக்காதான்னு நீங்க கேட்கிறது, அவர் எழுத்துக்களை நினைச்சுதான் என்றால், ஓரளவுக்கு அவரைப் பிடிக்கும்னு சொல்லுவேன். மற்றப்படி, எனக்கு அவரைத் தெரியாதுன்னு தான் முன்பே சொல்லிட்டேனே, ஸிஸ்டர்? நடுவழியிலேயே நின்னுக்கிட்டு பெரிய விஷயங்களை அவ்வளவு சுலபமாய்ப் பேசி ஒரு முடிவுக்கு வர முடியாதுங்களே? சாவகாசமாய்ப் பேசுவோம். மிஸ்டர் அதிவீரராம பாண்டியனோடே எழுத்துக்களைப் பற்றி ஊம்...! வந்து...மிஸ்டர் அதிவீரராமபாண்டியன் என்றால், உங்களுக்கு ரொம்ப

இஷ்டம் போலிருக்கு. இல்லாட்டா, உங்களுக்குள்ளே கடிதப் போக்குவரத்து தொடர முடியுங்களா?" என்றாள் பரிமளம்.

தேவமனோகரியின் மௌனப் புன்னகைக்கு மத்தியில், மங்கலத் தாலி அவள் நெஞ்சில் விதியின் வினையாகவும் வினையின் விதியாகவும் விளையாடியது. "கல்யாணமானவள் மனோஹரி. இவள் அதிவீரராம பாண்டியனோடே கடிதத் தொடர்பு வச்சிருக்கிறாள்கள். ஊம்!...அதிலே ஒரு தப்பும் இல்லே; அப்படின்னா, மனோஹரியின் புருஷனும் ஒரு இலக்கிய ரசிகனாகத்தான் இருந்தாக வேணும், அதிவீரராம பாண்டியனுக்கு விசிறிகள அதிகம என்கிறதுதான பிரசித்தமாச்சே? அவருக்குக் கர்ற்று பஞ்சம் மட்டும் இருக்கவே இருக்காது!" நினைவுகளின் மத்தியில் நமட்டுச் சிரிப்பு ரோஜாவாகத் தோன்றி மணம் கூட்டியது.

"என்ன ஸிஸ்டர், நீங்க மட்டும் தனியே சிரிக்கிறீங்க?"

"ஓ...ஒண்ணுமில்லே என்னமோ ஒரு தமாஷ் மனசிலே ஓடிச்சு. சிரிப்பு மட்டும் ஓடாமல் நின்னிடுச்சு. சரி வாங்க, நடப்போம்!" நெட்டுயிர்ப்பு நெளிந்தது.

தேவமனோஹரி நயமான முறுவலைக் கூட்டினாள். "ஊம்," என்று நடக்கத் தொடங்கினாள். அதிவீரராம பாண்டியனை அல்ல. அவன் லெட்டரைத் தன்னுடைய டம்பப் பைக்குள் திணித்துக் கொண்டே நடக்கலானாள் அவள். தேசிங்கராஜன் குதிரையை நினைவூட்டக் கூடிய ராஜகம்பீர நடை அது!

° ° °

இருவரும் மௌனப் பிண்டங்களென வழி பார்த்து, வழிமிதித்து, வழி தொடர்ந்தார்கள்.

பாண்டி பஜார்.

ராஜகுமாரியில் "செம்மீன்" வியாபாரம் படு ஜோர்!

பரிமளம் சிந்தனை வயப்படலானாள். மேற்கு மாம்பலத்தின் கோடியில் இருந்த குடிலும் தியாகராய நகரின் மையத்திலிருந்த பங்களாவும் மனத்திரையில் படம் காட்டின.

படம் பார்த்தாள் பூவை.

அந்தக் குடில் அவளை வளர்த்தது 'ஆயாக் கிழவி சத்தம் போடப் போகுது!'—பதறினாள்.

அந்தப் பங்களா அவளை வாழ்த்தியது. ஆம்; அதுதான் தொழிலதிபர் வீரபாகுவின் பங்களா! "ஐயாகூட என்னைக் கோவிச்சுப்பாங்க இன்னிக்காவது அவங்களைப் பார்க்க வேணும்!...அவங்க சம்சாரத் துக்கு என் பேரிலேதான் எத்தனை பாசம்!'

சுயப்பிரக்ஞை மீண்டது.

"பரிமளம், பசிக்குதில்லையா?"

"ஓ...எஸ்...எஸ்! பசிக்குது பேஷாகப் பசிக்குது."

"அப்படியா? எனக்குப் பசிச்சுதேன்னு அறிஞ்சுக் கிட்டேன். உங்களுக்கும் பசிக்கணுமேன்னு நினைச் சேன். நினைச்சது சென்ட் பர்சன்ட் சரியாப போச்சு. நாம ரெண்டு பேரும் ஒரு உடல், ரெண்டு உயிராகிட் டோம் இல்லியா?"

"என்ன சொன்னீங்க? இவ்வளவு பெரிய தியரியைச் சொல்லிட்டீங்களே? ஊம்...என் பேரிலே பாசம் வச்சிருக்கிறதுக்கு அடையாளமா ஸிஸ்டர்— சகோதரி அப்படின்னு சொன்னதெல்லாம் வெறும் நடிப்புத்தானா?" என்று பொய்க் கோபம் புனைந்து, நமட்டுச் சிரிப்பை உதிர்த்தாள் பரிமளம்.

தோழியின் பொய்க் கோபத்துக்குக் காரணம் தேவமனோஹரிக்குப் புரிந்தது. "நாம ரெண்டு பேரும் ஒரே உயிர்: உடல்தான் இரண்டு!" என்று திருத்தம் செய்தாள்.

"அப்படிச் சொல்லுங்க!"

"நாம் இரண்டு பேரும் ஓருயிர்; உடல்தான் இரண்டு!"

"இலக்கணம் கன கச்சிதம்!"

"ஓ. கே?" என்றவள், "அது கிடக்கட்டும். அந்தக் குருக்கள் யார்?" என்று விசாரித்தாள் கறுப்புத் திராட்சை தேவமனோஹரி.

"யாருக்குத்' தெரியும்?" என்று நிதானமான அமைதியோடு விடை கொடுத்தாள் பரிமளம்.

"அட, கடவுளே!" என்று சிரித்தாள் தேவ மனோஹரி அவள் சிரித்த சிரிப்பில் மார்பு எம்பித் தணிய, அந்த அதிர்ச்சியில், உள்ளே அஞ்ஞாதவாசம் செய்த அந்த மங்கலத் தாலி வெளியே முகம் காட்டியது. அதை அறிந்து, அந்தத் தாலியைக் கையினால் தூக்கி, பயபக்தியோடு கண்களிலே ஒற்றிக் கொண்டாள், அவள். அவள் தேவமனோஹரி!...

"ஏதானும் சாப்பிடலாமா?"

"ஏன், உங்க வீட்டிலே...பங்களாவிலே சாப்பாடு இருக்காதோ?"

"சாப்பாடு எனக்காகக் காத்துக்கினு இருக்கும். இப்போ ஸ்லேட்டா ஒரு ட்ரிங் அடிப்போமான்னு கேட்டேன்."

"ட்ரிங்கா?"

"கூல் ட்ரிங்க்!"

"ஊஹூம், வேண்டாம். நடப்போம். பங்களா எங்கே?"

"ஜெயலலிதா தெருவிலே!"

"ஜெயலலிதா தெருன்னு த்யாகராய நகரிலே இருக்கா, என்ன?"

"நீங்க ஒண்ணு. ஜெயலலிதா இருக்கிற தெருவிலே தான்னு ஜோக் அடிச்சேன்!"

"ஓஹோ!" தேவமனோஹரியின் பங்களாவைப் பற்றியும் அவளது பதிபக்திக்கு இலக்கான கணவனைப் பற்றியும் பிறந்த ஒரு கற்பனை லயத்தோடு நடை தொடர்ந்தாள் பரிமளம்.

ஃ ஃ ஃ

அப்போது "அக்கா, அக்கா! உன்னை ராத்திரி பூராவும் காணுமல் ஆயாக் கிழவி உன் பேரிலே கோப மாய் இருக்காங்க!" என்று பதட்டத்துடன் தெரிவித்த படி வந்து நின்றான் சிறுவன் ராமையா. கிழிசலும் கந்தலுமாக அவன் உடைகள் விளங்கின.

பரிமளம் கலவரம் அடைந்தாள். சலனம் அவளது நெற்றி நரம்புகளைப் புடைக்கச் செய்தது. சிறுவ னுடன் புறப்பட எண்ணி தோழியின் முகத்தை பார்த்தாள்.

அப்போது பாண்டிபஜார் சாலையில் நடைபாதை யின் ஓர் ஓரத்தில் அந்தப் படகுக் கார் 'இம்பாலா' வந்து நின்றது. தலையைத் திருப்பினாள், பரிமளம்.

"பரிமளம், என்னம்மா இது? உன்னைப் புரிஞ் சிக்கவே முடியலையே அம்மா?...ஊம்!...வண்டியிலே ஏறிக்கம்மா?"

அன்புக் கட்டளையைப் பிறப்பித்தார் அந்தப் பெரிய மனிதர்!...அவர் யார், தெரியுமா? அவர்தான் தொழிலதிபர் வீரபாகு!...

மௌனம் கைநொடிப் பொழுதுக்கு விளை யாடியது.

மகுடிக்குக் கட்டுப்பட்டது நல்லபாம்பு.

படகுக்கார் 'காரினும்' கடுகிப் பறந்தது!

# 7. 'இனிய பா...

அந்த "இம்பாலா" கார், கற்பின் நிறைகாக்கப் போராடி வெற்றி கண்ட நாணயமான கன்னிப்பூவின் அளப்பரிய ஆனந்தத்தைப் போன்று, அமைதியின் பூரிப்போடு மகாலட்சுமி தெருவிலே மடங்கி 'தமிழ் வாழ்க!' என்னும் அப்பங்களாவின் தலைவாசலில் வந்து நின்றது.

"அம்மா பரிமளம், மெதுவாக இறங்கம்மா!" என்று பவ்யமான குரலில் சொன்னார் வீரபாகு.

"ஆகட்டுங்க ஐயா!" என்று ஒப்புதல் கொடுத்த வண்ணம் நிமிர்ந்து அமர்ந்தாள் குமாரி பரிமளம். கீழ் வசமாகத் தாழ்ந்திருந்த விழிகளை நிதானமாக மேலே உயர்த்தினாள். வீரபாகுவின் அழகு கெடாத உதடு களில் ஊர்ந்த புன்னகைக் கோலத்தைத் தரிசித்தன அவளது கண்கள் அமைதியைப் பாதுகாத்துக் கொண்டிருந்த அவள், இமை கொட்டும் பொழுதில் சலனம் அடையலானாள். மனத்தின் சலனம், காரின் கதவுத் தாழைப் பற்றியிருந்த பூங்கரங்களை நடுங்க வைத்து விட்டது. மென்மையான கனைப்பொலி அவளுக்குச் சுயப் பிரக்ஞையை அளித்திருக்க வேண்டும்.

வீரபாகு பின்புறத்துக் கதவைத் திறந்து விட்டார். "பார்த்து இறங்கு, பரிமளம்!" என்று எச்சரிக்கையை நினைவுக் குறிப்பாக்கினார் அவர்.

அன்று:

மாண்புமிகு கலைஞர், தமிழ்நாட்டை ஆளும் தலைமைப் பொறுப்பை ஏற்றதும், அவரைக் கண்டு கொள்ளப் புறப்பட்டார் வீரபாகு. தானும் வருவதாகத் தெரிவித்தாள் பரிமளம். ஏறிய அவசரத்தில் காரின்

மேற்பகுதி அவளுடைய அழகான மண்டையைப் பதம் பார்த்து விட்டது.

"உயர வேண்டியதுதான். அப்படித்தான் உயர்ந்தவங்களும் சொல்லுறாங்க. இங்கே என்னுடான்னு, காரோட 'டாப்' இடிக்குது!" என்றார் வீரபாகு.

பரிமளம் வலியை மறந்து, ஆனால் அவருடைய பேச்சின் மெல்லிய நகைச்சுவைப் பண்பை மட்டும் மறந்து விடாமல், வாயவிட்டு மனம் விட்டுச் சிரித்தாள்.

இப்போது, அச்சம்பவத்தை குமாரி பரிமளம் நினைவு கூர்ந்தாள். கதிரவனின் கண்பட்டுக் கண் மலரும் சூரிய காந்தியின் இதழ்களென அவளது சிவந்த, அழகான உதடுகள் சற்றே விலகிக் கூடின. ஜாக்கிரதையாகத் தலையைக் குனிந்து கொண்டே இறங்கலானாள் அவள். இடதுபுறத் தோளில் இருந்த இடதுபுறக் கையை எடுத்தாள். மாரகச்சேலையைச் சீர் செய்தாள். சீர் கொடுத்த—படைப்புத் தலைவன் சீர் கொடுத்த தன்னுடைய எல்லையில்லா அழகை தன் மனத்தில் எழுதிப் பார்த்து மகிழ்ந்தவளாக, நிமிர்ந்து நின்றாள். நெஞ்சில் பதிந்து கிடந்த தங்கச் சங்கிலியின் 'டாலர்' அவளுக்கு ஏன் உறுத்தப் போகிறது? சிருஷ்டி கர்த்தா மகா ரசிகன்! அழகை—அழகின் பொருளை—அழகின் தத்துவத்தை—அழகின் தவத்தை, அழகின் ரகசியத்தை எங்கெங்கெல்லாம் ஒளித்து வைத்து கண்ணாமூச்சி விளையாடுகிறான்!—ஆஹா!...

"வாம்மா!"

"நல்லதுங்க!"

திரும்பிப் பார்த்து விஷமப் புன்னகை செய்தார் வீரபாகு பட்டுச் சொக்காய் இறங்குமுக வெய்யிலில் ஒளி ஏறி டால் அடித்தது. "நல்லதைச் செய்யறோம் எனகிறதுதான் என்னோடை சித்தாந்தம். ஆனா நீ மட்டும் என் விதிக்கு ஒரு விசித்திரமான விதி விலக்காய் இருந்துக்கினு வர்றியேம்மா?" என்று ஆற்றாமையுடன்

சொல்லிவிட்டு அரைக்கணம் நின்றார். பரிமளத்தை ஊடுருவி நோக்கினார்.

பரிமளம் கண்கலங்கினாள். நிலைமையைச் சமாளிக்க எத்தனம் செய்தாள் அவளைக் காட்டிக் கொடுக்காமல், அவர் உள்ளே நடந்தார்.

வாயைத் தூக்கிட முயன்ற 'ராஜபாளையம்' வாலைத் தூக்கி விட்டது.

வெளியே அபாய அறிவிப்புச் சொல்லிக் கொண்டிருந்த 'நாய்கள் ஜாக்கிரதை' என்ற பலகை நாணம் காத்தது.

உச்சியில் 'தமிழ் வாழ்க!' என்னும் வாசகம் பொலிந்தது.

அடியில் வாசல் காப்போன் நின்றான். கையெடுத்துக் கும்பிட்டான். கும்பிடு கொடுத்துக் கும்பிடு வாங்கிக் கொண்டான்.

டிரைவர் மஜீத் மரியாதையோடு வெளிவாசலைக் கடந்தான் வீரபாகுவே காரை ஓட்டிச் செல்லும் சமயங்களில் அவன்பாடு கொண்டாட்டம். தமிழ் மர்மக் கதை ஒன்றைப் பிரித்து வைத்துக் கொண்டு அதில மூழ்கி விடுவான. கடலில் மூழ்கிய காரிகையைத் துப்பறியும் ஏஜண்ட் கண்டுபிடித்துத் துப்புதுலக்கும் வரை அவன் பல் கூட துலக்க மாட்டான்!

வரவேற்புக் கூடத்தில் மங்களம் நின்றாள்; மங்கல மங்கையென நின்றாள். பூவும் பொட்டும் அவளைக் கொடுத்து வைத்தவள் என்று ஆசீர்வதித்தன. ஆம்; கொடுத்து வைத்தவள்தான!... இல்லையென்றால். வீரபாகுவை எடுத்துக் கொண்டிருப்பாளா?

மங்களம் சிரிப்பை வரவழைத்துக் கொண்டாள். "வாங்க, அத்தான்!" வாயைத் திறந்தாள். அதற்குள் இருமலும் வாயைத் திறந்து விட்டது. கொஞ்ச காலமாகவே மங்களம் இருமலால் அவதிப் படுகிறாள்.

மருந்து மாயத்துக்குக் குறைச்சலா, என்ன? ஆனால், விதிக்கு மருந்து இல்லையே!

பரிவுடன் மனைவியை நெருங்கினார் வீரபாகு. ஆதரவுடன் அவளது நெற்றி வேர்வையைத் துடைத்து விட்டார். வைரக்கல் மோதிரங்கள் கண்ணைப் பறித்தன.

பரிமளம் கண்களைத் தாழ்த்தினாள். "வாம்மா," என்று மங்களம் உபசரித்த சொற்கள் அவள் மனத்தை நெகிழச் செய்து விட்டன.

"நல்லதுங்க!" என்றாள் பரிமளம் தாழ்த்திய கண்களை இமையளவுகூட உயர்த்தவில்லை அவள். புருஷனும் மனைவியும் பேசும்போது, ஒரு குமரிப்பெண் அக்காட்சியைப் பார்க்கக் கூடாதல்லவா?

"அம்மா பரிமளம், உள்ளே போய் மீல்ஸ் ரெடி பண்ணு. நாம் ரெண்டு பேரும் சேர்ந்து சாப்பிட்டு ஆறேழு நாளாயிடுச்சம்மா!" பாசம் தவித்தது.

"நல்லதுங்க!"

"நல்ல பொண்ணு இது. 'நல்லதுங்க' அப்படின்னு மட்டும் கனகச்சிதமாய்ச் சொல்லிடுது!" சிரித்தார் வீரபாகு. கறுத்துக்கிடந்த மீசையில் ஒன்றிரண்டு வெளுத்துக் கிடந்தன.

'ஒமேகா' சுவர்க் கடிகாரத்தின் உச்சியிலிருந்து ஜப்பான் பூஞ்சிட்டு ஒயில் சேர்த்து இருமுறை கூவியது.

"ஓ!" என்று புள்ளிமானாக ஓடிக்கொண்டிருந்த காலத்தை அளந்து அதிசயப்பட்டவாறு 'டன்லப்' ஆசனத்தில் சாய்ந்தார். பூந்திரையை விலக்கிக் கொண்டு தன் மனைவி மங்களமும் அந்தப் பெண் பரிமளமும் உள்ளே நுழைவதைக் கண்டார். 'பரிமளத்தை ஸ்டடி பண்ணவே முடியலை!...ஊம்!'

என்று நினைவுகளைப் பூச்சரம் கட்டினர். அவர் கண்கள் நாற்புறமும் அலைந்தன.

...காந்தி மகாத்மா, நேருஜீ, அண்ணாதுரை, இந்திரா காந்தி, சி. எஸ்., ஜீவா, பெரியார், நேதாஜி, காமராஜ், ராஜாஜி என்று படங்கள் வரிசையாக இனம் கடந்து, கொள்கை கடந்து, அரசியல் கடந்து படம் காட்டின.

வீரபாகுவின் கண்ணாடித் தொழிற்சாலைத் திறப்பு விழாவில் நேருஜி கலந்து கொண்ட படங்கள் எடுப்பாகத் திகழ்ந்தன. திரைத் தொடர்பில் கனிந்த பெரும் புள்ளிகளும், தொழிலதிபரோடு படங்களிலே கூடிக் குலாவினர்!

வீரபாகுவின் உள்மனத்தில் ஆணவம் மண்டிய சிரிப்பு தழைத்தது. அந்த அகம்பாவச் சிரிப்பை மண்டியிடச் செய்தது. கீழ்மூலைச் சுவரில் மாட்டப்பட்டிருந்த 'கிளாக்ஸோ' குழந்தையின் படம்! 'வினை தீர்ப்பவனே...வேலா!...என்று நெஞ்சம் நெக்குருகினர். எனக்கு எல்லாப் பாக்கியமும் கூடி வந்திடுச்சு. ஆனல், சந்தான பாக்கியம்...?' கேள்விக் குறி, கேள்விக் குறியாகவே நின்றது.

டெலிபோன் மணி ஒலித்தது.

"எஸ்...ஸ்பீகிங் ஃப்ரம் தமிழ் வாழ்க!...எஸ்... வீரபாகுவேதான்!...ஓ...நீங்களா? உங்களைப் பற்றி நிரம்பக் கேள்விப் பட்டிருக்கேன்!...அதிவீரராமபாண்டியன்னு, உடனேயே சிறுகதை மன்னராச்சேன்னு பிஸ்கட் பிராந்தி சாப்பிட்ட மாதிரி மயங்கி உங்களை ஊர் உலகம் பாராட்டுதுங்களே?...நாலு மணிக்கு மேலே நாம் சந்திக்கலாம். ஓ...கீழ்ப்பாக்கத்திலேதான் இருக்கீங்களா? உங்களுக்கு ஏற்ற இடம்!...ஓ...தமாஷ் இல்லீங்க. மிஸ்டர் ஏ வி. பாண்டியன்!...போய்யோடே எனக்கு சிநேகம் இருந்திருந்தால்' இந்நேரம் நான் கொடீஸ்வரன் ஆகியிருக்க மாட்டேனு?"...

இன்னும் பேச நினைப்புதான். ஆனல் எதிர்த் தரப்பில் கேட்க ஆள் வேண்டாமா? 'ஹெட்வெயிட்

பிடிச்சவன் என்கிறது சரிதான் போலே...' உடனே, அவருக்கு பரிமளத்தைப் பற்றி நினைத்துப் பார்க்க வேண்டும் போல ஓர் உள்ளுணர்வு பிறந்தது 'நான் பரிமளத்தைச் சந்திச்சது ஒரு கதைபோலத்தான்! என்று இப்படியொரு திட்டவட்டமான அபிப்பிராயத்தை—ஏற்கனவே பலமுறை சிந்தித்து ஏற்படுத்திக் கொண்ட ஒரு முடிவை மீண்டும் எண்ணிப் பார்த்து, அந்த எண்ணத்தில் ஓர் அமைதிபெறத் துடிப்பவர் போல சில கணப்பொழுதுக்கு மனத்தை ஒரு நிலைப்படுத்தி அமைதி பெற்று மீண்டார். உடனே, அதிவீரராமபாண்டியனின் தொலைபேசிப் பேச்சு நினைவில் ஓடியது. 'தலைக்கனம் பிடிச்ச இவனை நம்பி தன்னோட பொன்னான நெஞ்சை இவன்கிட்டே பணயம் வச்சிடத் துணிந்ததே இந்தப் பொண்ணு?... நெடுமூச்சு அதன் இயல்புக்கு ஏற்ப, நீண்டது.

"அத்தான், வாங்க சாப்பாடு எடுத்து வச்சாச்சு," என்று செய்தி சொன்னாள் மங்களம். காஞ்சீபுரம் புடவையும் சோளியும் சலசலத்தன.

"ஓ. நான் ரெடி, நாம்ப மூணுபேருமே ஒன்றாக உட்கார்ந்து சாப்பிடலாமே?..." என்றார் வீரபாகு.

"நீங்க முதலிலே சாப்பிடுங்க. நானும் பரிமளமும் அப்புறம் சாப்பிடுகிறோம்," என்று தெரிவித்தாள் திருமதி வீரபாகு.

"ப்ரோக்ராம் இப்படி ஏன் திடீரென்று மாறிடுச்சு?"

"அது வெட்கப்படுது."

"நீ வெட்கப்படமாட்டியே?"

"நான் எதுக்கு வெட்கப்படணும்?...நீங்க?..."

"நானும் எதுக்கு வெட்கப்படணும்னு கேட்கிறேன்! ஆனா பரிமளம் என்னோடே உட்கார்ந்து சாப்பிடறதுக்கு ஏன் வெட்கப்படுதினானுதான் என்னாலே புரிஞ்சுக்க முடியல்லே, மங்களம்!"

"அது வெட்கப்படுறது உலகத்தை நினைச்சு."

"உலகத்துக்காக வெட்கப்படுறது வேறே உண்டா?"

"வெட்கப்படுறதின்னு பயப்படுறது என்கிற அர்த்தத்திலே!"

"ஓஹோ, அப்படியா சங்கதி?...உலகம் நம்ப பங்களாவுக்கு வெளியே அல்லவா சுத்திக்கிணு இருக்குது?"

மங்களம் பதில் கூறுவதற்குள், பரிமளம் திரையை விலக்கிக் கொண்டு, தலையை வெளியே நீட்டினாள்.

வீரபாகு மனத்தைத் திருப்பி, கண்களையும் திருப்பினார். "குளிச்சியாயமா?" என்று அன்புடன் விசாரித்தார்.

"ஆமாங்க," என்றாள் குமாரி பரிமளம்

"வெரி குட்!"

ஐந்தாம் முறையாக தொலைபேசி அழைத்தது!

பரிமளம் சிவப்பு ரோஜாவின் புனிதத்தைப் பிரகடனப் படுத்துபவள் மாதிரி அழகின் ஆதரிசம் போலிய விளங்கினாள். "ராத்திரி நான் தப்பிச்சது பெரிய விஷயமாகிடுச்சுங்க," என்றாள். கனனக் கதுப்புக்களில் நிலவியிருந்த அமைதி மாறிவிட்டது.

"என்னம்மா சொல்லுறே?" என்று பதட்டத் தோடு வினவினார் வீரபாகு.

"வாங்க, சாப்பிடலாம் முதலிலே!"

"கதையின்னா சாதாரணமாய் ஒரு சஸ்பென்ஸ் தான் இருக்கும்னு கேள்விப்பட்டிருக்கேன். ஆனா, உன்னோடை வாழ்க்கைக் கதையிலே எப்படித்தான் இத்தனை சஸ்பென்ஸ்கள் ஒளிஞ்சுக்கிட்டு இருக்குதோ, புரியலையே?"

"சரி, சரி, வாங்க சாப்பிடுவோம்!"

இந்தப் பாசத்தின் சந்நிதியில் அடி எடுத்து விட்டால், பரிமளத்துக்கு புதிய உள்ளம் வந்து விடுவது இயல்புதானே?

"ஓ...அப்படின்னு, நீயும் என்னோடு உட்கார்ந்து சாப்பிடுகிறாய். அப்படித்தானேம்மா?"

"ஓ...எஸ்! செர்ட்டன்லி!"

பரிமளம் கொடுத்த ஒப்புதலில் மனம் குதூகலம் அடைந்தவரென, ஆனந்தமாகச் சிரித்தார். ஆனால், மங்களத்தின் முகம் சுண்டி விட்ட துப்பு அவருக்குத் தெரிந்திருக்க நியாயம் இல்லைதான்!

"ஊம், சாப்பாடு ஆறிடப் போகுது. 'காலிப்ஃப்ளவர்' சூப் ஆறிட்டா, அப்புறம் ருசிக்காதுங்க, அத்தான்!'

"ஓ, மை குட்னெஸ்!" என்று எழுந்தார் வீரபாகு. இரட்டை நாடி சரீரம். ஒரு நிமிஷம் பிடித்ததில் அதிசயம் இல்லை ஜிப்பாவைப் சுழற்றிக் கொண்டே நடந்தார். சுவர் இடிததது, அவர் பெரிதாகச் சிரித்தார்.

மங்களமும் பரிமளமும் அவ்வாறு சிரிக்கவில்லை.

0 0 0

"டைனிங் ஹால்" அப்போது களை கட்டி விளங்கிற்று. பிரதான சங்கீத வித்துவான் மேடையில் வந்து அமர்ந்ததும் நூதனமான பொலிவும் நுட்பமாக ஒரு மதிப்பும் ஏற்படுமே அத்தகைய பொலிவு பரிமளம் வந்தால்தான் இந்தப் பங்களாவில் விளையாடுகின்றது.

"உட்காரம்மா!"

"நல்லதுங்க!"

இப்போது பரிமளத்தின் பிறை நுதலில் அனுமார் சாந்து இருந்தது. கடாவ் வாயல் 'புடவை' கிளிப்பச்சை நிறம் அந்தக் கிளிப்பச்சை நிறம்கூட இங்கிலீஷ் கலர் மாதிரி இருந்தது சின்னச் சின்னப்பூக்கள். அதே துணியில் அணிந்திருந்த சோளி. மங்களத்துக்காக

காத்திருந்த பூச்சரத்தில் அவளுக்கும் பங்கு கிடைததது. ஜாதி மல்லிகை சுகந்தம் பிரமாதம். தூங்கும் பச்சிளம் குழவியை நினைவூட்டியபடி தங்கச் சங்கிலி கிடந்தது. பெருமூச்சோடு அவள் வீரபாகுவின் ஆசனத்துக்கு எதிரே உட்காரலானாள். இன்னிக்கு எங்கேயோ சாப்பிட நினைச்சேன். நான் நினைக்கலே தேவமனோஹரி நினைச்சாங்க ஆனா இங்கே வந்து குந்திட்டேன். என்னோட வாழ்க்கை ரொம்ப வேடிக்கை தான! வாழ்க்கையை மிகவும் லைட்டா எடுத்துக்க வேணும்னு சொல்றாங்க. ஆனா, எனக்கு விதிச்சிருக்கிற வாழ்க்கையோ 'சீரியஸாக' அமைஞ்சிருக்குது!...

''சாப்பிடம்மா,'' என்றாள் மங்களம்.

'ஊம்' என்கிற பாவனையில் அடக்கமாகத் தலையை அசைத்தாள் பரிமளம். ''நீங்களும் உட்காருங்க, எல்லாருமே சேர்ந்து சாப்பிடலாம்'' என்றாள். திருஷ்டி மச்சம் எடுப்பாகத் தெரிந்தது.

'மங்களம் ஊஹூம்' என்று தலையை உலுக்கினாள்.

சாதத்தைப் பிசைந்து உருட்டிக் கொண்டேயிருந் தாள் பரிமளம்.

''சாப்பிடம்மா.'' என்றார் வீரபாகு

முதல் கவளம் உள்ளே சென்றது. அதிவீரராம பாண்டியன் வீட்டில் சாப்பிட்டபோது, அவன் கூட இப்படித்தான் தூண்டினான் அதிவீரராம பாண்டியன்!...'—கண்கள் கசிந்தன. ஆனந்த் தியேட் டரில் தானும் அதிவீரராம பாண்டியனும் 'டாக்டர் ஷிவாகோ' படம் பார்த்த நிகழ்ச்சி மனத்திரையில் ஓடியது. தலை சுற்றவே, 'படா'ரென்று குஷன் மெத்தை யிட்ட நாற்காலியில் சாய்ந்து விட்டாள்.

''சாப்பிடம்மா,'' என்று நினைவூட்டிய வீரபாகுவின் கண்களில் பரிமளாவின் தங்கப் பதக்கம் பட்டது. 'உஸ்!...' என்று பாசம் பொங்கிப் புரள, பதட்டத் தோடு ஏதோ சமிக்ஞை செய்தார் அவர்.

குமாரி பரிமளம் பதறிப் போனாள். பொன் விரல் நகத்தைக் கடித்துக் கொண்டாள். வேர்வை கொட்டியது. தலையைக் குனிந்து, சோளியின் மேற்பகுதிப் பொத்தானை அழுத்தமாகப் ;பொருத்தினாள். வெட்கம் பிடுங்கித் தின்றது.

'ஏர்கண்டிஷன்' வசதி பெற்றிருந்த கூடம் அவளுக்குப் புழுங்கியது.

வீரபாகுவை அழைத்தது தொலைபேசி.

மங்களம் சென்று மீண்டாள். "பங்களூர் பங்கஜம் என்கிற" பெண் பேசிச்சு; உங்களைப் பார்க்கிறதுக்கு ராத்திரி வரதாகச் சொன்னிச்சுங்க அத்தான்" என்றாள்; அமைதி கெடாத குரலில் விவரம் குறிததாள், வீரபாகுவின் இனிய பாதி.

"ஓ!...பங்களூர் பங்கஜம்!"

வீரபாகு ஏன் இப்படி விழுந்து விழுந்து சிரித்துக் கொண்டே இருக்கின்றார்?...

# 8. லீலை

திருவாளர் வீரபாகு சிரித்தார்; சிரித்தார்; சிரித்துக் கொண்டே இருந்தார்!

புழக்கத்தில் வந்துள்ள புதிய காந்தி நாணயங்களை மூட்டையாகக் கட்டி, பிறகு, அவற்றை அவிழ்த்துக் கொட்டினால் ரம்மியமானதொரு சத்தம் கிளம்புமே, அப்படி அமைத்திருந்தது அவருடைய சிரிப்பு. சிரிப்பின் மெல்லலைகளுக்கு மத்தியில் அவர் தத்தளித்தார்; தவித்தார்; தடுமாறினார். அவருக்கு இடையில் அந்தச் சிரிப்பு விளையாடியது.

கை ஈரம் உலரவில்லை.

"ஓ!...பங்களூர் பங்கஜம்!"

மோனத் தவம் இயற்றுகிற மாதிரி வீரபாகு தம்முடைய சிறிய கண்களை அரைக்கணம் மூடிக்கொண்டார். உதட்டுக்கரையில் கனவின் மயக்கம் நிழலாடிக் கொண்டிருந்தது.

ஓர் அழகுக் காட்சி படம் விரித்தது.

வீரபாகு இப்போது தீராத விளையாட்டுப்பிள்ளை.

பங்களூர் பங்கஜம் இப்பொழுது அவருக்கு விளையாட்டுத் தோழி.

தஞ்சாவூர் கீழ்வாசலில் பாம்பாட்டித் தெருவிலே மணல் வீடு கட்டி இருவரும் விளையாடிக் கொண்டிருந்த நேரம் அது.

என்ன விளையாட்டு, தெரியுமோ?—கணவன்—மனைவி விளையாட்டு.

"நீதான் என் புருஷன்!"

"ஓ!...அப்படின்னா, நீதான் எனக்குப் பெண்டாட்டி!"

"ஊம்!"

சிறுமி பங்கஜத்துக்கு வெட்கம் வந்து விட்டது, வெட்கம்!

சிறுவன் வீரபாகுவுக்கு அந்த வெட்கத்தை ரசிப்பதில் ஒரு பிரியம்.

அவளும் அவனும் சேர்ந்து வீடுகட்டிக் கொண்டிருந்தார்கள்.

வீடு என்றால், மணல் வீடு.

என்னவோ, திடீரென்று அவனுக்குக் கோபம் வந்து விட்டது.

காரணம் இதுதான்.

அவன் படுக்கை அறையை நிர்ணயம் செய்து அமைத்தான.

அவளுக்கு அது பிடிக்கவில்லை.

பின்னே, அவனுக்குக் கோபம் புறப்பட்டதில் ஆச்சர்யம் இல்லைதான்! "நான் சொல்றதுக்கு நீ மறுப்பா சொல்லுறே? போடி, போ!" என்று இரைச்சல் போட்டுக் கொண்டே அந்த மணல் வீட்டை அழித்து விட்டான், வீரபாகு "உன்னோடே 'டு' போட்டுட்டேன். ஆமாம்!" என்று சூள் உரைத்தான்.

சிறுமி பங்கஜம் அழுத கண்களுடன் வீரபாகு மீது கோபம் கொண்டு பிரிந்து விட்டாள்.

மறுநாள், பங்கஜத்தைத் 'தேடி' வந்தது அவனுக்கு. தேடிப்போனான். ஆனால் அவள் வீடு பூட்டிக் கிடந்தது.

வீரபாகு தன்னுடைய எட்டடிக் குச்சில் குந்தியவாறு அழுதான், அழுதான், அப்படி அழுதான். "வீரபாகு, நீ ஏழையாய் இருந்தா என்ன? நான் பணக்காரப் பெண்ணாக இருந்தால் என்னவாம்? நமக்குள்ளாலே, ஜாதியோ அல்லது பணமோ குறுக்கிடவே குறுக்கிடாது! நாம ரெண்டு பேரும்தான் புருஷன்—பெண்சாதி ஆகப்போகிறோம்!" என்று அடிக்கடி ஆசை காட்டிப் பேசிய சிறுமி பங்கஜம் எங்கே போனாள்? பூட்டிய வீட்டை ஏக்கத்தோடு, கண்ணீரோடு, ஆற்றாமையோடு பார்த்தான் வீரபாகு. மனத்தில் பூட்டிய பங்கஜத்தைச் சுமந்து கொண்டு தன்னுடைய குடிசைக்கு வந்தான்.

காலம் ஓடியது.

ஆனால் வீரபாகு மட்டும் நின்று கொண்டேயிருந்தான்—விடலைப் பிள்ளையாக! கூலியின் அருமைத் திருமகள் மங்களம், போர்ட்டர் மகன் வீரபாகுவுக்கு மனைவியாக நிச்சயம் செய்யப்பட்டாள். 'பங்கஜம்' நான் உன்னோடு போட்ட 'டு'வைக் கலைக்காமலே நாம

ரெண்டு பேரும் திசை மாறிப் பிரிஞ்சு போகும்படி விதி பண்ணிட்டுதே?' என்று கலங்கினான்.

மங்களம் வந்தாள்; மகாலட்சுமியாக வந்தாள். வீரபாகு—மங்களம் தம்பதி சென்னைக்குக் குடி வந்தார்கள். சென்னைத் துறைமுகத்தில் அவனுக்கு வேலை கிடைத்தது. உயர் அதிகாரியாக இருந்த வெள்ளைக்காரர் டேவிட் லாரென்ஸின் திரண்ட சொத்துக்கு வீரபாகு உடையவன் ஆனான்.

ஒருநாள், வீரபாகு வடக்குக் கடற்கரைச் சாலையில் காரில் சென்றபோது, எதிர்த்து வந்த டாக்ஸி ஒன்று அவனுடைய கார்மீது மோதப் பார்த்தது—நம்முடைய தமிழ்ப் படங்களில் வருகிற மாதிரி.

விதி. விபத்தைப் பிரித்தது. ஆனால், பிரித்து விட்ட பங்கஜத்தையும் வீரபாகுவையும் அதே விதி ஒன்று கூட்டியது. "நான் ஈவினிங் வாரேன்!" என்று சொல்லிவிட்டு அவசரமாகப் போய்விட்டாள் பங்கஜம்.

அந்த விளையாட்டுத் தோழிதான் இந்தப் பங்களூர் பங்கஜம்!...

வீரபாகு நெடுமூச்செறிந்தார்.

டிங்!...டிங்...டிங்!

டன்லப் ஆசனம் வீரபாகுவுக்கு சுகமாகவும் இதமாகவும் இருந்தது. ஆனால் அந்தச் சுகம் அவருடைய மனததுக்கு ஏனோ ஆதரவான ஆறுதலை அளிக்க மறுத்தது. அவரது இதயம் இன்னமும் கடந்த காலததிலேயே நின்று ஊசலாடியது. அதன் விளைவாக, கண்கள் கசிந்தன. கெட்டிக்காரத் தனமாக சமாளித்துக் கொண்டார் அவர்.

எத்தனை எத்தனையோ விஷயங்களைச் சமாளித்தவர் அவர். இது ஒரு பெரிய காரியமல்லதான். ஏனென்றாலும் பங்களூர் பங்கஜம் அவரை உள்வட்டமாகச் சுற்றிச் சுற்றி வநது கொண்டிருந்தாள்.

"மங்களம்!" என்று அன்புடன் விளித்துக் கொண்டே கீழ்ப்புறத்தில் பார்வையைத் திருப்பினூர் அவர்.

மங்களத்தின் முகத்தில் தீவிரமான சிந்தனைக் கோடுகள் நெளிந்து கிடந்தன.

கொண்டவரின் அன்புக் குரலுக்கு, "ஏனுங்க, அத்தான்!" என்று பதில் குரல் கொடுத்துக் கொண்டே முன்னேறி வந்தாள். இருமல் நல்ல வேளை, விழித்துக் கொள்ளவில்லை!

"போன் செஞ்சுதே பங்களூர் பங்கஜம், அது நம்ம வீட்டுக்கு எப்போது வாரதாகச் சொன்னிச்சு?"

"அஞ்சு மணிக்கு வந்திடுறதாகச் சொன்னிச்சு துங்க!"

"ஓ!" என்று வீரபாகு தலையை ஆட்டிக் கொண்டார். உள்மனத்தில், அவருடைய செயல் திட்டங்களுக்கான நடவடிக்கைக் குறிப்புகள் நிழலாடின. மீண்டும் பெருமூச்சுக் கிளம்பியது. 'பங்கஜம் வந்தால், முதல் காரியமாக, 'டு'வைக் கலைத்து விட்டு, 'ராசி' ஆகிவிட வேணும்!'—இந்த முடிவே அவருக்கு மகத்தான ஆறுதலாகவும் அமைந்தது.

பரிமளத்தின் ஞாபகம் வீரபாகுவை அணைந்தது. சாப்பிட்டுக் கொண்டிருக்கையில் அவளிடம் "உஸ்!" என்று ரகசியமாக அடையாளம் காட்டிய நிகழ்ச்சியை யும் அதன் பேரில் அவள் தவித்த தவிப்பையும் அவரால் மறக்கவே முடியவில்லை. 'அம்மா பரிமளம்!' பாசம் அவரை ஆட்டிப் படைத்தது.

பாசம் வீரபாகுவின் தரப்பிலும், பரிமளத்தின் தரப்பிலும் நின்று வேடிக்கை காட்டியதோ?

'வேடிக்கையான பெண் பரிமளம்!...குறையும் நிறையும் கொண்ட புதுமைச் சித்திரம் இந்தத் தங்கம்! என்னோட மங்களத்தின் பிளான்படி காரியங்கள் முடிஞ்சிட்டா, அப்பறம்தான் எனக்கும் நிம்மதி

கிடைக்கும்; என் மங்களத்துக்கும் நிம்மதி கிடைக்கும்!' மனப் பாம்பு நினைவுச் சட்டைகளை உரித்தது.

வீரபாகு, சற்றுமுன் தொலைப்பேசியில் அழைத்துப் பேசிய அதிவீரராமபாண்டியனைப் பற்றி எண்ணம் இட்டார்.

'நேர்மையான — சத்தியமான — மனிதாபிமானம் கொண்ட ஒரு எழுத்தாளன்தான், சமுதாயத்தின் முதற் காவலன்! ஆனால், இந்த அதிவீரராம பாண்டியனுடைய வக்கிரச் சித்தாந்தமும் விபரீதமான வாழ்க்கை முறையும்தான் அவரோட கதைகளுக்குக் கருவாகின்றன: மற்றவங்களைச் சமுதாயப் புல்லுருவி என்று சொல்கிற இந்தப் புண்ணியவான்தான் ஒண்ணாம் நம்பர் விரோதி!

இவனை நம்பியிருக்குதே எங்க பரிமளம்!...என்ன ஆகுமோ, எப்படி முடியுமோ என்கிறது ஒரு பெரிய சஸ்பென்ஸாக இருக்குது!...ஆனா, எங்க பரிமளம் இந்த அதிவீரராம பாண்டியனை லேசில் சும்மா விட்டு விடாது. ஆமா, அது மட்டும் நிச்சயம்.'

தம்மைச் சந்திக்க மாலையில் வருவதாகக் கூறிய அந்தச் சிறுகதை மன்னனின் வார்த்தைகளையும் அவர் மறந்து விடவில்லை.

பரிமளத்தைப் பெயரிட்டு அழைத்தார் வீரபாகு.

பரிமளம் நடந்து வரும் அழகாக—நடத்தி வரும் அழகின் சிரிப்பாக பையப் பைய நடந்து வந்து நின்றாள். பதட்டத்தோடு பதட்டமாக, மறுபடியும் தலையைக் குனிந்து, தன்னுடைய சோளியின் மேல் பொத்தான் சரிவர பொருத்தப்பட்டிருக்கிறதா என்று சோதித்துக் கொள்ளவும் அவள் மறந்து விடவில்லை. வலது கைப் பூவிரலால் நெற்றியில் பாதை தவறிக் கிடந்த இரண்டொரு மயிரிழைகளைக் கோதி விட்டுக் கொண்டே, "என்னாங்க ஐயா?" என்றாள்.

இப்போது இவள் கைகள், காது வளையங்களிலும் மார்புச் சங்கிலியிலும் மாறி மாறி விளையாடின.

வீரபாகு பரிசளித்த அந்தத் தங்கச் சங்கிலியை அவள் எங்ஙனம் மறப்பாள்?

'ஐயா என் பேரிலே அத்யந்தப் பாசம் வச்சிருக்காங்க. அவுங்களோட இந்த அன்புக்கு நான் எவ்வளவோ கடமைப்பட்டிருக்கேன். சொந்தப் பொண்ணு போலவே நினைச்சுக்கிட்டு பாசம் காட்டி வர்றாங்க அம்மா குஞ்சு குளுவான் இல்லாத குறையை என் மூலம் போக்கிக்கிட முயற்சி செஞ்சுகிட்டு வருற தாகவும் அடிக்கடி சொல்லுறாங்க. அவங்களோட ஆசைப் பிரகாரம் நான் 'ஓ கே' சொல்லிட்டா, எல்லாமே 'ஓ கே'தான்!' முகப்பருக்கள் சில அழகுக் காட்டின.

காலம் கரைந்தது.

காலம் காக்கை அல்லவே!

"அம்மா பரிமளம்! அதிவீரராமபாண்டியன் விஷயம் என்னம்மா ஆச்சு?" என்று நேரிடையாகவே விசாரிக்கலானார் வீரபாகு.

இப்படி அவர் எடுத்த எடுப்பில் கேள்விக் கணை தொடுப்பாரென்று அவள் துளிகூட எதிர்பார்க்க வில்லை. கேள்வி விளைத்திட்ட அதிர்ச்சி தன் நெஞ்சை நெருஞ்சி முள்ளாகக் குத்திய உணர்வையும் அவளால் அனுபவிக்க முடிந்தது. வேதனையின் சுமை அவளுடைய எழில் மண்டிய நெஞ்சகத்தை எம்பித் தணியச் செய்தது. சிந்திக்க நேரமில்லை.

அதிவீரராம பாண்டியனோடு பழக்கம் ஏற்பட்ட பதினேழு மாதங்களாக அவள் சிந்திக்காததைவிட, இனிமேல் புதியதாகவா அவள் சிந்தித்துவிடப் போகிறாள்? எதைச் சொல்வது? எதைச் சொல்லாமல் இருப்பது?

சோளிக்குள் ஒளிந்திருந்த அதிவீரராம பாண்டியனை அம்பலப்படுத்தி விடலாமா? யார், யாரை அம்பலப்படுத்துவது...?

மிஸ்டர் அதிவீரராம பாண்டியனை நான் அம்பலத்துக்குக் கொண்டு வர நினைச்சு, அதனாலே, நானே

அம்பலத்திலே கொண்டு வந்து நிறுத்தப் பட்டால்?... பயம் துளைத்தது. மறுகணம் புத்தம் புதிய நெஞ்சுரம் விளையத் தொடங்கியது.

"அம்மா பரிமளம்!"

"ஐயா, உங்க கேள்விக்குப் பதில் சொல்லிடுறேனுங்க. மிஸ்டர் அதிவீரராம பாண்டியன் தான் என்னோட லட்சியக் காதலர். ஆனா, நான் அவரோட லட்சியக் காதலிதானா என்கிற உண்மையையோ அல்லது ரகசியத்தையோ அல்லது தருமத்தையோ அவர்தானுங்களே தீர்மானிக்க முடியும்?...பெண் பொறுமையின் அவதாரமாக மட்டும் இருக்கக்கூடாது. அவள் புரட்சியின் மறுபதிப்பாகவும் இருக்க வேணுமுங்க ஐயா!"

குமாரி பரிமளம்தானா பேசுகிறாள்?

உணர்ச்சி வசப்பட்டார் வீரபாகு. சாய்ந்திருந்தவர் நிமிர்ந்து உட்கார்ந்திருந்தார். "பேஷ்" என்று சொல்லியவாறு, எழுந்தார், பரிமளத்தை நெருங்கினார்

முதுகில் தட்டிக் கொடுக்கத் துடித்தன கைகள். நீண்ட கைகள் பின்வாங்கின. 'எனக்கு ஏது அந்த உரிமை? நான் துரதிர்ஷ்டம் பிடித்தவன், எனக்கு அந்தப் பாக்கியம் கிடைக்குமா? நாங்க பெற்ற பொண்ணு இது? முருகா..! புதுப்புனலாகப் பொங்கிப் பெருகி வந்த கண்ணீரை இப்போது அவர் கட்டுப் படுத்தவில்லை.

"அம்மா, உன் இஷ்டப் பிரகாரம் செய்யம்மா!...!" என்றார் உணர்ச்சிக் கொந்தளிப்பில் அவர் தம்மை மறந்தார். பரிமளத்தின் பூங்கரங்களைப் பற்றினார். அந்தப் புனிதக் கரங்களுக்கு ஆயிரம் முத்தங்கள் வாரி வழங்கினார்.

உணர்ச்சிப் பிழம்பானாள் குமாரி பரிமளம் தன் கண்களைத் துடைத்துக் கொள்ள மறந்து, வீரபாகுவின் கண்களைத் துடைத்து விட்டாள் அவள்.

மங்களம், "கண்ணே பரிமளம்!" என்று நெஞ்சுக்குள் நெஞ்சாக இயங்கி, தனக்குத்தானே தேம்பினாள்.

அப்போது:

வாசல் திரையை விலக்கிக் கொண்டு வந்து நின்றார் பங்களூர் பங்கஜம்!

அந்தச் சிங்காரி இரண்டாக மடித்து வைத்திருந்த மஞ்சள் பத்திரிகையில், "சென்னை லட்சாதிபதி வீரபாகு—அருமை அழகி குமாரி பரிமளா களக் காதல் லீலைகள்!" என்ற வாசகங்கள் துலாம்பரமாகத் தெரிந்தன!

# 9. பூந்திரை

குமாரி பரிமளம் கண்ணீர் சொரியும் மோகினிப் பதுமையென நின்றாள்!

அவள்பால் மொய்த்திருந்த பார்வையைத் திசை திருப்பினார் வீரபாகு. அவரது இதயத்தின் பாசக் கடலிலே அன்பின் அலைகள் ஆர்ப்பரித்த வண்ணம் இருந்தன. 'அம்மா பரிமளம்! கண்ணே பரிமளம்!' என்று அவருடைய உள்மனம் ஆனந்தக் கூத்தாடியது. மனைவி மங்களத்தை நோக்கினார் லட்சாதிபதி வீரபாகு.

மங்களம் அப்போதுதான் தனக்குச் சொந்தமான விழியின் நீரை பட்டுப் புடவையின் முந்தானையால் ஒற்றியெடுத்தாள்.

கொண்டவளின் நிலை, கொண்டவரை ஆட்கொண்டிருக்க வேண்டும்.

"அம்மா பரிமளம்! வந்து..." ஏதோ சொல்ல விழைந்தார் வீரபாகு.

அதற்குள், "ஐயா, யாரோ வந்து நிற்கிறாங்க!" என்று செய்தி தெரிவித்தாள் பரிமளம். அவசரம் அவசரமாக தன் கண்களைச் சுத்தப்படுத்திக் கொண்டு, ஓர் ஓரமாக ஒதுங்கி நின்றாள். தன்னுடைய கரங் களுக்கு அன்பு முத்தங்கள் கிடைத்த நிகழ்ச்சியில் அவள் மனம் மீண்டும் ஊடாட முயன்றது போலும்!

தங்கச் சங்கிலியை பூவிரல்கள் நெருடின. அந்தத் தங்கப் பதக்கத்தில் வீரபாகுவின் பாசஉள்ளம் நிழலாடி யிருக்கும்!

"யாரது?" என்று கேட்டுக்கொண்டே, முகத்தைத் துடைத்தவாறு, கூடத்தின் நிலைப்படியை நோக்கிப் பார்வையைச் செலுத்தினார் வீரபாகு. கண் கொட்டும் பொழுதிற்கு அவர் கண்களை மூடிக்கொண்டார். மறுபடி கண்களைத் திறந்தார். "பங்கஜம்!" என்று தம் இதயத்தின் தவிப்பை—தாபத்தை—அன்பை எல்லாம் ஒரே குரலில் கூட்டிச் சேர்த்துக் குதூகலத்தோடு விளித்தார் அவர். இடது புருவங்கள் துடித்தன.

பங்கஜம்—சிங்காரி பங்களூர்ப் பங்கஜம், சௌக் கியமா?" என்று நாணத்தின் மீதூர்ந்து குசலம் விசாரித்தாள்.

"ஓ!"

சிரித்தார் வீரபாகு.

அருகில் நின்ற நிலைக் கண்ணாடியில் வீரபாகுவும் பங்கஜமும் விழுந்தார்கள். காயம் ஏன் விழப்போகிறது?

நரைத்த முடிகள் சில காற்றில் பறந்து, ஆடியில் ஆடின.

பங்கஜத்தின் சுருள் முடிகள் எவ்வளவு கறுமை பூண்டு திகழ்கின்றன!

பங்கஜத்தின் மீது ஏவிய கண்களை இன்னமும் மீட்கவில்லை வீரபாகு. அவருடைய இதயத்தின் இதயத்திலே விதியின் விதியாக, சிதைக்கப்பட்ட

மணல் வீடு ஒன்று காட்சியளித்துக் கொண்டிருந்ததை இவர் எப்படி மறப்பார்?

சுய்ப்பிரக்ஞை மீண்டது.

நீர்த்திரை விரிந்தது.

பூந்திரை அசைந்தது.

அந்தரங்கத்தின் மனச்சாட்சி மெள்ளச் சிலிர்த்தது. பதட்டம் சூழ, வீரபாகு பின்புறம் திரும்பினர். தனக்கு முந்தானை போட்ட புண்ணியவதி வேடிக்கை பார்ப்பது மாதிரி நின்ற அதிசயத்தை அவர் கண்டார். "மங்களம்!" என்று மென்குரலில் கூப்பிட்டு ஓரக் கண்ணுல் ஜாடை காட்டினர்.

மங்களம், கன்னிப் பெண்ணைப் போன்று நாணப்பூ மணந்திட, முன்னேறி வந்தாள்.

பங்கஜத்தின் கண்களும் மங்களத்தின் கண்களும் சந்தித்துப் பிரிந்தன.

அக்காட்சியின் கனிவில் மனம் கனிந்தார் தொழி லதிபர் வீரபாகு

"பங்கஜம், இது என் மங்களம். எனக்கு மங்களம் தந்த மகராஜி!..." என்று பெருமை துலங்க அறிமுகப் படுத்தலானுர் அவர்.

"உங்களைச் சந்திப்பதிலே ரொம்பவும் மகிழ்ச்சி அடைகிறேன்" என்று ஆங்கிலத்தில் சொல்லியபடி, மங்களத்துக்குக் கைலாகு கொடுக்க முனைந்தாள் பங்களூர்ச் சிங்காரி.

புடவை ஒயில் கூட்டியது. டெர்டோன் ஸில்க் வெள்ளை நிறம்!

"வணக்கமுங்க!" என்று நாசூக்காக கைகளைக் குவித்து வணக்கம் சொன்னுள் மங்களம். இருமலுக்கு நேரம் காலம்—சமய சந்தர்ப்பம் கூட தெரிந்

திருந்ததோ? மூச்சுக் காட்டவில்லை. அவள் மூச்சு விட்டாள். "எனக்கு இங்கிலீஷ் ஞானம் இல்லீங்க் பங்கஜம்! எஸ்...ஐ ஆம் ட்ரூ!..." என்றாள்.

சிரித்தாள் பங்கஜம். எதையும் 'மெல்லியதாக எடுத்துக் கொள்ளப் பழகிய சிரிப்போ?

ஃ ஃ ஃ

வீரபாகுவின் உதட்டுக்கரையில் நமட்டுப் புன்னகை அலைமோதியது; "நான் ஒரு நாளைக்கு ஆயிரம் வாட்டி சொல்வேனே பங்கஜம், பங்கஜம்னு, அந்தப் பொண்ணு இதுதான்!" என்று மனைவியிடம் தெரிவித்தார் அவர்.

"அப்பவே! புரிஞ்சுக்கிட்டேனுங்களே அத்தான்!" என்று பான்மையுற முறுவல் சேர்த்தாள் வீரபாகுவின் இனியபாதி.

"ஸிஸ்டர் ரொம்ப குறும்புக்காரங்க போலிருக்கு. பேச்சு பூராவுமே ரொம்ப அழகாய் வந்து விழுதே!... ஊம், இவங்களே இப்படியென்றால்; உங்க குழந்தை குட்டிகளோட குறும்புத்தனத்துக்கு எல்லையே இருக்காது!—" என்று களிமிளிரச் சொல்லிக் கொண்டே, இடது தோளில் தொங்கிய 'ஏர்ரிட்ஸ்' பையை எடுத்து அதிலிருந்து வட்டவடிவமான ஒரு டப்பாவை எடுத்தாள் பங்களூர்ப் பங்கஜம்.

உறுமிப் பாயத் துடிக்கும் பயங்கரப் புலி அந்த டப்பாவின் முகப்பில் தரிசனம் கொடுத்தது.

வீரபாகு—மங்களம் தம்பதி கல்லாய்ச் சமைந்து விட்டார்கள்.

"ஸிஸ்டர், உங்க குழந்தைகளைக் கூப்பிடுங்க!"

வீரபாகுவின் நெஞ்சத்திலே மடைகட்டியிருந்த கண்ணீர், கண்களுக்கு மேலே பொங்கியது. "மங்களம்!" என்று தாழ் குரலில் அழைத்து, பரிவுடன் அவள் கண்களைத் துடைத்தார் உடைமைக்காரர். 'பரிமளத்தை அறிமுகப்படுத்த மறந்திட்டேனே!'

வேதனை இரட்டித்தது. சிந்தனை வசப்பட்டிருந்த பரிமளத்தை நெருங்கினார் வீரபாகு.

° ° °

புதிய விருந்தாளிப் பெண்மணியை ஓரக்கண்ணால் பார்த்தவளாக, மென்மையான எளினம் பூத்த வெட்கத்தோடு நின்ற குமாரி பரிமளம் மெள்ள விழிகளை உயர்த்தினாள்.

பரிமளத்தின் கைகளைப் பற்றிக் கொண்டு, பங்கஜத்தை நோக்கி நடந்தார் வீரபாகு. ''பங்கஜம்! எனக்கு இந்தப் பெண்தான் குழந்தை!'' மங்களத்தையும் வீரபாகுவையும் பங்கஜம் மாறிமாறிப் பார்த்தாள். அதே பார்வையால் குமாரி பரிமளத்தையும் அளந்தாள். மூடி எடுக்கப்பட்டிருந்த டப்பாவில் பலதரப்பட்ட பிஸ்கட்கள் காட்சியளித்தன. ''இந்தாம்மா!'' என்று பரிவுடன் சொல்லி, ரொட்டிப் பெட்டியையே அவள் வசம் ஒப்படைத்தாள் பங்கஜம்.

பரிமளம் அதை வாங்கிக் கொண்டு மங்களத்தை அண்டி, அவளிடம் ஒரு நெய் ரொட்டியை நீட்டினாள்.

''நீ சாப்பிடம்மா!'' என்றாள் மங்களம்.

''நீங்கதான் முதலிலே சாப்பிட வேணும்,'' என்று சொன்னாள் பரிமளம். பிறகு வீரபாகுவை நெருங்கினாள் ''இந்தாங்க, உங்களுக்கு,'' என்று கூறி, அவருக்கும் ஒரு பிஸ்கட் கொடுத்தாள். அப்புறம் இன்னொரு ரொட்டியை எடுத்து, அதை பங்கஜத்திடம் கொடுத்தாள்.

''பரிசளிக்க வாங்கி வந்த உங்களுக்குக் கொடுக்காட்டி நாகரிகமாக இருக்குமா?'' என்று நகை சிந்தினாள் அவள்.

பரிமளத்தை ரொம்பவும் பிடித்து விட்டது பங்களூர் பங்கஜத்துக்கு ''உங்க டாட்டர் ரொம்பவும் சூட்டிகையாக இருக்குதுங்களே, மிஸ்டர் வீரபாகு!'' என்று பாராட்டுத் தெரிவித்தாள் அவள்.

"நீங்க சொல்றது செண்ட் பெர்சண்ட் கரெக்ட்! பரிமளம் ஒரு தனிப் பிறவி. நீங்க தான் எங்க விருந்தினராக இங்கே இருக்கப் போறீங்களே, அப்போ பாருங்களேன் எங்க பரிமளத்தோட விளையாட்டுகளை!" என்று பெருமையோடு பேசினார் திருவாளர் வீரபாகு. அப்போதுதான் அவருக்கு ஒரு விஷயம் தெரிய வந்தது. வந்த பங்கஜம் உட்காராமல் இன்னமும் நின்று கொண்டே அல்லவா இருக்கிறாள்?

"எக்ஸ்கியூஸ்மி ப்ளீஸ்! உட்காருங்க, பங்கஜம்!" என்று கேட்டுக் கொண்டார்.

"அப்படியே உட்காருங்க, பங்கஜம். இனி, உங்க வீடாட்டம்," என்றாள் மங்களம். பிறகு ஒரு பொத்தானை அழுத்தினாள்.

வரவேற்புக் கூடத்தில் குளிர்ச்சாதன அமைப்பு பரவத் தொடங்கியது.

"நீயும் உட்கார் பரிமளம்" என்றார் வீரபாகு. இன்னுயிர்த் துணையை நோக்கித் திரும்பினார். "மங்களம், காப்பி கொண்டு வருகிறாயா?" என்று கேட்டார் அவர்.

"ஆகட்டுங்க," என்று சொல்லி மங்களம் உள்ளே விரைந்தாள்.

அவளுடன் இருமலும் விரைந்தது. அவளுக்குத் துணை வேண்டும், பாருங்கள்!...

வீரபாகுவும் குமாரி பரிமளமும் ஒரே ஆசனத்தில் அமர்ந்தனர்.

ஃ ஃ ஃ

காலம் என்னும் மணல் வெளியில் நினைவுச் சுவடுகளாக அமைந்திட்ட அந்த நாட்களை—இன்பம் மிகுந்த அந்த நாட்களை—கனவின் நினைவாகவும் கனவின் ஆதரிசமாகவும் விளங்கிய அந்த நாட்களை எப்படி மறப்பார் வீரபாகு?

பங்கஜத்தோடு மணல் வீடு கட்டி விளையாடிய பழைய நிகழ்வு, புதிதாகப் பிறந்த பொற்பு போன்று, தம்முடைய நெஞ்சின் அடிவாரத்தில் படம் காட்டிக் கொண்டேயிருந்தது. 'பங்கஜத்தோடு போட்ட டூவைக் கலைச்சிட்டு அதோடு 'ராசி' ஆகிடவேணும்! நினைவு உயிர்த் துடிப்பாக வாய்த்து விட்டது.

இதே மணல் வீட்டுப் பழங்கனவில்தான் பங்கஜமும் மனம் பின்னிக்கிடந்தாளோ, என்னவோ? தீவிரமான சிந்தனை அவள் மாநிற நெற்றியில் விளைந்திருந்தது. தலைமுடி மட்டும் விஜயலட்சுமி பண்டிட்டை நினைவூட்டியது. வயதின் தளர்ச்சியை உடற்கட்டு காட்டினாலும், முகவெட்டு வயதைக் குறைத்தே காண்பித்தது. இவளுக்கு நாற்பது இருக்கலாம் வீரபாகுவை விட ஏழெட்டு வயசு குறைவு. பரவாயில்லைதான். தலைமுடியில் எங்காவது ஓரிடத்தில் துளி பூச்சரத்தைச் செருகி வைத்திருக்கக் கூடாதோ? நாகரிகம் மங்களப் பூக்களையும் முற்றுகை இட்டுவிட்டதோ? அவள் சிந்தனை இன்னமும் கட்டுக் குலையவில்லை அருகில், தொடையை உரசிக் கொண்டு கிடந்தது அந்த மஞ்சள் பத்திரிகை.

அந்த மஞ்சள் பத்திரிகையில் அச்சாகியிருந்த தலைப்பு வரிகள் இப்போது இன்னமும் கூடுதலான பிரகாசத்தோடு பொலிந்தன.

"சென்னை லட்சாதிபதி வீரபாகு—அனாதை அழகி குமாரி பரிமளம் காதல் லீலைகள்!"

எழுதிச் செல்லும் விதியின் கைதான் இந்தத் தலைப்பு வரிகளையும் எழுதியதோ?

வீரபாகுவுக்கு ஆயிரம் சிந்தனைகள்! அவர் பார்வையில் அந்தப் பத்திரிகை இன்னமும் படுத் தொலைக்கவில்லை.

பரிமளம் இப்போதுதான் தன்னைப் பற்றிய நினைவில் கட்டுண்டாள். தேவமனோஹரியோடு பாண்டிய

பஜார்ப் பகுதியில் பேசிக் கொண்டிருக்கையில் சிறுவன் ராமையா பயமுறுத்திச் சென்றது; தோழி தேவ் ம்ேஹரி முதலில் கொடுப்பது போல் அதிவீரராம பாண்டியனின் கடிதத்தைக் கொடுத்து விட்டு, பிறகு, பறித்துக் கொண்டது; காலையில் முருகன் சந்நிதியில் குருக்கள் புண்ணியக் கோடியைக் கண்டு மருண்டு ஓடியது; அப்பால், பஸ் நிற்கும் இடத்தில் அவர் பரிவுடன் அவளுக்கு 'இதோபதேசம்' செய்தது, இப்படிப் பல தரப்பட்ட சம்பவங்களை யெல்லாம் ஒரு நொடியில் குழம்பிக் கொள்ள மறந்துவிட வில்லை அவள்.

அவை எல்லாவற்றுக்கும் மேலாக, அதிவீரராம பாண்டியன் தன்னை ஆசை காட்டி மோசம் செய்த சம்பவமும் அதன் நிமித்தம் அவள், அவனைத் தேடி இரவு பூராவும் அயல் இடம் ஒன்றில் தவம் இருந்த நிலையும், அந்த நிலைக்கு உயிர்ப்பாகவும்—உயிர்ப் போராட்டமாகவும் அமைந்து விட்ட தவச்சோதனை யையும் அவள் எண்ணினாள்.

"மிஸ்டர் அதிவீரராம் பாண்டியன்! தமிழச்சி படைத்திட்ட சரித்திரம் உங்களுக்கு—இலக்கியவாதி யான உங்களுக்கு—அறிவு பூர்வமாகவும் உணர்ச்சி பூர்வமாகவும் வாழ்க்கையை அணுகி ஆராய்ந்து உங்கள் படைப்புக்களை அளிப்பதாகத் தம்பட்டம் கொட்டி வருகிறீர்களே, அந்தக் கருவத்துக்கு—அதாவது உங்களுடைய அந்தக் கருவத்துக்கு நான் ஒரு சவால் ஆகி விட்டேன்....என் கற்பு ஒரு சோதனைப் பொருளாக்கி விட்டீர்கள் ...ஆனால், பாவம் என் னுடைய நெஞ்சக் கனவின் உயிர்க் கனலை நீங்கள் அறியமாட்டீர்கள்! காலம் நம் இரண்டு பேர் சரித் திரத்தையும் படைத்துக் காட்டும் ஒரு புதிய தத்துவம், தமிழ் மண்ணுக்குக் கிடைக்காமல் போகாது! என்னைச் சந்திக்கத் தயாராக இருங்கள், அன்பிற்குகந்தவரே!"

நேற்றிரவு. இந்த அப்பாவிப் பெண் பரிமளம் தான் இவ்வாறு பேசினாள்?

சில கணப் பொழுதுக்கு மதயானையாக ஆகிவிட்ட மனம் இப்போது பால் பசுவாக மாறியது.

குளிர்ச் சாதனம் இயங்கிக் கொண்டுதான் இருந்தது.

ஆனால், பரிமளத்தின் நெற்றியிலும், கழுத்துப் புறத்திலும் மூக்கின் நுனியிலும் வேர்வை வழிந்தது. கவனம் சேர்த்து, சேலைத் தலைப்பை நுனி எடுத்து சேர்த்து, அதில் வேர்வை முத்துக்களைச் சேர்த்தாள் அக்கன்னி.

மூக்குத்தி பளிச்சிட்டது.

திருஷ்டி மச்சம் அற்புதம்!

தங்கப் பதக்கம் மின்னியது.

ஆனால், அவளுடைய சோளிக்குள் 'அனந்தசயனம்' புரிந்த மிஸ்டர் அதிவீரராம பாண்டியன் மட்டும் மூச்சுப் பேச்சில்லாமல் அஞ்ஞாதவாசம் செய்தான்!

∴ ∴ ∴

இதோ, காப்பி தயார்!

"அத்தான்" என்று அலட்டினாள் மங்களம்.

வேலைக்காரி காப்பிக் கோப்பைகளை டீபாயில் வைத்தாள்.

வீரபாகுவுக்கு பங்கஜத்தைப் பற்றி அறிய வேண்டுமென்ற துடிப்பு மிகுந்தது. மனைவியின் காப்பிக் குரல் அவருக்கு இதமாக இருந்தது

சுவர்க்கடிகாரம் நான்கு தடவை ஒலி பரப்பியது.

சாயந்திரம் வருவதாகச் சொல்லி விட்டு முன் கூட்டியே பங்களூர்ப் பங்கஜம் வந்து விட்டாள்!

பங்கஜம் சுய உணர்வு கொண்டதும், பஞ்சு மெத்தைச் சாய்மான ஆசனத்தில் கிடந்த மஞ்சள்

பத்திரிகையை வேதனையின் நெட்டுயிர்ப்போடு மடித்தாள். இடுப்புக்குக் கீழே போட எண்ணியவள், மீண்டும் அதைப் பிரித்தாள். தலைப்புச் செய்தியில் விழிகளை ஓட விட்டாள்.

"மிஸ்டர் வீரபாகு, உங்க பெண்ணோட பெயரைச் சொல்லவே இல்லீங்களே?" என்று ஆவல் ததும்ப விசாரித்தாள் பங்களூர்ச் சீமாட்டி

"ஓ மை குட்னஸ்!...பேரைச் சொல்லலியா?... பரிமளம்னு பெயர்!"

அந்தப் பெயரைக் கேட்டதுதான் தாமதம்; உடனே பங்கஜத்தின் விழிகளினின்றும் திருகிவிட்ட குழாயிலிருந்து நீர் கொட்டுகிற பாவனையில், கண்ணீர் கொட்டியது.

"குமாரி பரிமளம் என்கிறது உங்க டாட்டர் தானா?" என்று தேம்பிய தொனியில் விதியின் ஓங்காரத் தன்மை பூண்டவள் மாதிரி இறைச்சல் போட்டுக் கேட்டாள் அவள்.

'ஆமாம்!...ஏன் பங்கஜம்!"

பதட்டமுடன் நெருங்கினார் வீரபாகு.

தடுமாறினாள், "ஊஹூம் ஒன்றுமில்லை" என்று தயக்கம காட்டிப் பேசினாள்.

வீரபாகுவுக்கு பங்கஜத்தின் தடுமாற்றம் புரியாத புதிராக இருந்திருக்கும்!

"காப்பி சாப்பிடுங்க" என்று உபசாரம் செய்தாள் பங்கஜம். உட்கார்ந்திருந்த இடத்தைவிட்டு ஆடவில்லை; அசையவில்லை.

வீரபாகு அந்த நகைச்சுவைப் பண்பாட்டை வெகுவாக ரசித்தார்.

"தாங்க்யூ, பங்கஜம்!" வீரபாகுவுக்குக் காப்பி என்றால், பிராணன்!

பங்களூர்ப் பங்கஜம் அவசரம் அவசரமாக, கையி லிருந்த அந்த மஞ்சள் பத்திரிகையைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்து வீசினாள்!...

கிழிக்கப்பட்ட விதியின் எழுத்துக்கள் அல்லவோ அந்தக் கிழிசல்கள்?...

# 10 'ஓ!'...

தமிழ்ச் சமுதாயம் விசித்திரமானதோர் அமைப் பினைக் கொண்டது. அதற்கென விதிக்கப்பட்ட விதி முறைகளை மீறுவதிலும், அதற்கு இணங்காத விதி முறைகளை வலியச் சோதித்துப் பார்ப்பதிலும் எப்பொழுதுமே அதற்கு இயல்பாகவே ஒருவகைப் பட்ட நாட்டம் இருந்து வருகிறது

ஆம்; வேடிக்கையான இந்தப் பரிசோதனை விளை யாட்டில் அங்கம் வகிக்கும் தமிழ்ச் சாதியின வினைத் திட்பமும்கூட. வேடிக்கையானதொரு சமூக விளைவு தான் போலும்!...

பூக்கற்கள் பாவி பூவிரிப்பு பரப்பப்பட்டிருந்த அந்தப் பங்களாக் கூடத்தின் 'மொஸைக்' தளத்தில் மௌனமான சோகம் போல, காகிதக் கிழிசல்கள் சிந்திச் சிதறிக் கிடந்தன.

பெங்களூர்ச் சீமாட்டி பங்கஜம் நல்ல மூச்சை நயமான பாவத்தோடு மெள்ள மெள்ளப் பிரித்து விட்டவாறு, தாழ்ந்திருந்த விழிகளை மேலே உயர்த் தினாள். அவள் எதிர்பார்த்த மாதிரி, இன்னமும் காப்பியை ரசித்துப் பருகுவதில்தான் லட்சாதிபதி வீரபாகு சிந்தை செலுத்தியிருந்தார்.

'மிஸ்டர் வீரபாகு—குமாரி பரிமளம்!'—இரு பெயர் களையும் ஒன்றோடொன்று சேர்த்துப் பார்த்து, அப் பெயர்களைத் தனக்குத்தானே சொல்லிப் பார்த்துக்

கொண்ட நேரத்தில், அவளுடைய ரத்தம் கொதித்தது. பயம் செறிந்த சஞ்சலம் அவளை ஆட்டிப் படைத்தது.

'சென்னை லட்சாதிபதி வீரபாகு—குமாரி பரிமளம் காதல் லீலைகள்!' என்று அந்தப் பங்களூர் மஞ்சள் பத்திரிகை அபாயம் காட்டியிருந்த வாசகங்களை எண்ணினாள். மீண்டும் நினைத்துப் பார்க்கவே கூசியது. ஆனாலும், எண்ணமிட்டாள். விளைந்தது மகத்தான சோகம்!

'சே! எத்தனை அருவருப்பான கணிப்பு!... பங்களூர்ப் பத்திரிகைக்காரருக்கு இதயமே இல்லை போலிருக்கே!...ஊம்; இதயம இருக்கோ என்னவோ? அது அவனைப் படைத்திட்ட ஆண்டவன் கவலைப்பட வேண்டிய விஷயம்'

ஆனா, குமாரி பரிமளத்தை—எங்க வீரபாகுவோட மகள் பரிமளத்தை எப்படி சந்தியிலே இழுத்து நிறுத்திட்டான் பங்களூர்க்காரன் கோகுலபாலன்! குமாரி பரிமளம் கன்னிப் பூ!—நாளைக்குக் கல்யாணம் ஆக வேண்டிய சின்னஞ் சிறுசு....அடப் பாவி!...அவனுக்கு நல்லப் பாடம் சொல்லித்தர வேணும்!"

ஆத்திரம் சபதத்தின் உருக் கொண்டது.

கண்ணீரை டவலினால் துடைத்துக் கொள்ள வேண்டியவள் ஆனாள் பங்கஜம். மூக்கை உறிஞ்சுக் கொண்டாள், புனிதம் நிறைந்த அழகான ரோஜாப் பூவின் மணம் அவள் நெஞ்சின் அடித்தளத்தில் புறப் பட்டது. பரவியது. 'ஓ...பரிமளம்!' அந்தப் பெயரை உச்சரித்துப் பார்த்ததினால் ஏற்பட்ட நூதனமான பாசச் செறிவோடு, பக்கவாட்டில் பார்வையைத் திருப் பினாள் அவள்.

பரிமளம், பிஸ்கட் டப்பாவின் மேல் மூடியில் இருந்த பாய்ச்சல புலியின் சித்திரத்தை ரசித்துக் கொண்டிருந்தாள் எதையும் சாடும் தமிழ் வீரமும், எதையும் தாங்கும் பேராண்மையும் ஒன்றாக இணைந்த

தமிழச்சியாக குமாரி பரிமளம் விளங்குவதாகவே அவனுக்குத் தோன்றியது.

"ஸிஸ்டர், காப்பி ஆறிடப் போகுதுங்களே?" என்று நினைவூட்டியபடி, பங்கஜத்தை அண்டினுள் திருமதி வீரபாகு.

"ஓ நன்றிங்க. நான் சுய ஞாபகத்தோடே தான் இருக்கேன்" என்று புன்சிரிப்புச் சிரித்தாள் பங்கஜம். மேல் வரிசையின் இடது புறத்தில் இருந்த ஒரு தங்கப் பல்லும் சேர்ந்து சிரித்தது. அது பொன் சிரிப்பு.

"எனக்கு ஆறினுல்தான் எதுவும் பிடிக்கும்! ஆனு, உங்க ஹஸ்பெண்ட் அப்படி இல்லே. சின்ன வயசிலே கூட அப்படித்தான். தஞ்சாவூரிலே எங்க பங்களா விலே விளையாடிக்கிட்டு இருப்போம். அம்மா சுடச்சுட டிக்ரி காப்பி கொண்டு வந்து கொடுப்பாங்க, ஒரே மடக்கிலே குடிச்சிடுவார் மிஸ்டர் வீரபாகு" என்று வியாக்யானம் செய்தாள், அவள்.

அவள் வயதை மீறிய கவர்ச்சியுடன் நகை சிந்தினுள். தன்னைக் கட்டிக் கொண்டவர் பேரில் தனக்கு இருக்கும் நம்பிக்கையைப் பிரதிபலிக்கவே தான் அவ்வாறு புது விதமாகச் சிரித்தாளோ மங்களம்?

காலடி அரவம் கேட்டது.

பங்கஜம் திரும்பினுள்.

°° 0 °°

வீரபாகு வருகிருர்,

"இன்னுமா குடிக்கலே?"

பங்கஜம் ஏறிட்டுப் பார்வையிட்டாள்.

"இன்னமுமா காப்பிக் குடிக்கல்லேன்னு கேட்டேன், பங்கஜம்" என்ருர் வீரபாகு,

மத்தியில் விஷமற்றச் சிரிப்பு ஒளிந்து

பங்கஜம் ரசனையுடன் காப்பியைப் பருகினாள். "எக்ஸெலண்ட்...ரொம்பப் பிரமாதம்" என்றாள்.

அவளுடைய பாதங்கள் கீழே சிதறிக் கிடந்த கடுதாசிக் கிழிசல்களை மறைப்பதில் கடமை பூண்டு இருந்த 'துப்பு' அவருக்குத் தெரிந்திருக்க நியாயம் இல்லை!

"ஐதோ, குடிச்சிட்டேனே!" என்று சின்னப் பாப்பாவாக மாறிச் சிரித்தாள் பங்கஜம்.

அந்தச் சிரிப்பைத் தூய்மையான மனத்துடன் ரசித்தார் வீரபாகு. உடனே அவரும் அறியாப் பருவத்துச் சிறுவனாக மாறினார்.

'பங்கஜத்தோடு 'டு' போட்டதைக் கலைச்சு ராசி ஆகிட வேணும்' என்று மறுபடியும் ஞாபகப்படுத்திக் கொண்டார்.

அப்போது, பங்கஜம் தலையை உயர்த்தினாள். கைகள் காப்பிக் கோப்பையை நிதானமாக 'டீப்பா'யின் மீது வைத்தன.

"வீரபாகு ஸார், நீங்க என்னோடே 'டு' போட்டீங்களே, நினைவிருக்குதா?" என்று நுட்பம் செறிந்த ஏக்கத்துடன், ஆறுத சோகம் விழிகளில் முனைப்பாக நிற்க, வேதனைக் குரலெடுத்து வினவினாள்.

"அதை மறந்திட முடியுமா பங்கஜம்?" வீரபாகுவின் கண்கள் பொடித்தன பேச்சில் வேதனை வெடித்தது.

வீரபாகுவின் அந்தப் பேச்சின் தொனி அப்போது பங்கஜத்துக்கு மாண்பு மிகுந்த ஆறுதலைக் கொடுத்திருக்க வேண்டும். அவளுடைய விழிகளிலும் நீர் திரையிட்டது.

காலம் திரையிட்ட அந்த அறியாப் பிராயத்து மணல் வீட்டு விளையாட்டை வீரபாகுவும் பங்கஜமும் தனித்தனியே சிந்தையில் தேக்கிச் சிந்தை செலுத்தினர் போலும்!

அவர்கள் இருவரையும் மாறி மாறி—மாற்றி மாற்றிப் பார்வையிட்டாள் மங்களம்.

• • •

குமாரி பரிமளம் தனக்குக் கிட்டிய புதிய தோழி தேவமனோஹரியைப் பற்றி திடுதிப்பென்று நினைத்துக் கொண்டு, அந்நினைவின் சுமையை இடம் மாற்ற எண்ணியவளாக, பார்வையைத் திசை திருப்ப விழைந்து, மங்களத்தை நாடினாள்.

அங்கே மூன்று உள்ளங்கள் வெவ்வேறு வகைப் பட்ட மூன்று உலகங்களில் சஞ்சாரம் செய்து கொண் டிருந்த விசித்திரத்தைப் பரிமளம் புரிந்து கொண்டாள்.

சுவர்க்கடிகாரம் ஒருமுறை ஒலிபரப்பியது.

மணி நாலரை!

முதலில் பங்கஜம்தான் சுயப் பிரக்ஞை எய்தினாள். இரண்டு விரல்களாலும் தலைமுடியைச் சீராகக் கோதி விட்டவாறு, கழுத்தில் படிந்திருந்த சிறிய வேர்வை மணிகளைத் துடைத்துக் கொண்டாள்.

வளர்ச்சாதனைப் பெருமையில் அவள் உடல் புளுக்கம் ஓட்ட மறுத்தது. கிழித்துப் போட்டக் காகிதக் கிழிசல்களைப் பார்த்தாள். எப்படியோ அவற்றில் சில இடம் பெயர்ந்து சிதறிக் கிடந்தன. அதற்குள் அவளுக்கு வேறு நினைவு மூண்டது. மங்களத்தை விளித்தாள்.

"ஸிஸ்டர், உங்க பெர்மிஷனோடு, நானும் வீரபாகு ஸாரும் அடிநாளிலே போட்டுக்கிட்ட 'டு'வை கலைச்சிடப் போறோம்" என்று நயமாக உரைத்தாள்.

"ஓ" என்று அனுமதி ஈந்தாள், வீரபாகுவின் 'இனிய பாதி' மங்களம்.

அப்போதுதான் வீரபாகுவுக்கு உயிர் மீண்டாற் போலிருந்தது.

"மிஸ்டர் வீரபாகு!"

"சொல்லுங்க, பங்கஜம்!"

"நீங்கதான் என்னோடு அழும்பாக 'டு' போட்டீங்க!"

"இப்போது நான் அதை மறுக்கலையே?"

"ஆல் ரைட்!"

"இப்போது நான் என்ன செய்ய வேணும்?"

"நீங்க போட்ட 'டு'வை நீங்களே இப்போது கலைச்சாகணும்."

"ஊஹூம்; அப்படியில்லை. உங்களோடு நான் 'டு' போடலடன். அந்த 'டு'வை நீங்க கலைச்சால்தான், அதன் மூலமாய் நம்ம ரெண்டு பேருக்குமே ஒரு நேர்மையான—நியாயமான அமைதி பிறக்க முடியும். நான் 'டு' போடுவேன். நீங்க என்னோட 'டு' விரலை அதாவது, 'டு' போட்ட விரலை விலக்கி, ராசி அடையாளம் செஞ்சிட வேணும்" என்றார் வீரபாகு.

எல்லாமே வேடிக்கையாக இருந்தது, 'குமாரி பரிமளத்திற்கு'. வாழ்க்கை ஒரு விளையாட்டு அப்படியின்னு சொல்வாங்க. மிஸ்டர் அதிவீரராமபாண்டியன் கூட அப்படித்தான் சொல்வார். நான் அப்போது கூட அவர் பேச்சை எதிர்ப்பேன். வாழ்க்கையை விளையாட்டாகக் கணித்துப் பழகியவர் பேச்சு என்கிற தாத்பர்யத்திலே நான் அப்படிப் பேசுவேன். வாழ்க்கை ஒரு விளையாட்டு இல்லை அது ஒரு தவம் அப்படின்னு 'ரிடார்ட்' செய்வேன்.

ஆனா, இப்போது இந்த இரண்டு பெரியவர்களும் சின்னப் பிள்ளைகளாகி—அதாவது இளம் பிராயத்துக்குத் திரும்பி, எப்போதோ போட்டுக்கிட்ட 'டு'வைக் கலைச்சிட பிரயத்தனப்படுகிறதைப் பார்த்தால், வாழ்க்கை 'ஒரு வகையிலே விளையாட்டு—அப்படியென்கிற முடிவுக்குத்தான் வர வேண்டியவள்

ஆகிறேன்!' நினைவுகளினின்றும் விடுதலைப் பெற்றுள் கன்னிப் பெண்.

அவள் திருஷ்டி பங்களூர்ப் பங்கஜத்தின் மீதும் வீரபாகு ஐயா பேரிலும் நிலைக்கத் தொடங்கியது. திருஷ்டி மச்சம் அவளுக்கென்று வாய்த்திட்ட தனிச்சீர்!...

° ° °

"ஊம்!...'டு'வை கலேச்சிடு, பங்கஜம்!" என்றார் லட்சாதிபதி வீரபாகு. பங்கஜத்தை நோக்கி டு' போட்டவாறு இருந்தார் அவர்

பங்கஜம் உணர்ச்சி வசப்பட்டவளாக, நளினம் நிறைந்த நாணத்தோடு மெள்ள மெள்ள வீரபாகுவை நெருங்கினாள். அவர் போட்ட 'டு'வை கலைக்கத் துடித்தன, அவள் விரல்கள். நடுக்கம் விளைந்தது. அந்த நடுக்கத்தோடு, 'டு போட்டிருந்த வீரபாகுவின் விரல்கள் இரண்டையும் தன்னுடைய வலது கை நுனி விரலால் கலைத்து விட்டாள். பிறகு இருவரது ஆள் காட்டி விரல்களும் ஒன்றோடொன்று 'ராசி' போட்டன.

பங்கஜமும் வீரபாகுவும் ஒரே சமயத்தில்—ஆனந்த மாக—அமைதியாக—அற்புதமாகச் சிரித்தார்கள். அந்தச் சிரிப்பு வரவேற்புக் கூடத்தில் அழகாக எதிரொலித்தது. இருவரும் முகத்தைத் துடைத்துக் கொண்டார்கள்.

"பங்கஜம், இப்போதுதான் என் அத்தானுக்கு நிஜமாகவே ஒரு நிம்மதி வந்திருக்கும்" என்றாள் மங்களம்.

"எனக்கும் கூடத்தான், ஸிஸ்டர்!"

"ஓ!"

போதை ஊட்டி, போதம் ஊட்டும் வகையில் குமாரி பரிமளம் தனக்குத்தானே புன்னகை செய்து கொண்டாள். நிலைக்கண்ணாடி ரசனை மிக்கது. அது அந்த நயத்தை அனுபவித்தது.

கன்னிப் பெண்ணின் புனிதமான அழகை ரசிக்கும் தூய கலைஞன், அந்த ரசிகத் தன்மையை தன் கண்களின் வாயிலாக வெளிப்படுத்துகிறான். மௌனமான அந்த வெளியீட்டுக் குறிப்பை குமரிப்பெண் அங்கீகரிக்கிறாள். அப்போது கலைஞன் எத்துணை மகிழ்வு அடைவான்?...

அப்படி இருந்தது வீரபாகுவின் மனநிலை. கலைஞனின் அமைதி அவருள் விளைந்தது. பங்கஜத்தின் அழகை மனக் கண்ணால் பார்த்துப் பார்த்து ரசித்த அந்த மகத்தான வேளைகளை அவரால் எப்படி மறந்து விட முடியும்?

அப்போது, "ஸார், அதோ, மேலண்டைச் சுவரில் தொங்குதே முருகன் படம், அது ரொம்பப் பிரமாதமாக இருக்குதே?" என்றாள் பங்கஜம்.

வீரபாகு சோபாவில் சாய்ந்தபடியே அவள் சுட்டிய ஆறுமுகன் படத்தை இனம் கண்டார்.

"தம்புச் செட்டித் தெருவிலே முருகன் கோயில் ஒன்று இருக்குது. அந்தக் கோயில் குருக்கள் பரிசாக எனக்குக் கொடுத்த படம் இது" என்றார் அவர்.

பரிமளத்தின் காதுகளில் உரையாடல் செய்தி விழுந்தது.

"ஓ! குருக்கள் ரொம்ப ரொம்பப் பெரிய மனிதராகத்தான் இருக்கணும்னு தோணுது" என்றாள் பங்கஜம்.

ஏனோ பரிதாபமாக விழித்தார், மங்களத்தைக் கொண்டவர்.

"என்ன சொல்றீங்க, பங்கஜம்?"

"கடவுளையே உங்களுக்கு ப்ரசண்ட் செஞ்சவர் அபூர்வ மனிதராக இருக்கணும்னு சொன்னேன்!"

"ஓ! ஹோ!" கை கொட்டிச் சிரித்தார் வீரபாகு. பரிமளமும் மங்களமும் அடுத்தடுத்து ஒரே ஆசனத்தில்

அமர்ந்திருந்ததைக் கண்டு ஆனந்தக் கடலாடியது அவர் நெஞ்சம் 'ஆண்டவனே எங்களுடைய பிள்ளைக் கலி தீர, பரிமளத்தை எங்கள் மகளாக ஆக்கிட்டே!... இனி, பரிமளத்தின் கல்யாண விஷயம் முடிஞ்சாகணும் என்று எண்ணமிட்டார்.

மறுபடியும் முருகன் படம் அவர் கண்களில் பட்டது. ஓ!...புண்ணியகோடி குருக்கள் மத்தியானம் வரதாகச் சொன்னரே? ஏன் வரவே இல்லே? என்று குழம்பினர். சிறுகதை மன்னன் அதிவீரராம பாண்டியன் வருவதாகத் தெரிவித்த செய்தியும் அவருள் நினைவுக் குறிப்பானது. மனநிலைக்கு ஒரு மாற்றம் அருள்வதில் நாட்டம் கொண்டவர் அவர். ஒதுங்கிக் கிடந்த மேலை நாட்டுச் சஞ்சிகையை ஒதுக்கி விடாமல் எடுத்தார். மேலை நாட்டுக் காதலர்கள் உதடோடு உதடு சேர்த்து, நெஞ்சோடு நெஞ்சு சேர்த்து ஆரத் தழுவி முத்தமிட்டுக் கொண்டிருந்த காட்சி மேலட்டையில் 'தரிசனம்' தந்தது. இன்பக் கிளு கிளுப்பினுல், எதிர்பாராத சலனம் அடைந்த முகத்தோடு அவர் இடம் பெயர்ந்து எழுந்தார்.

தொலை பேசி கூப்பாடு போட்டது.

ஓட்டிச் சென்றுர் அவர் ஆனல் தொலைபேசித் தொடர்பு துண்டிக்கப்பட்டு விட்டது இப்படி இதற்கு முன் பலமுறை நிகழ்ந்த விவரங்களையும் நினைவு கூர்ந்தார் வீரபாகு.

இருமல் அடங்கியது. "அத்தான் உங்க போட்டோ ஏதோ பேப்பரிலே வந்திருக்குதுங்களே?... யாரோ கிழிச்சி வீசியிருக்காங்க!...அடடே!" என்று சொல்லி, மங்களம் அந்தக் கடுதாசிக் கிழிசலில் தெரிந்த புகைப்படத்தை—தன் கணவரின் புகைப் படத்தை தன் கணவரிடமே நீட்டினள்.

வீரபாகு அந்த நிழற் படத்தைப் பார்க்க முனைந்த நேரத்தில், "அம்மா, என் படம் கூட பப்ளிஷ் ஆகி யிருக்கே! வெறும் கிழிசல் மட்டும்தான் கிடக்குதுங்க அம்மா!" என்று தெரிவித்தாள் குமாரி பரிமளம்.

"ஓ. என்ன வேடிக்கை இது!" என்று கூறிக் கொண்டே காகிதத் துண்டில் அச்சாகியிருந்த தன் படத்தைப் பாரித்தார் வீரபாகு.

பாவம், பங்களூர்ப் பங்கஜம் விழி பிதுங்க விழித்தாள்.

புதிய கார்ச் சத்தம் அழுந்தி அடங்கியது.

அப்போது:

"ஹலோ!" என்று கூறிக் கொண்டே சிறுகதை மன்னன் அதிவீரராமபாண்டியன் வந்து நின்றான்!...

# 11. தூயக்கனல்

அசோக மரத்திற்கே உரிய இயல்பான கம்பீரத் தோடும், கண்ணைக் கவரும் அழகான மிடுக்கோடும் வந்து நின்றான சிறுகதை மன்னன் அதிவீரராம பாண்டியன்.

"ஹலோ!" என்று அவன் விளித்த சொல்லைக் கேட்டதும், சமாளிக்க முடியாத பதட்டத்தோடு தலையை மெல்ல உயர்த்தினார் தொழிலதிபர் வீரபாகு. அவரது கையில் இருந்த காகிதக் கிழிசலில் அச்சிடப் பட்டிருந்த அவரது புகைப்படம் 'இதுதான் நல்ல சமயம்' என்று எண்ணியது போல், மெதுவாகக் கீழே நழுவி விட்டது.

ஆணவம் மண்டிய கருவம் துலங்க நின்று கொண் டிருந்தான் அதிவீரராம பாண்டியன்.

அவன் இமைப் பொழுதுக்கு முந்தி அழைத்த குரலில் தெறித்த நயமான ஆங்கில உச்சரிப்பின் மேன்மையை ரசித்தவராக, அவனையே இமைக்காமல் பார்த்தார் வீரபாகு. எதையோ மறந்து, மறந்ததை நினைவு படுத்திக் கொண்டவர் போன்று ஓர் அரைக் கணம் அவர் தட்டுத்தடுமாறிப் போனார்.

"வாங்க." என்றார்; வரவேற்புப் பண்பு அந்தத் தொனியில் மிதந்தது. 'உட்காருங்க!..." என்று அடுத்துச் சொன்னார் அவர். "அநேகமாக இவன் அதிவீரராமபாண்டியனாகத்தான் இருக்க வேணும். முக்கால்வாசி என்னுடை ஊகம் சரியாகவே இருக்க லாம்'' என்ற கணிப்பு அவருள் உள் வட்டமாகச் சுற்றிக் கொண்டிருந்தது

பெருந்தன்மையைப் பார்வையில் அமைத்து, ஆணவப் புன்சிரிப்பை உதட்டுக் கரையில் இழைத்து கம்பீரமான ஒயிலுடன் நின்ற அவனுக்கென்று காத்துத் தவம் கிடந்த மாதிரி, வெறிச்சோடிக் கிடந்த கூடை நாற்காலியில் அமர்ந்தான், ஏ. வி. பாண்டியன். 'ஸ்ரேஷியம்' விரிப்பில் தூசு ஏது? என்றாலும் அவன் உடுத்துக் கொண்டிருந்த வேஷ்டியின் நான்கு அங்குலச் சரிகைக் கரையும் அந்தப் பூவிரிப்பில் தான் இழைந்திருந்தது.

அவன் கண்கள் சுற்றிச் சூழ நோக்கின. 'ஓ!... பரிமளம்!...' என்று அவனுக்குச் சொந்தமான உள் மனம் தனக்குத் தானே சொல்லிக் கொண்டது லேசாக ஒருமுறை கனைத்துக் கொண்டான் அவன். கதை எழுதும் கற்பனாவாதி அல்லவா? அவன் எண்ணியது நடந்தது. எதிர்பார்த்தது வீண்போகவில்லை

மங்களத்திடம் தன்னுடைய படம் வெளியாகி யிருந்த அந்தக் காகிதத் துண்டைக் காட்டிக் கொண் டிருந்த குமாரி பரிமளம், பொட்டில் தட்டுப்பட்ட மாதிரி அதிர்ச்சி அடைந்து ஏறிட்டுப் பார்த்தாள். கோல விழி களிலே கோலமிட்டது வியப்பு. சிமிழ் உதடுகளிலே உமிழ்ந்து நின்றது, பரிசுத்தமான புன் முறுவல். சிந்தூரக் கன்னங்களிலே ஓடிப் பிடித்து விளையாடியது நாணம்.

'ஓ!...மிஸ்டர் பாண்டியன்! என்னுடை பாண்டியன்!' நினைவுகள் சொக்கட்டான் ஆடின.

"இப்பத்தான் வந்தீங்களா, மிஸ்டர் பாண்டியன்?" என்று புள்ளிமானைகத் துள்ளிக் குதித்த வண்ணம்

அதிவீரராமபாண்டியன் வீற்றிருந்த ஆசனத்தை நெருங்கினாள் பரிமளம்.

"எஸ்...ஜஸ்ட்...இப்பத்தான் வந்தேன்!" என்றான் சிறுகதை மன்னன்.

❀ ❀ ❀

பரிமளத்தையும், பாண்டியனையும் ஒரே பார்வையால் அளந்த வீரபாகு, 'எங்கேயிருந்து வர்றீங்க?" என்று விசாரிக்கலானார்.

"கீழ்ப்பாக்கத்திலிருந்து!" என்று பதில் மொழிந்தான் பாண்டியன்.

"கீழ்ப்பாக்கத்திலிருந்தா?"

"ஏன் அப்படிக் கேட்கறீங்க? இடம் மாறி வந்திடல் லேங்க நான்!"

வீரபாகுவுக்குத்தான் அப்படிக் கடகடவென்று சிரிக்கத் தெரியும். "நானும இடம் மாற்றி இருக்கல் லேன்னு நினைக்கிறேன்!" என்றார்.

இப்போது அதிவீரராமபாண்டியனின் முத்துப் பற்கள் அழகுச் சிரிப்பைச் சுடர் தெறித்துக் காட்டின.

"கீழ்ப்பாக்கம்னு சொன்னதும் இவங்க ரெண்டு பேருக்கும் மத்தியிலே பாவம், பைத்தியக்கார ஆஸ்பத்திரி மறைமுகமான தமாஷ் ஆகித் திண்டாடுது!'—இவ்வாறு ஒரு சிந்தனை ஊடாடியதும், பரிமளமும் லேசாக முறுவல் காட்டினாள்.

இக் காட்சியை, கண்காட்சியில் வேடிக்கை பார்ப்பதற்கு ஒப்பாகப் பார்த்துக் கொண்டேயிருந்தார்கள் பங்களூர் பங்கஜமும், மங்களமும்!

"என் பெயர் அதிவீரராமபாண்டியன்!"

"நான் வீரபாகு!"

"வணக்கங்க;"

"வணக்கம்...வணக்கம்!"

"உங்களைப் பற்றியும் உங்களுடைய கண்ணாடித் தொழிற்சாலையைப் பற்றியும் நான் நிரம்பக் கேள்விப் பட்டிருக்கேனுங்க."

"பரவாயில்லையே!...என் பெயர் அபூர்வமாகத்தான் பேப்பர்களிலே வரும். ஆனால் உங்க பெயரோ அடிக்கடி பத்திரிகைகளிலே வந்துகிட்டு இருக்கும். உங்கபேரை நான் பல மாதங்களாகவே அறிவேன், மிஸ்டர் அதிவீரராம பாண்டியன். ஆனா, உங்களைப் பத்தி சில மாதங்களாகத்தான் எனக்குத் தெரியும்?"

"அப்படிங்களா? ரொம்பச் சந்தோஷம்! நான் ஒரு தனிப் பிறப்புங்க. என்னோடை எழுத்துக்களைப் பத்தி என்கிட்டவே யாரும் புகழ ஆரம்பிச்சா அது எனக்குப் பிடிக்காதுங்க. மற்ற எழுத்தாளர்கள் அப்படி இல்லை!"

"பேஷ், பேஷ்! நல்லவேளை, நான் தப்பிச்சேன். ஏன் தெரியுங்களா? எனக்கு உங்க எழுத்துக்களைப் பத்திப் புகழத் தெரியாது. ஏன்னா நான் உங்க எழுத்துக்களை அதிகமாய்ப் படிச்சது இல்லீங்க!"

அதிவீரராம பாண்டியனின் அழகான முகம் மின்னல் பொறிதட்டும் நேரம் கறுத்தது.

"மிஸ்டர் அதிவீர...அே அப்பா! பேர் ரொம்ப நீளம். நீங்க பெர்மிட் பண்ணினால், பாண்டியன் அப்படின்னு கூப்பிடலாம்னு நினைக்கிறேன்."

"ஓ...தாராளமாகக் கூப்பிடுங்க. என்னோடு அத்யந்தமாக நெருங்கிப் பழகறவங்க எல்லோருமே என்னைப் பாண்டியன்னு தான் அழைப்பாங்க!"

"மிஸ்டர் பாண்டியன்! நீங்க என்ன சாப்பிடறீங்க? குளிர்பானம் கொண்டாரச் சொல்லட்டா? இல்லே ஹாட் ட்ரிங்க் வேணுங்களா?"

"இப்பத்தான் ஹோட்டல் பாரடைசிலே டிக்ரி காப்பி சாப்பிட்டுட்டு வந்தேன். சூடா ஏதானும் சாப்பிட்டால்தான் எனக்குக் கார் ஓட்டுறதிலே ஒரு

தனிக் கவனம் உண்டாகும் இப்படியொரு ப்பகழுலயா ஹாபிட்...!'' பற்கள் நகைத்தன.

''நிஜமாகவே நீங்க ரொம்ப வேடிக்கையான ஆள் தான்!''

பாண்டியன் என்கிற அதிவீரராமபாண்டியன் அப்போது வீரபாகு மதிப்பீடு செய்த அந்தக் குணக் கணிப்பை மிகவும் மெல்லியதாகவே எடுத்துக் கொண்டான். ''ஓவல் சாப்பிடலாம்,'' என்று தன் இஷ்டத்தைத் தெரியப்படுத்தினான். ''எதிலேயும் ஒரு சேஞ்ச்—மாறுதலை விரும்புகிறவன் நான். கொஞ்ச முந்தி காப்பி சாப்பிட்டாச்சு. இப்போ காப்பி இல்லாமல் வேறு ஏதாவது கொடுத்தால் குடிப்பேன்!''

''குடிப்பீங்களா?''

வேர்த்துக் கொட்டியது அதிவீரராம பாண்டிய னுக்கு. உதவாக்க ஓடி வந்தது டவல். வாரப் படாமல் இருந்த எழில் தோய்ந்த சுருட்டை முடிகளை அப்படியே கைவிரல் கொண்டு நீவி விட்டுக் கொண்டே பார் வையைத் திசை திருப்பலானான் அவன்.

அவனது கண் நோக்கு படர்ந்த இடத்தில் எல்லாம் குமாரி பரிமளம்தான் தரிசனம் கொடுப் பாளோ?

பரிமளம் ஓவல் டின்னின் பரிமளத்தோடு வந்தாள். நிரம்பி வழிந்த கோப்பையை நிரம்பி வழிந்த மனத் தோடு முக்காலியில் வைத்தாள். சரிந்து விழவில்லை புடவை. தற்காத்துக் கொண்டாள். சோளியின் மேற் பகுதிப் பொத்தானில் விழி விரிப்பு வழி மிதித்தது. நிம்மதி பிறந்தது. சோளிக்குள் 'ஆனந்தசயனம்' செய்து கொண்டிருந்த அதிவீரராமபாண்டியனுக்குரிய அந்தக் கடிதத்தை நாசூக்காகச் சோதித்துப் பார்த் தாள். அதிவீரராமபாண்டியனை யார் களவாடி விட முடியும்? அதிவீரராம பாண்டியனா, இல்லை...கொக்கா?

ஒருகணம் பரிமளம் தன் நிலை மறந்தாள். தன் நிலையையும் மறந்தாள்.

நெஞ்சில் விளையாடினாளோ அதிவீரராம பாண்டியன்?

"ஓவல் ஆறிடப் போவுது. சூடு மாறிட்டாத்தான் உங்களுக்கு எதுவுமே பிடிக்காதுங்களே?" என்றாள் பரிமளம்.

சொன்னபிறகு ஏனோ பதட்டத்துடன் உதட்டைக் கடித்துக் கொண்டாள். பொடி தூவிப் பேசும் நயம் பெண் குலத்துக்கே கைவந்த தனிக் கலையாகவும் இருக்கலாம். குறுஞ்சிரிப்பு குறும்பு பேசியது. பூக்கள் மங்களத்தை மட்டுமல்ல, மணத்தையும் கொடுத்தன.

பரிமளத்தின் உபசரிப்பைக் கண்டு, உபசரிப்பு மொழிகளைக் கேட்டு மேனி சிலிர்த்தார் வீரபாகு. கண் முனையில் ஈரம் கசிந்தது.

'ஐயா, மிஸ்டர் அதிவீரராம பாண்டியன்தான் என்னோட லட்சியக் காதலர்!—ஆனால், நான் அவரோட லட்சியக் காதலிதானா என்கிற உண்மையையோ அல்லது, ரகசியத்தையோ, தருமத்தையோ அவர் தானே தீர்மானிக்க முடியும்?' என்று கொஞ்சப் பொழுதிற்கு முன்னே பரிமளம் உணர்ச்சிவயப்பட்டுச் சொன்ன அந்தச் சொற்கள் அவரது நினைவின் அடிவாரத்தில் புல்லரிப்பை விளைவித்தன.

அதிவீரராம பாண்டியன் தீவிரமான சிந்தனை வசப்பட்ட நிலையில் கோப்பையை எச்சரிக்கை தூவி கையில் எடுத்தான். அவன் நினைவில் குமாரி பரிமளம் ஆட வந்த பொற்பாவையாக ஆடினாள்; விளையாடினாள். அவளைச் சந்திக்க நேர்ந்த அந்தச் சம்பவத்தை அவனால் மறக்கவே முடியாது; அவன் நெஞ்சு மறைக்கவும் முடியாது அவனது மனச்சான்று மறுக்கவும் முடியாதுதான்!

'பரிமளம்! நீ மோகினியா? மானுடப் பெண்தானா? இல்லை, தெய்வமா?' இளமீசை துடித்தது.

"சாப்பிடுங்க மிஸ்டர் பாண்டியன்!" என்று நினைவூட்டினாள் பரிமளம். குழந்தை மாதிரி செல்லமாகக்

குழைந்தாள். செக்கச் சிவந்த இதழ்க்கடையில் நாணப்பூ மணத்தது. முதுகைத் திரும்பிப் பார்த்தாள். அணிந்திருந்த 'பிரேஸியர்' தனக்குக் கிட்டிய பாக்கியத்தில் இறுமாந்திருக்க வேண்டும்!

அவள் கண்களில் வீரபாகு நெளிந்தார்.

மங்களம் ஊர்ந்தாள்!

பங்கஜம் படம் பார்த்தாள்!

நினைவுகளுக்கு மத்தியில் ஓடிக் கொண்டிருந்த காலம் 'மணி ஐந்து' என்று சுட்டிக் காட்டி கடமையைத் தொடர்ந்தது.

"ரொம்ப நன்றி!" அவளது கையிலிருந்த டைரியினின்றும் பத்திரிகை ஒன்று நழுவியது

"எனக்குத்தானுங்களே?" என்று ஆசையாகக் கேட்டாள் பரிமளம். பூர்த்தி பெருத கூந்தல் சுழன்றது.

"உனக்கும் தான் பரிமளம்!"

பரிமளம் கனவில் மிதப்பது போல் நகை சிந்தினாள்.

"அப்படியென்ருல், எனக்கும் உங்க நன்றியில் பங்கு உண்டு. இல்லீங்களா?" குறுக்கிட்டார் வீரபாகு. அதிவீரராம பாண்டியனிடம் பரிமளம் விஷயமாகப் பேசி ஒரு முடிவு செய்தாக வேண்டும்!

"நன்றிக்கு மூலாதாரமான புள்ளியே நீங்கதானே, வீரபாகு ஸார்?"

"ஊஹூம். நீங்க பொய் சொல்றீங்க. எங்க பரிமளத்திற்கும் பாகம் உண்டு. சட்டப்படி உள்ள பாகம் இது!"

விழித்தான் பாண்டியன். நேற்றிரவு மண்ணடிப் பகுதியில் அதிவீரராம பாண்டியனின் மனச்சாட்சிக்கு முன்னே, தமிழச்சி பரிமளம் தூயக் கனல் வடிவு

எடுத்து, நடத்தினுளே ஒரு புரட்சி, அந்தப் புரட்சி, ஊனும் உயிருமாக உயிரும் உயிர்ப்புமாக இப்போது ஏடு விரியத் தொடங்கியது!

பரிமளம் தன் சோளிக்குள்ளே ஒளிந்திருந்த அந்தக் கடிதத்தை—பரிமளம் அதிவீரராம பாண்டியனுக்கு எழுதிய அந்தக் கடிதத்தை—அந்தக் கடிதத்தை பகடை ஆக்கி அவளை அவனை பயமுறுத்த ஏதுவாக யிருந்த அந்தக் கடிதத்தை—விதி வசத்தினுல் அதிவீரராம பாண்டியனின் டைரியிலிருந்து நழுவி அவள் காலடியையே தஞ்சம் அடைந்த அந்தக் கடிதத்தை புதிய உத்வேக வெறியுடன்—புதிய உணர்வின் முடிவுடன் வெளியே எடுத்தாள்.

வெள்ளை மனத்தைப் பிரதிபலிக்கும் கள்ளமில்லாத அந்தக் கண்களில் இப்போது ஆத்திரம் மூண்டது.

அதிவீரராம பாண்டியன் சிலையானன்.

சிகரெட் புகை நிறை சூலியாகக் கனத்துச் சிதறிப் பரவத் தொடங்கியது!

## 12. தாலித் தழும்பு

சிகரெட்டுப் புகை நிறைசூலியாகக் கனத்துச் சிதறிப் பரவிக் கொண்டே யிருந்தது. மனம் விரும்பும் தெய்வத்துக்குச் சாம்பிராணித் தூபம் காட்டும்போது மெல்லிய புகை அலைகள் சன்னம் சன்னமாக நெளிந்து பரவுமே, அப்படித்தான் சிகரெட்டுப் புகைச் சுருள்களும் அலை அலையாகக் கிளம்பிக் கொண்டிருந்தன.

"ஆனல் தெய்வத்தைத்தான் காணும்!"

சிகரெட்டுப் புகை மட்டும் நிறைசூலியாகக் காட்சியளிக்கவில்லை.

அதிவீரராம பாண்டியன் என்கிற ஏ. வி. பாண்டியனின் இதயமும்தான் நிறைசூலியாக விளங்கியது.

வயிற்றில் கருவைச் சுமந்து, அக்கருவை நித்த நித்தம் வளர்த்து, அந்த அன்புச் சுமையை ஓர் இன்ப வேதனையோடு வளர்த்துக் கொண்டிருக்கும் தாய், கருவில் திருவேந்திக் கண் வளரும் மழலையின் இனிய நினைவிலே தன் வயிற்றின் சுமையைப் பொருட்படுத்தாமல், ஆனால், அச்சுமையை எப்படி வெளியேற்றப் போகிறேமோ என்ற பயத்துடன்—தவிப்புடன் ஒவ்வொரு கணமும் அனுபவிக்கும் ஜீவ மரணப் போராட்டத்தையும் தவிர்க்க முடியாமல், திண்டாடிக் கொண்டே யிருப்பாள் அல்லவா?

அவ்வாறுதான் பாண்டியனின் மனநிலையும் இருந்தது. அவன் வெறி மூள, வெப்பம் சிதற, வேதனை வெடிக்க, வெய்துயிர்ப்புச் சிலிர்க்க, சிகரெட்டை உறிஞ்சி, உறிஞ்சிப் புகையை வெளியேற்றி, வெளியேறிய புகைக் கம்பிகளுக்கு மத்தியில் சிறைபட்டுக் கிடந்தான் அவன். அச்சம், தவிப்பு, தாபம், ஆசை, லயிப்பு, துடிப்பு, மோகம், ஏக்கம் போன்ற பலவகைப்பட்ட மன உணர்வுகளுக்கு மத்தியில் அவன் அமர்ந்திருந்தான்.

அவன் சிறுகதை மன்னன்!

சிறுகதை மன்னன் அதிவீரராம பாண்டியனு, இல்லை, கொக்கா?

'ஆ!' என்றான் பாண்டியன்.

"பாவம்!"—சிகரெட்டுத் துண்டு சுட்டு விட்டது—அவனை!

அப்பொழுதுதான் அவனுக்குச் சுயப் பிரக்ஞை சிலிர்த்தெழுந்தது. மன ஓடைச் சித்திரங்களுக்கு நடுவே சித்திரப் பாவை பரிமளத்துக்குக் கொலு அமைத்துக் கொடுத்து விளையாடிக் கொண்டிருந்த அவன், சுட்ட சிகரெட்டுத் துணுக்கைத் தூர வீசி எறிந்தான்.

'ஆ' என்ற வேதனைக் குரல் அவன் உள்ளத்தைச் சாடியது. கலவரத்தோடு முகத்தை நிமிர்த்தினன்.

கஞ்ச மலர்ப் பாதத்தைத் தடவி விட்டவாறு அங்கு குமாரி பரிமளம் தரிசனம் கொடுத்தாள்.

பதை பதைத்தான் பாண்டியன், "சுட்டுடுச்சா?" என்று பரிவுடன் வினவினான்! கண்கள் பொடித்தன. புருவங்கள் ஏறின.

அவள் சிரித்தாள். "ஊம்!" கொட்டினாள். "சிகரெட் சுடவில்லே! நீங்க சுட்டுட்டீங்க" என்றாள்.

தேவதை போல—மோகினியைப் போன்று—தெய்வத்தை ஒத்து நகை உமிழ்ந்தாள் குமாரி பரிமளம்.

காதளவோடிய கயல்விழிகளிலே மையல் சுழன்றாட கன்னி எழில் கூட்டி, மின் எழில் காட்டி விளையாடிய காது வளையங்களில் கனவுகள் நின்றாட தன்னையே இமை கொட்டாமல், ஆனால், விநாடிக்கு விநாடி தேளாகக் கொட்டிக் கொண்டே கடிதமும் கையுமாக, வெஞ்சினமும் வேதனையுமாக தூயக் கனல் வடிவு எடுத்துத் தரிசனம் கொடுத்தாளே குமாரி பரிமளம், அவளை ஏறெடுத்துப் பார்க்கவும் அஞ்சியவனாக, தலை குனிந்த நிலையிலேயே எப்படி அவனால் ஐந்தாறு விநாடிகளைக் கடத்திட முடிந்தது?

பாவம், அந்த இளமீசை மாத்திரம் இரண்டாம் பேருக்குத் தெரியாமல் துடித்துக் கொண்டேயிருந்தது, ரகசியமாக!

ஆனால், அவனுக்கே தெரியாமல், அவனுடைய மனச்சாட்சியின் அந்தராத்மா துடித்துக் கொண்டு இருந்தது!

° ° °

நிமிஷ முள்ளை காலக் குழந்தை மேல் நோக்கி நகர்த்தி விளையாடிக் கொண்டிருந்தது. அந்தத் தென்றலின் ஆனந்தம் அங்கேயும் எழுந்தது.

தொழிலதிபர் வீரபாகுவுக்கு ஆயிரம் சிந்தனைகள் அவர் சூழல் அப்படி. ஜார்ஜ் டவுனிலிருந்து முருகன் கோவில் அர்ச்சகரான புண்ணியகோடிக் குருக்கள்

வருவதாக டெலிபோன் செய்தார். என்ன ஆனார்?... அவர் பெற்ற அருமைப் பிள்ளைக்குச் சினிமாவில் நடிக்க வேண்டுமாம்! நடிக்கட்டும்! 'சோனு—மூனு' விடம் சிபாரிசு செய்தால் போகிறது! அப்புறம் அந்தப் பையன் பாடு, அந்தப் படத் தயாரிப்பாளர் பாடு! அவர்கள் இரண்டு பேர்களுடைய தலைவிதியின் பாடு!

தேவமனோஹரியை அடுத்த கட்டத்தில் நினைத்துக் கொண்டார் வீரபாகு. ஏதேதோ சொப்பன நினைவுகள் சிலிர்த்து எழுந்தன. போதைக்கிறக்கம் அவரைப் பிடரி பிடித்துத் தள்ளியது. மௌனப் புன்னகையை தமக்குத் தாமே வெளியிட்ட வண்ணம், எதிர்ப்புறம் பார்வையைப் பதித்தார்.

மங்களத்தைக் காணோம்!

பங்களூர்ப் பங்கஜம் ஆனந்த நித்திரை வசப்பட்டு இருந்தாள். நடைபாதை வாசிப் பெண் உள்ளங் கையில் தலையை வைத்துக் கொண்டு 'சிவனே' என்று விதியை மறந்து தூங்குவாளே அப்படி அவளும் உறங்கினாள்.

கைம்மை நோன்பு இயற்றும் பெண்கள் கூட இப்படித்தான் தலையணைச் சுகம் இழந்து தூங்குவார்களாம்!

'பங்கஜத்தோடு நான் 'ஓ' போட்டேன். அதை நானே கலைச்சிட்டேன்!...நினைவுகளில் பெருமூச்சு நெட்டுயிர்த்தது. என்னவோ தோன்றிற்று—வீரபாகு வின் விழிகள் பங்கஜத்தின் முகத்தை நோக்கி ஊடுரு வின. அந்தக் கள்ளமில்லாத முகத்தில் இழைந்திருந்த பார்வையை அவரால் மீட்டுக் கொள்ளவே முடிய வில்லை. ஐந்து வயதிலே—அறியாப் பருவத்திலே மணல் வீடு கட்டி, மன வீடும் கட்டி விளையாடி மகிழ்ந்த அந்த நாட்கள் மீண்டும் திரும்பாதா? திரும்பி வர முடியாதா?

ஆண்டவனே! நீ பிள்ளைப் பிராயத்திலே உமைய வளுடன் இம்மாதிரி மணல் வீடு கட்டி விளையாடி,

அதன் விளைவாக காதல் வசப்பட்டுத் தவிக்கும் ஒரு பயங்கரத்தை நீ அனுபவித்திருக்க மாட்டாய்! அன்று நான் ஏன் சந்தித்தேன் பங்கஜத்தை? தெய்வமே, அன்று என் பங்கஜத்தை என்னிடமிருந்து ஏன் பிரித்தாய்? கண்ணீர் கதை சொன்னது. கண்களை மஸ்லின் வேஷ்டி முனையால் துடைத்துக் கொண்டார். அவர் பார்வை தாழ்ந்தபோது, பங்கஜத்தின் மார்புப் புறத்தில் பதிந்திருந்த தாலித் தழும்பு துலாம்பரமாகப் பளிச்சிட்டது!

"ஐயா!"

அழைப்புக் கேட்டது.

திரும்பினார் வீரபாகு.

பரிமளம் நின்றுகொண்டிருந்தாள், கை விரல்களைப் பிசைந்து கொண்டே. காது வளையங்கள் குலுங்கின. கை வளைகள் குலுங்க வில்லை. இமைச் சிறகுகள் படபடத்தன. சிந்தூரக் கன்னங்கள் குழிந்தன. 'திருஷ்டி மச்சம்' பாங்குற அழகோச்சியது.

"என்னம்மா?"

"மிஸ்டர் அதிவீரராம பாண்டியன் விஷயமாக ஒரு தகவல் சொன்னேனே, நினைவிருக்குங்களா?"

வீரபாகுவுக்கு மட்டுந்தான் கேட்டது அக்குரல்.

யோசனை செய்தார் அவர்.

"நான் அவருக்கு எழுதிய ஒரு லெட்டரை வச்சுக்கிட்டு அதையே பசடையாக்கி என்னைப் பயமுறுத்தி மடக்க முயல்கிறார்னு சொன்னேனுங்களே?"

"ஓ!... அதுவா? இப்பத்தானம்மா ஞாபகத்துக்கு வருது!... ஆமா, அதுக்கென்னம்மா? ஒரு கன்னிப் பெண் ஒரு வாலிபனுக்கு கடுதாசி எழுதினால், அதை வச்சுக்கிட்டு அவன் என்ன செய்ய முடியும்? வேணுமனா, பல்பொடி மடிக்கலாம். அவ்வளவுதானே அம்மா, பரிமளம்?

தமிழ் நாட்டிலே ஒரு குமரிப் பெண்ணோட கற்பு அவளோட மனசிலே தான் இருக்குது அப்படின்னு நீ அடிக்கடி என்கிட்டே சொல்ல மாட்டியாம்மா? உன்னோட லட்சியக் காதலன் மிஸ்டர் அதிவீரராம பாண்டியன்! நான் சொல்லலே, நீயே சொல்லிட்டே!... ஆணித்தரமாகச் சொல்லிட்டே!...அதற்கப்புறம் நீ ஏனம்மா கவலைப்பட வேணும்?" அவர் தம் போக்கில் உணர்ச்சிகளைக் கொட்டிக் கொண்டே பேசினார்.

பரிமளம், ரோஜாப்பூ மடல் மடலாக முத்துப் புன்னகை உதிப்பது மாதிரி, குறுஞ்சிரிப்புக் காட்டினாள்.

'நான் பாண்டியனுக்கு எழுதின லெட்டர் இன்னிக்குக் காலம்பற அவரோட டைரியிலேருந்து விழுந்தது, காற்று அதை அடிச்சுக் கொண்டாந்து என் காலடியிலே போட்டுச்சுங்க, ஐயா!"

"ஆஹா" என்று கை கொட்டிச் சிரித்தார்.

சிரிப்பின் அமர்க்களப் போக்கைச் செவியுற்றான் அதிவீரராம பாண்டியன். கையில் பற்றி எடுத்த 'லூஸம்பக்' என்ற அந்த ருஷ்யக் கதைத் தொகுப்பை விகாரமடைந்த முகத்தோடு வீசினான்.

ஓர் ஓரமாக அமர்ந்து உரையாடிக் கொண்டிருந்த வீரபாகு—பரிமளம் இருவரையும் அதே விகாரமடைந்த பார்வையை மாறாமல் பார்த்தான். அவன் ஓர் அரைக் கணம் கண்களை மூடினான்.

குமாரி பரிமளம் அவனது மனக் கண்களின் அந்தப் புரத்தில் கிரேக்க நாட்டுத் தேவதையின் சிலை வடிவெடுத்தாள். ஆர்ப்பரித்த ஆழியினின்றும் வெண்ணிற ஆடை ஒட்டித் திகழ, நீரும் நீர்த்தேவ குமாரியும் போல, மோகினி வடிவம் கொண்டாள். மறுகணம்...ஈசனுடன் வீம்பு செய்து நடனம் ஆடினாளாமே எல்லைக்காளி, அந்த அவதாரமும் எடுத்தாள், குமாரி பரிமளம்!

பரிமளம் மோகினியா?

தேவதையா?

தெய்வமா?

இல்லையென்றால், மானுடப் பெண்ணேதானோ?

சிகரெட்டுப் புகைச் சுருள்கள் ஏர்கண்டிஷன் வசதி பெற்றிருந்த அந்தக் கூடத்தில் மீண்டும் நிரம்பின.

"மிஸ்டர் பாண்டியன்!" என்று அழைத்துக் கொண்டே அவனை நோக்கி வந்தார் வீரபாகு. பங்களூர்ப் பங்கஜம் மஞ்சள் பத்திரிகைக் கிழிசல்களை ரகசியமாகக் கிழித்து வீசினாள் அல்லவா, அந்தக் கிழிசல் ஒன்றில் இருந்த அவரது புகைப்படத்தை ரசிக்க எண்ணிய போதுதானே, சிறுகதை ஆசிரியன் ஏ. வி. பாண்டியன் அங்கே தோன்றினான். அவரது உருவப் படத்தை மிதித்த அவர் நடை தொடர்ந்தார்.

குமாரி பரிமளம் இப்போது அடங்கியிருக்கும் எரிமலையாக நின்றாள். ரேடியோவை ட்யூன் செய்ய விழைந்தாள்; நடந்தாள். 'சிலையெடுத்தான் ஒரு சின்னப் பெண்ணுக்கு!' என்ற பாட்டு கேட்டது— அவள் மயங்கிய பாட்டல்லவா அது! பாண்டியன் திடுக்குற்றுப் பார்வையைத் திருப்பினான்.

ஓரக் கண் பதித்து ஒய்யாரமாகச் சிரித்துவிட்டு கண்களைத் தாழ்த்திக் கொண்ட பாண்டியனின் சாகஸத்தை அவள் அறியாதவளா, என்ன?

மேற்கு மாம்பலத்தின் தென்கோடி குமாரி பரிமளத்தின் மனத்திரையில் நிழலாடியது. தாயே, நீ சொன்னாயே ஒரு சோகக் கதை—அந்தக் கதையின் நாயகனை—உன்னுடைய துன்பத்தின் கதை நாயகனை-அதாவது என் தந்தையை—என்னைப் பெற்றத் தந்தையை நான் எப்படி அம்மா இனம் காணுவேன்?... ஏழைகளின் உலகத்திற்கு மத்தியிலே ஒரு கண்ணகியாக வாழ்ந்து கொண்டிருந்த கதையை நினைக்கும் நேரமா இது?...

மனம், சமயங்களிலே முடுக்கி விட்டால் ஓடக் கூடிய பொம்மை வண்டி போலத்தான்.

பரிமளம், நெஞ்சில் தாவணியைப் பதித்தவளாக விழிகளைத் தாழ்த்தினாள். வெம்மை நெடுமூச்சு சுட்டது. சுடாமல் கிடந்த தங்கச் சங்கிலியின் பதக்கத்தை நெருடி விட்டாள். பிறகு தலையைத் திருப்பினாள்.

மயில் இலகை மையம் பார்த்துப் பிரித்தால், பக்கங்களும் அழகோடிப் பொலியுமே, அவ்வாறு அவளது தலை அலங்காரம் திகழ்ந்தது. கனகாம்பரப் பூக்கள் கண் பொத்தி விளையாடினவோ?

"ஆல்ரைட்! இனி நான் மிஸ்டர் பாண்டியன் பேச்சைக் கேட்க வேண்டும்!"—சோபாவில் சாய்ந்தபடி ஒயிலோடு காட்சி தந்தாள் குமாரி பரிமளம்!

புகழ்பெற்ற திரையுலக அழகி......யின் கவர்ச்சி மிக்க தோற்ற அமைப்பு, அவள் உருவில் பிரதி பலித்தது!

"மிஸ்டர் பாண்டியன்!"

"சொல்லுங்கள் "

"என்னைப் பற்றி முதலிலே உங்ககிட்டே சொல்லி விட்டு, அதற்கப்புறம் உங்களைப் பற்றி நான் தெரிஞ் சுக்க ஆசைப்படுறேன். அதுதான் நியாயம்னும் எனக்குத் தோணுது!"

"சொல்லுங்க ஸார், கேட்கத் துடிக்கிறேன்""

"அப்படியா?"

"ம்!"

"பொது ஜனக் கண்ணோட்டத்துக்கு நான் ஒரு பெரிய தொழிலதிபர்தான்! ஆனால், என்னுடைய மனச்சாட்சிக்கு முன்னே நான் ஒண்ணும் நம்பர்

அயோக்கியன்!...சமுதாய விரோதி!...நம்பிக்கைத் துரோகி!" என்று தமமைப் பற்றிய அறிமுகத்தைப் பாதியில் நிறுத்தி விட்டு, பாதிப் பார்வையை அதிவீர ராமபாண்டியன் பேரில் செலுத்தலானார் வீரபாகு.

அதிவீரராம பாண்டியன் அப்படியே சிலையாக மலைத்துப் போய் விட்டான்.

பங்களூர்ச் சீமாட்டி பதுமை ஆனாள்!

மங்களத்தின் இதயம் புயலில் தடுமாறும் அகல் விளக்கானது!

குமாரி பரிமளத்தின் நெஞ்சு வெடித்து விடும் போலிருந்தது.

தொழிலதிபர் வீரபாகு மனிதப் பிண்டத்தின் வரி வடிவமாக விளங்கினார்.

ஆனால்;

அதிவீரராம பாண்டியனே பேயடிபட்ட நிலையில் கதிகலங்கிப் போயிருந்தான். நெஞ்சைத் தடவிக் கொண்டான். பிறகு ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவன் போன்று காணப்பட்டான். தான கொணர்ந்த சிவப்பு டைரியைத் தேடினான். கிடைத்தது. அதில் மடித்து வைக்கப்பட்டிருந்த பத்திரிகையைத் தேடினான். அதுவும் கிடைத்து விட்டது. அந்தப் பத்திரிகையை விஷமப் புன்னகை கொழிக்க வீரபாகுவிடம் சமர்ப்பித்தான்.

எந்த மஞ்சள் பத்திரிகையை பங்களூர்ப் பங்கஜம் யாருக்கும் தெரியக் கூடாதென்று சுக்கல் நூறாகக் கிழித்து வீசினாளோ, அதே பத்திரிகை புத்துயிர் பெற்ற மாதிரி, விதியாக—வினையாக இப்போது தொழிலதிபர் வீரபாகுவின் கைகளிலே விளையாடியது!

# 13. திருஷ்டி மச்சம்

அதிவீரராமபாண்டியன் சேர்ப்பித்த அந்தப் பத்திரிகையை 'இனம்' கண்டு கொள்ளக்கூட நாட்டம் இன்றி, அவனுடைய கண்களை ஊடுருவிப் பார்த்தார் தொழிலதிபர் வீரபாகு கள்ளத்தனம் பயின்ற அந்த விழிகளை மட்டும் அவரால் 'இனம்' கண்டுகொள்ள முடிந்தாற்போன்ற ஓர் உள்ளுணர்வு அவருள் ஆலவட்டம் சுழன்றது. அதன் விளைவாக, தம்முடைய இதயத்தின் இதயம் இனம் விளங்காத தவிப்பில் கட்டுண்டிருந்ததையும் அவர் அறியாமல் இல்லை. ஆனால், அவரது சொந்த ஆசாபாசங்கள்—இன்ப துன்பங்கள் அப்போதைய மனநிலையில் அவருக்கு ஒரு பொருட்டாகத் தோன்றினால்தானே? அவர் மனம் முழுவதும் பரிமளத்தையும், அதிவீரராம பாண்டியனை யுமே சுற்றிக் கொண்டே இருந்தது.

'தெய்வமே! பரிமளம் எங்க கனவுப் பிரகாரம் எங்க மகள் ஆயிட்டுது; நீ அந்தப் பாக்கியத்தை எங்களுக்குக் கொடுத்திட்டே!... சந்தானப் பாக்கியத்துக்காக முப்பது வருஷம் தவம் கிடந்தவங்க நானும், என் மங்களமும்!... அந்த அதிர்ஷ்டம் எப்படியோ ஒரு விதத்திலே எங்களுக்குக் கைகூடி வந்திட்டுது. அந்த மட்டுக்கும் நாங்ககூட ;கொடுத்து வச்சவங்களேதான்!... அதே மாதிரி, பரிமளம் அது விரும்புற பாண்டியனைக் கலியாணம் செஞ்சிக்கிடவும் அனுக்கிரகம் செய்ய மாட்டியா, தெய்வமே! நேர்மையான கனவுகளையும், நியாயமான ஆசைகளையும் தெய்வம் கட்டாயம் நிறை வேற்றிவைக்கும்னு, பெரியவங்க சொல்லுவாங்களே!'- நினைவுகள் லய சுத்தம் கொண்ட சங்கீதமாக இயங்கி அழகான ஆனந்தத்தை அருளின. அவர் ஓர் அரைக் கணம் தம்மை மறந்தார்.

காலடி 'மௌடிகம்' செய்து கொண்டிருந்தது.

அதைப் பற்றிய கவலேயோ, அக்கறையோ வீரபாகுவுக்கு இல்லேதான்! அவர் மீண்டும் அதிவீரராம பாண்டியனை ஆழ்ந்து நோக்கினார். அதே பார்வையால் குமாரி பரிமளத்தையும் அளந்தார். அவருடைய மனக் கிழியில், பரிமளமும், பாண்டியனும் மாலேயும் கழுத்து மாக, புன்னகையும் புது நிலவுமாக ஒளிர்ந்தனர்.

ஒரு சம்பவத்தை எண்ணமிடலானார் வீரபாகு. அவர் மங்களத்தையும் பங்களூர்ப் பங்கஜத்தையும் மாறிமாறிப் பார்த்தபடி இடம் பெயர்ந்து அமர்ந்தார். எண்ணத் தொடங்கியதும், சம்பவம் சட்டை உரித்த நல்லபாம்பாகப் பளிச்சிடத் தொடங்கியது.

"ஐயா!" என்று அன்பு கொழிக்க அழைத்துக் கொண்டே வந்தாள் பரிமளம். பெயரில் மணம் பரப்பிய பரிமளம், அவளுடைய பரிசுத்தமான அந்தத் தெய்வீக அழகிலும் சுகந்தம் தாவி விளையாடியது.

பரிமளத்தைக் கண்டதும் வீரபாகுவுக்கு ஆனந்தம் பிடிபடவில்லே. சிறு பிள்ளேயின் தூய அன்புடன், "என்னம்மா?" என்று கெஞ்சுதலோடு விசாரித்தார்

"உங்ககிட்டே ஒரு விஷயத்தைத் தெரியப்படுத் திறதுக்கு இப்போதுதான் எனக்குத் தைரியம் வந்திச் சுங்க, ஐயா!" என்றாள் கன்னிப் பெண்.

"நான் உன்னோட தந்தையாட்டம், என் கையிலே சொல்றதுக்கு இவ்வளவு தூரம் யோசிக்கவா வேணும்? தைரியமாய்ச் சொல்லம்மா, பரிமளம்!" என்று பரிவுடன் சொன்னார் வீரபாகு.

பரிமளத்தைச் சந்திக்கக் கிட்டிய அந்த வாய்ப்பை விதியின் வாழ்த்தாகவே கருதியிருந்தார் வீரபாகு. இல்லேயென்றால் பிள்ளேப்பேறு அற்றிருந்த அவருக்குத் தேடிவந்த தெய்வமாக பரிமளம் கிடைத்திருப்பாளா? வாரத்துக்கு ஒரு தடவையாவது பரிமளம் இந்தப் பங்களாவுக்கு வந்து செல்வாள். வரும்போது அன்பை யும், பாசத்தையும் கொண்டு வருவாள். மகாலட்சுமி

அல்லவா? ஆனால் போகும்போது அங்கே ஏக்கத்தையும் பிரிவின் துயரையும் தேங்கவைத்து விட்டுப் போவாளே அந்த ரகசியம் வீரபாகு தம்பதிக்கு அல்லவா தெரியும்?

எதையோ நினைத்துப் பார்க்கத் துடித்தார் வீரபாகு. அதற்குள் மனம் இந்த மழலை எடுப்பார் கைப் பிள்ளை யாகி யார் யாருடைய தோள்களுக்கெல்லாம் தாவி விட்டது?

அந்தச் சம்பவம்:

குமாரி பரிமளம் சொன்னாள்: "ஐயா, நான் மிஸ்டர் அதிவீரராம பாண்டியனைக் காதலிக்கிறேன், ஐயா!"

அவர் சின்னக் குழந்தை மாதிரி விகல்பம் இன்றிச் சிரித்தார். "நன்றாகக் காதலி அம்மா. காதலிக்கிறதுக்கு ஆணுக்கு மட்டும் தானா உரிமையுண்டு. இந்த அருமை மிகு தமிழ் நாட்டிலே பெண்ணுக்கும் காதலிக்க உரிமை உண்டு! நன்றாகக் காதலி அம்மா! காதலிக்கப் படுவதற்குக் கதைகளிலே கன்னிப் பெண்கள் தாம் காத்திருப்பது வழக்கம். உன் விஷயத்திலே ஒரு ஆடவன் காத்திருக்கிறான். நீ துணிச்சல்காரி அம்மா, துணிச்சல்காரி!... அகம் கண்டு புறம் கண்டவள் தமிழச்சி. அந்தத் தமிழச்சியையே நான் உன்னில் தரிசிக்கிறேன். காதலுக்கு என் வாழ்த்துக்கள்!" தங்கப் பல் மின்னிப் பளிச்சிட்டது.

பரிமளம் கண்களை அழகுடன் மூடிக் கொண்டாள். கண் திறக்கப்படாத மோகினிச் சிலையாகத் திகழ்ந் தாள், பொதுக் கண்ணோட்டத்தில்! ஆனால் வீரபாகு வின நெஞ்சரங்கிலே அவள் அவர் பெற்ற செல்வமாகப் பாசம் காட்டி விளையாடினாள்! அன்பு கொட்டிப் பாடினாள்!

"அம்மா பரிமளம், அதிவீரராம பாண்டியன் என்கிற புதிய—ஆனால் பழைய அழகுப் பெயரை வச்சிக்கிட்டு இருக்கிற அந்த வாலிபன் யாரம்மா?"

"அவர் பிரபலமான எழுத்தாளர். சிறுகதைகளிலே தனக்கென்று தனி இடம் ஒதுக்கிக் கொண்டவர்.

அவர் நல்ல அழகன். என் இதயத்திலே அவருக்கு ஒரு இடம் ஒதுக்கிக் கொடுத்து விட்டேன்.''

''அப்படியானால் அந்த இளைஞர் வரைக்கும் ஒரு பிரச்னை தீர்ந்தது. அதுதானம்மா, வீட்டுப் பிரச்னை! அவர்தான் உன் நெஞ்சில் குடியிருக்கிறாரே!...''

முத்துப் புன்னகை விநயமாக உதிர்ந்து பரவியது. மூக்கின் நுனியில் அழகு ஒளி பரவியது. நாசித் துவாரங்கள் நயம் சேர்த்து, நாணம் சேர்த்து, நாணயம் சேர்த்துப் புடைத்தன. அழகார்ந்த இளம் மார்பகத்தில் செல்லப் பிள்ளையாகச் சரிந்து கிடந்தது, பச்சைபட்டு. காப்பித்தூள் நிறத்தில் விளங்கிய சோளி அந்த மேனிச் சிவப்புக்கு நல்ல பொருத்தம். காது வளையங்களில் காதல் 'பார்' ஆடியதோ? 'பாரில் நுழைந்தவனாக அதிவீரராமபாண்டியன் ஆகிவிட்டானோ?'

''ஒரு நல்ல நாளில், நான் மிஸ்டர் அதிவீரராமப் பாண்டியனைச் சந்திக்க வேண்டும்'' என்று தம் ஆவலை வெளியிட்டார் வீரபாகு.

அதிவீரராமபாண்டியனை அன்றுவரை சந்திக்க முடியாமல் போய்விட்டது.

பாவம், வீரபாகுவுக்கு ஆயிரம் அலுவல்கள்!

சந்திக்க விரும்பிய நேரத்தில் அதிவீரராம பாண்டியனின் மனமாற்றத்தை—அதாவது, அவனுக்கு பரிமளத்தின்பால் இருந்த மையல் மனமாற்றம் எய்திய விந்தையை அவள் மூலமாக அவர் அறிய நேர்ந்தது.

இப்போது அதே அதிவீரராம பாண்டியனே வீரபாகுவைச் சந்திக்க வீடு தேடி வந்திருக்கிறான்! அவன் பரிமளத்தை இப்போது விரும்பவில்லை என்பதைத் தெரியப்படுத்த வந்திருக்கிறானோ? ஊஹூம், அப்படி இருக்க முடியாது அந்த அளவுக்கு இந்த இளைஞர் தலைமுறையிடம் நாணயம் இருந்தால்தான் தேவலாமே. நாக்கின் ருசிக்கேற்ப 'ட்ரிங்' வகைகளை மாற்றுவதில்தான் இவர்களுக்கு அக்கறை மிகுதி

போலும்! எங்கே வந்தான் பாண்டியன்? பரிமளம் இங்கே இருப்பாள் என்ற துப்பு தெரியாமலே வந்து விட்டானு? இந்த ஒரு சந்திப்புப் பிணைப்புக்குத்தான் விதி என்று பெயரிடுகிருர்களா? விதியாவது, மண்ணுங்கட்டியாவது!...

° 0 °

வீரபாகு சுயப்பிரக்ஞை பூண்டார். கையில் உறுத்திக் கொண்டிருந்த அந்த மஞ்சள் பத்திரிகை, அப்போது அவரது மனத்தையும் உறுத்தியிருந்தால், அந்த மஞ்சள் பத்திரிகையின் வெள்ளைத் தாள்களைப் புரட்டி இருக்க மாட்டாரா? அந்த ஏட்டின் முதல் பக்கத்தில் வெளிப்படுத்தியிருந்த சென்னை லட்சாதபதி வீரபாகு—அறுதை அழகி குமாரி பரிமளம் காதல் லீலைகள்! என்ற சுவை சொட்டிய வாசகங்களைப் படித் திருக்க மாட்டாரா?

பாவம்!

பாவமாவது, புண்ணியமாவது!...

வீரபாகு மூன்ருவது முறையாக அதிவீரராம பாண்டியனை ஏறிட்டு விழித்தார்

அதிவீரபாண்டியனே மூன்ருவது முறையாக சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு தானே நெருப்பாகவும் புகையாகவும் இயங்கி மௌனமாக விதியின் வடிவமாக வீரபாகுவை இமைக்காமல் பார்த்த வாறு கம்பீரமாக ஆணவம் துலங்க உட்கார்ந்து கொண்டிருந்தான்.

பரிமளத்தை அழைத்தார் வீரபாகு.

அதற்குள்! தொலைபேசி பெயரிடாமல் அழைத் தது. அருகில் இருந்தாள் குமாரி பரிமளம். திரை நட்சத்திரம் மாதிரி ஒயில் கூட்டி ஒய்யாரம் கூட்டி நின்ற அவள் பதட்டம் சூழ எழுந்தாள். தொலை பேசியின் அழைப்புக்கு மதிப்புக் கொடுத்தாள். எதிர்ப்

புறமிருந்து தேவமனோஹரி பேசினாள் பரிமளத்தோடு பேச விழைந்தவளுக்கு, அதே பரிமளம் குரல் கொடுத்ததைக் கேட்டதும், இரட்டிப்பு மகிழ்ச்சி ஏற்பட்டிருக்க வேண்டும்!

வருகிறேன், ஸிஸ்டர்!" என்று பதில் சொல்லிவிட்டு நின்றாள் பரிமளம்.

அதற்குள் அடுத்த தடவையாகவும் தொலைபேசி ஒலித்தது. பதறினாள் பரிமளம். "ஐயா, புண்ணிய கோடி குருக்கள் இங்கே புறப்பட்டு டாக்ஸியில் வந்தாராம் விபத்து ஏற்பட்டு ஜெனரல் ஆஸ்பத் திரியில் படுக்கையில் கிடக்கிறாராம்! பிழைத்ததே மறு பிழைப்பாம்!" என்று செய்தியை விவரித்தாள் அவள்.

பதறினார் வீரபாகு. "இன்னும் அரைமணியில் நான் ஜெனரல் ஆஸ்பத்திரிக்குப் புறப்படுகிறேன்!" என்றார்.

பரிமளம் நடந்து வந்தாள். தெய்வப்பெண் கன்னி வடிவு கொண்டு பூமியில் கால் பாவி நின்ற மாதிரி, பரிமளம் நின்றாள். இடதுபுறக் கன்னத்தில் அழகு கூட்டித் திகழ்ந்த திருஷ்டி மச்சம் எழில் மின்னலாய் ஒளிர்ந்தது.

"மிஸ்டர் பாண்டியன்! காதல் என்றால் என்ன?"

"காதல் என்பது கதைகளிலே ஒரு மாய மோகினி! நடைமுறை வாழ்வில் காதல் ஒரு ஹம்பக்!—வெளி வேடம்! வெற்று வேடம்!...பொய் வேடம்!" என்று சூத்திரம் அமைத்தான் சிறுகதை மன்னன் அதிவீரராம பாண்டியன்.

"உங்களுடைய காதல் விளையாட்டுக்களைப்பற்றி நான் அறியலாமா?" என்று கேட்டார் வீரபாகு.

அதிவீரராமபாண்டியன் விநயமாகச் சிரித்தபடி, "என் காதல் விளையாட்டுக்கள் உங்களது லீலைகளுக்கு முன்னே சர்வ சாதாரணம், ஐயா!" என்று சொன்னான்.

"அவ்வளவு தான்!—வீரபாகுவின் முகம் பூராவும் வேர்த்துக் கொட்டியது. என்ன சொல்கிறீர்கள் 'மிஸ்டர் பாண்டியன்?' என்று வேதனையின் உச்சத்தில் நின்று வினவினார் வீரபாகு.

"நான் ஏதும் சொல்லவில்லை. உங்களிடம் சற்று முன் சமர்ப்பித்தேனே, ஒரு தமிழ்ப் பத்திரிகை, அது சொல்வதைத்தான் நானும் சொன்னேன்!" என்று மறு மொழி கொடுத்தான் பாண்டியன்.

அப்போதுதான், அந்த மஞ்சள் பத்திரிகையைப் பிரிக்க முனைந்தார் தொழிலதிபர். மறுகணம், 'ஐயோ, தெய்வமே' என்று ஓங்காரக் குரல் எழுப்பினார் அவர்.

அந்த அவல ஒலி வரவேற்புக் கூடத்தையே அடைத்துக் கொண்டு எதிரொலி பரப்பத் தொடங்கி விட்டது!

# 14. காதல் ஒரு ஹம்பக்!...

படைப்புக் கடவுளுக்கு மட்டும்தான் புன்னகையில் புதிர் கலந்து விளையாடத் தெரியும் என்பது இல்லை!

அதிவீரராம பாண்டியனுக்கும் கூட புதிரான புன்னகையை வெளியிடத் தெரிந்திருந்தது!

மஞ்சள் பத்திரிகையைப் புரட்டிப் பார்த்த தொழில் அதிபர் வீரபாகு, அந்தத் தலைப்பு வரிகளைக் கண்ட வுடன், "ஐயோ தெய்வமே!" என்று ஓலம் பரப்பினார் அல்லவா? அந்த அவல ஒலி அப்போது அதிவீரராம பாண்டியனுக்குத் தேனாக இனித்தது போலும்! இல்லையென்றால் அவன் உதடுகளிலே அத்தகைய விஷமப் புன்சிரிப்பு கருநாகம் நெளிவது மாதிரி இழைந் திருக்குமா?

பார்க்கப்போனால், இந்த பாண்டியனும் இரண்டா வது பிரம்மாதான்! அதனால்தான் அவனால் அப்படி

இதயமிழந்த சிரிப்பை வெளிக் கொட்ட முடிந்ததோ? எழுத்தாளன் என்றால், அவனுக்கு நல்ல இதயம் தான் மூலதனம் என்பார்களே? அது பொய்யா?

எது பொய்?

சிறுகதை மன்னனின் இதயம் பொய்யா?

யார் பொய்?

இந்தச் சிறு கதை மன்னனே பொய்யா?

பாதங்கள் பாவி நின்ற பூமி தம்மினின்றும் விலகிச் சுழல்வது போலவும், தம்மை அழுத்தி மூடிச் சுற்றுவது போலவும் ஒரு கணம் வீரபாகுவுக்குத் தோன்றியது.

"சென்னை லட்சாதிபதி வீரபாகு—அறுதை அழகி குமாரி பரிமளம் காதல் லீலைகள்!"

இவ்வாறு கொட்டை எழுத்துக்களில் அச்சிடப் பட்டிருந்த அந்த வரிகளை மீண்டும் பார்வையிட்டார், அவர். எதிரும புதிருமாக வெளிப்படுத்தப்பட்டிருந்த தம் படத்தையும் பரிமளத்தின் படத்தையும் மாறி மாறி நோக்கினார். 'ஐயோ தெய்வமே!' என்று மறுபடியும் அவருடைய உள் மனம் விம்மியது; அழுதது; புலம்பியது.

கண்ணீர் வழிந்தது.

அது ரத்தக் கண்ணீர்!

வழிந்தது ரத்தக் கண்ணீர்தானா?

இல்லை......

"மகளே!"—மனச் சாட்சியின் தார்மீக நெஞ்சம் விளித்தது.

பெருகிற்று சுடுநீர்.

பெருகியது கண்ணீர் வெள்ளமேதானா?

இல்லை; அவருடைய நெஞ்சம் எனும் தடாகத்திலே வற்றாமல் வரளாமல் போற்றிப் பேணிக் காத்து வந்தாரே அந்தப் பாசம்—அந்தத் தெய்வீகப் பாசம் அதுவேதான் அப்படி விழி நீராகி உருண்டு, உருக்குலைந்து இப்படி யாளாமல், மீளாமல் அமுத சுரபியாகப் பெருக்கெடுத்து ஓடிக் கொண்டிருக்கின்றதா?

கண்ணீர் மாலைக்கும் மணம் உண்டு. மனமும் இருக்கத்தான் வேண்டும்!

"பரிமளம்!" என்று சற்று முன்னம் வீரபாகு அழைக்கவில்லையா, அந்தக் குரல கேட்டுத்தான் குமாரி பரிமளம் அங்கு வந்து நின்றாள். ஆனால் அவள் பார்வையோ அதிவீரராம பாண்டியன்பால் ஆரோகணித்திருந்தது.

பாண்டியனின் பார்வையோ சூன்யத்தில் சித்து விளையாட்டுச் செய்து கொண்டிருந்தது.

முருகனை நினைத்தார். ஒருகால் நினைக்கின் இரு காலும் வரப் பழகியவன் ஆயிற்றே ஆறுமுகன்!

பரிமளத்தைக் குலை நடுக்கத்தோடு ஏறிட்டுப் பார்க்க முனைந்தார் வீரபாகு முடியவில்லை. நெஞ்சம் தவித்தது.

சில நாழிப் பொழுதுக்கு முன்னர், பரிமளத்தின் சோளிப் பொத்தான் சரிவரப் பொருத்தப்படாமல் இருக்கக் கண்டு, அந்நிலையை வெகுளித்தனமான தூய பாசத்தின் பரிவுடன் அவளுக்கு அடையாளக் குறி வாயிலாக எடுத்துக் காட்டிய அந்த நிகழ்ச்சி இப்போது புதிய கோணத்தில் நின்று மனத்தைக் கூண்டுப் புழுவாக அரித்தது; அவர் தூண்டில் புழுவானார்.

"மகளே!" ஆயிரம் முறை மகளை அழைத்தார் வீரபாகு. நெஞ்சக் கூட்டுக்குள்ளே தட்டுத் தடுமாறித் தவித்தவராக நின்று, அவர் கூப்பிட்டார் கண்ணீர் மடை திறக்க எத்தனம் செய்தது. ஆனால், வீரபாகு

பழம் தின்று கொட்டை போட்டவர் அல்லவா? அவரிடமா, அந்தக் கண்ணீரின் சம்பம் சாயும்?

கொடி மின்னல் குமரிக் கொடியாகத் தவழும் பொழுதிற்குள் வீரபாகு பலமான சிந்தனை செய்தார். பிறகு, தம் மனையாட்டி மங்களத்தைத் திசை திருப்பி நோக்கினார்.

மங்களம் பஞ்சு மெத்தைச் சோபாவில் கண் வளர்ந்து கொண்டிருந்தாள்.

மற்ற நேரமானால், வீ ர பா கு நீலாம்பரியில் 'தாலேலோ' பாடி அருமைத் திருமனைவியைத் தூங்க வைத்திருப்பார். ஆனால் இப்போது விதி விளையாடிக் கொண்டிருக்கையில் அ வ ரு டை ய காதல் விளையாட்டுக்கு இதுவா உகந்த பொழுது?

வெள்ளைப் பத்திரிகையில் அபாய அறிவிப்பு துலங்க அச்சாகியிருந்த 'காதல் லீலைகள்' என்ற சொற்கள் அவருடைய உந்திக் கமலத்தைக் கசக்கிப் பிழிந்தன. எதை எதையோ எண்ணினார். எது எதுவோ நிழலாடின.

"காதல் என்பது ஒரு ஹம்பக்...வெற்று வேடம்! வெளி வேடம்!—பொய் வடிவம்" என்று சொன்னானே அதிவீரராமபாண்டியன்...?

அதிவீரராம பாண்டியனை மடக்கிப் பிடித்து வலையில் வீழ்த்தி அந்தச் சாகஸத்திறோடு அவனை பரிமளத்தின் அன்புக் கரங்களிலே ஒப்படைத்து விடக் கனவு கண்டார் வீரபாகு...?

ஆனால் நடந்தது...?

இப்போது வீரபாகுவே அதிவீரராம பாண்டியனின் வலையிலே வீழ்ந்து விட்டாரே?

நிலைக்கு — இந் நடப்புக்கு — இந் நிகழ்வுக்குப் பெயர்தான் விதியா?

பரிமளம் காது வளையங்கள் கனிந்தாட, மார்பகத்தில் அழுந்தப் பதிந்திருந்த டாலர்ப் பதக்கம் கண் சிமிட்டி அழகே கனவாகவும், கனவே அவளாகவும் அழகின் போதையாகி; போதையின் பாதமாகி, அந்த சிறுகதை மன்னனின் முன்னே தரிசனம் கொடுத்த வண்ணம் நின்று கொண்டேயிருந்தாள்.

இப்போதுதான் பாண்டியன் அவளை ஓரக் கண் பதித்துப் பார்த்தான்.

அரைக் கணம் நிலை மயங்கினான் அவன்.

அவள் பெண்ணா?

மோகினியா?

தெய்வமா?

இல்லையென்றால்......

மீண்டும் ஒரு தரம் பரிமளத்தைப் பார்க்க வீரபாகுவுக்கு உரம் இல்லை. மறுபடியும் அவர் அவளைப் பார்த்தால், அவரது அன்பு நெஞ்சம் சுக்கல் சுக்கலாக வெடித்துச் சிதறிவிடும்!

எழுந்து வந்தாள் பெங்களூர் சீமாட்டி பங்கஜம்.

எதுவும் வீரபாகுவுக்குத் தெரியாது. அதற்குரிய ஏதுவும் இல்லை!

வீரபாகு ஒரு கணமாக திட்டத்தோடு சிந்தனைச் சிற்பி பாண்டியனை ஊடுருவிப் பார்த்தார். பாயப் பதுங்கும் புலியைவிட ஒரு படி மேலே அவன் நிற்பதாகவே அவர் கணிக்கலானார்,

"மிஸ்டர் பாண்டியன்!" என்று ஓங்கிய குரல் எடுத்துக் கூப்பிட்டார் வீரபாகு.

அந்தக் குரலின் கனம் பாண்டியனை மட்டும் திசை திருப்பவில்லை; பரிமளத்தையும் பங்கஜத்தையும் மங்களத்தையும் கூட திசை திருப்ப வைத்துவிட்டது!

உடனே கையில் பிரிந்திருந்த அந்த மஞ்சள் பத்திரிகையை வெகு ரகசியமாக எட்டாக மடித்து இடுப்பில் செருகிக் கொண்டார். டர்க்கி டவலை எடுத்து தோளில் போட்டுக் கொண்டார். குளிர்ச் சாதனம் பரவிய வரவேற்புக் கூடத்தின் குளுமை போதாது என்பது போல், ஒதுங்கிக் கிடந்த மேலை நாட்டுப் பத்திரிகையை ஒதுக்கி விடாமல் எடுத்தார்.

ஆணும் பெண்ணும் முத்தம் பரிமாறிக் கொண்டு இருந்த காதல் லீலையின் மோகக் காட்சிதான் அவர் கண்ணில் பட்டது. "சே!"—வீசினார். பிறகு, அதிவீர ராமபாண்டியனை நோக்கினார். "மிஸ்டர் பாண்டியன்! நாம் மேலே போகலாம். மனம் விட்டுச் சில நிமிஷங்கள் நாம் இரண்டு பேரும் பேச வேணும். இனியும் இந்தப் பொன்னான சந்தர்ப்பத்தைக் கை நழுவ விட முடியாது" என்று சொல்லி, அவனுடைய இணக்கத்தின் முடிவுக்கு எதிர்பார்த்தவர் மாதிரி அவனை—பாண்டியனை ஏறிட்டு நோக்கினார்.

ஆனால், அவனோ, தெய்வம் போல நமுட்டுச் சிரிப்பைக் கக்கினான்.

அவன் தெய்வம் அல்ல!

அதிவீரராம பாண்டியன் தெய்வமல்லன்!

அவன் மனிதன்!...ஊஹூம், மனிதப் பிண்டம்!... கேவலம் ஒரு மனிதப் படைப்பு...!

வீரபாகு விடுத்த வேண்டுகோளைச் செவி மடுக்காமல், தன் போக்கில் மனத்தை அலைய விட்டவன் போல் சிந்தனை வசப்பட்டு இருந்த பாண்டியன் இனம் புரிந்த வெறியுணர்வுடன் அடுத்த சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்து, புகையை இழுத்து, இழுத்த புகையை வீரபாகுவின் முகத்தில் உமிழ்ந்து விட்டான்.

சுரீரென்று இருந்தது—வீரபாகுவுக்கு. ஆனால் மூச்சுக் காட்டவில்லை அவர். அவர் மனம் எங்கெங்கோ சுற்றி அலைந்து கொண்டிருந்தது.

"பாண்டியன், வாங்க மேலே போவோம்" என்று மீண்டும் நினைவூட்டினார் அவர்.

அவனோ, சிரிக்கப் பழகும் மழலையெனச் சன்ன மாகச் சிரித்தான். அவன் பார்வை—விஷம் தோய்ந்து இருந்த அவன் பார்வை வீரபாகுவை அளந்தது. குமாரி பரிமளத்தைத் தேடினான்.

பரிமளம் எங்கோ கிடந்த 'லூஸம்பக்' என்ற ருஷ்ய நாட்டுக் கதைப் புத்தகத்தில் மூழ்கி விட்டிருந் ததைக் கண்டதும், அவனுடைய முகத்தின் கம்பீரம் சுருதி கலையப் பெற்ற சங்கீதம் மாதிரி, வசம் கெட்டது. கறுத்த முகம் பின்னும் கறுக்கத் தொடங் கியது. அவன் திரும்பவும் பரிமளத்தையே விழுங்கி விடுகிற பாவனையில் நோக்கினான்

பரிமளத்தின்—குமாரி பரிமளத்தின் வலது கன்னத்துத் 'திருஷ்டி மச்சம்' தெய்வாம்சம் பூண்டு பொலிந்தது. அவன் நோக்குத் தாழ்ந்த நேரத்தில், அவளுடைய 'அக்கோபா' சோளியின் மையப் பகுதி யில் நிலைத்தது சோளிப் பொத்தான்கள் சரிவரப் பொருத்தப்பட்டிருக்கின்றனவா என்று சோதித்துப் பார்த்தனவோ அந்தக் கண்கள்?

ஒரு சமயம் ப்ளூ டைமண்ட் தியேட்டரில் படம் பார்க்க அவனும் சென்றான்; அவளும் உடன் சென்றி ருந்தாள். படம் பார்த்துக் கொண்டிருந்தார்கள். மேலை நாட்டுக் காதலர்களுக்கு ஓய்வு கிட்டும் போதெல்லாம்—ஆமாம், படத்திலதான் முத்தம் பரிமாறிக் கொள்ளு வார்கள் அல்லவா, அம்மாதிரி அவ்வழக்கத்தை—அதாவது அவர்களது கலாசாரப் பண்பாட்டை மறந்து விடாமல், கதை நாயகன், கதாநாயகிக்கு—முத்தம் ஈந்தான். அவனோ அவளைப் பார்த்தான். முத்தம் கொடுக்கவா?—என்னவோ ஒரு வெறி மூள, அவளைப் பார்த்தான். அவளோ, மிகவும் எச்சரிக்கையுடன் இருந்தாள். அப்போதுதான், அவளுடைய சோளிப் பொத்தான் பொருத்தப் படாமல் இருப்பதைக்

கண்ணுற்ருன். அவனுடைய பார்வையின் பொருளை ஊகம் செய்து கொண்டு அவள் தன் நிலையைச் சீர் செய்து விட்டாள். அவன் சிரிக்க, அவள் சிரித்தாள்!

ஏன் அந்த நினைவு இப்போது அவனுக்கு எழ வேண்டும்?—பிறந்த மேனியாக பரிமளத்தை மனக் கிழியில் கற்பனை செய்து பார்த்த நேரத்தில், அவனுக்குள்ளே தெய்வச் சிலைதான் 'தரிசனம்' கொடுத்தது!—'பரிமளம்!'—அவன் தடுமாறினுன். முகம் வேர்வையால் நிரம்பி வழிந்தது.

அப்போது:

படித்துக் கொண்டிருந்த "லூஸம்பக்" கதையை முடித்து விட்ட பரிமளம், "மிஸ்டர் பாண்டியன்" என்று கூவினுள். 'ஒரு அழகான கதையைப் படித்தேன். சொல்லட்டுமா?...ஒரு அச்சகம். அதில் ஒரு கதை நூல் அச்சாகிறது. அதன் மேலட்டை ட்ரெடிலில் ஓடிக் கொண்டிருக்கிறது. அங்குப் பணி புரியும் இலக்கியப் பித்தன் ஒருவன் தன் பெயரை அந்தக் கதைப் புத்தகத்தின் மேலட்டையில் பொருத்திப் பார்க்க விழைகிருன். கதை நூலின் ஜாக்கெட்டில் இருந்த ஒரிஜினல் ஆசிரியரின் பெயர் இருந்த இடத்தில், அந்தப் பெயரை மாற்றி, அதற்குப் பதிலாக, தன் பெயரை 'கம்போஸ்' செய்து அப்படியே அதை 'ட்ரெடிலில்' ஓட்டி, ஒரு பிரதியை—ஜாக்கெட் தாளை—எடுத்து வைத்து ஆனந்தமடைகிருன்! எப்படி கதை?" என்று அதிவீரராம பாண்டியனிடம் கதையைச் சொல்லி, அவனது கருத்தைக் கேட்டாள் பரிமளம்!

பாண்டியன் ஆடு திருடிய கள்ளனைக விழித்தான். "விழிவழி" யென்று விழித்தான், பாவம்!...

"வீரபாகு ஸார்!" என்று அதிவீரராம பாண்டியன் அழைத்தான்.

அப்போது, தொலைபேசி யாரையோ அழைத்தது.

ஒருகணம் அமைதி நிலவியது.

அடைபட்டுக் கிடக்கும் கோயிலிலே அடைபடாமல் கிடக்கும் இறைமைச் சக்தி மாதிரி ஒரு தெய்வீக நிலை அப்போது, அங்குப் பரவியது.

தெய்வம் அங்கே எப்போது வந்தது?...

பாண்டியனுக்குத்தான் அழைப்பு! குஷ்டரோகிப் பிச்சைக்காரன்—ஒரு ரூபாய் காந்தி நாணயத்தைப் பிச்சையாக புண்ணியகோடிக் குருக்களிடமிருந்து பெற்றுனே அந்தக் குஷ்டரோகிப் பிசைக்காரன்—சிறுகதை மன்னன் அதிவீரராம பாண்டியனின் ரசிகனுன அந்தக் குஷ்டரோகிப் பிச்சைக்காரன்தான் பாண்டியனை தொலைபேசி வழியாக அழைத்தான்!

பாண்டியன் அவனோடு பேசினுன். பல்லெல்லாம் தெரியக் காட்டிப் பேசினுன். மறுகணம், "நாம் மீண்டும் நாளைச் சந்திப்போம், வீரபாகு ஸார்!" என்று சொல்லி விட்டு, விதியென வெளியேறி விட்டான், அதிவீரராமபாண்டியன்!

அப்போது:

தொழிலதிபர் வீரபாகுவின் முகத்தில் ஏமாற்றம் நிழல் விரித்தது. இடுப்பில் ரகசியமாக ஒளித்திருந்த அந்த மஞ்சள் பத்திரிகை அவர் தலையை மேலும் கனக்கச் செய்தது. பிஸ்கட் பிராந்தியின் நினைவு வந்து விட்டது. தீவிரமான வைராக்கியத்தைப் பாதையாக்கி மாடிக்கு விரைந்தார்.

குமாரி பரிமளம் முகத்தைத் துடைத்துக் கொண்டாள். நெஞ்சை மிதித்துக் கொண்டு மறைந்து விட்டான் பாண்டியன் என்ற ஏக்கம் அவள் இதயத்தில் கவிழ்ந்தது.

அதிவீரராம பாண்டியன் இருந்த இடத்தில் சிவப்பு டைரி ஒன்று இருந்தது!...

மாரகச் சேலை நழுவியதுகூட நினைவில்லாமல், பரிமளம் நடந்தாள். மோப்பக்குழையும் அனிச்சமாகக் காட்சியளித்த அதிவீரராம பாண்டியனின் அந்தச் சிவப்பு டைரியைச் செவ்விதழ்ப் புன்னகை மெட்டிசைக்கப் பற்றினுள் குமாரி பரிமளம்!...

# 15. காதலாகி, கசிந்து கண்ணீர் மல்கி...!

முத்தக் கதிர் பட்டுக் கண்மலர் விரிக்கும் அல்லவா சூரியகாந்தி அப்படித்தான் குமாரி பரிமளமும் விழிப்பூக்களை மூடி மூடித் திறந்தாள்; எழில் கொழித்த மார்பகத்திலே பொழில் மணமாகப் பதிந்து கிடந்த தங்கப் பதக்கம் அழகு காட்டித் திகழ்ந்தது. தன்னைத் தானே ஒரு முறை குனிந்து பார்த்துக் கொண்டாள். சதை திரட்சிகளின் கவர்ச்சி அவளை எங்கோ அழைத்துச் சென்றிருக்க வேண்டும். கண் வட்டத்தில் மோகம் கிறங்கியது. சிறுகதை மன்னன் அதிவீரராம பாண்டியன் தோன்றினான். உள்மனம் புன்னகை செய்தது. தலைநிமிர்ந்து நின்றாள் பரிமளம். வலது கையில் பற்றி நின்ற அந்தச் சிவப்பு டைரியை மீண்டும் பார்த்தாள் அவள். இப்போது வாய்விட்டுச் சிரிக்கத் தொடங்கினாள்.—'ஆஹா! என் கனவு பலித்து விட்டது!' ஆசை நினைவுகள் பூச்சரம் தொடுத்தன.

சிறுகதை மன்னன் என ஏற்றிப் போற்றப்பட்ட அதிவீரராமபாண்டியனின் புதுமை மிக்க எழுத்துக்களிலே மனம் மயங்கி அவள், அவனுடைய அறிமுகத்துக்காகத் தவம் கிடந்த அந்த நாட்களை எண்ணினாள். தெய்வ சங்கற்பம் போன்று நிகழ்ந்த அந்தச் சந்திப்பை—அதாவது, பாண்டியனைச் சந்திக்க வாய்த்த அந்த நிகழ்ச்சியை மீண்டும் ஒரு தடவை பெருமையோடும் பெருமிதத்தோடும் நினைவு கூர்ந்தாள். நெஞ்சின் அடிவாரத்தில் இன்பக் கிளுகிளுப்பு ஊர்ந்தது, மெய்ம்மறந்தாள். புகழ்பெற்ற எழுத்தாளனைச் சந்தித்துப் பழகிய காட்சிகள் அடுக்கடுக்காக நிழலாடத் தொடங்கின. சிந்தனையைத் தூண்டிவிட்ட அவனுடைய சிந்தனைப் பூக்கள் என்றென்றும் அவள் இதயத்தில் மணம் பரப்பிக் கொண்டே இருக்கும்!

தோளில் சாய்ந்தபடி தூங்கும் குழந்தையைத் தொட்டிலில் கிடத்தும் தாயைப் போன்று அவள் அந்தச் சிவப்பு நாட்குறிப்பை மெதுவாக மேஜைமீது வைத்தாள். "ஒரு சிறந்த சிந்தனையாளரின் ரசிகையாக நின்று மிஸ்டர் அதிவீரராமபாண்டியனின் அறிமுகத் துக்காக ஏங்கி நின்றேன். அவரைச் சந்திக்கும் பொன்னான வாய்ப்பை ஆண்டவன் கொடுத்தான். பிறகு, என்னுடைய ரசிகராக அவர் அமைந்து, என் னுடைய சந்திப்புக்களுக்காக அவர் தவம் இருந்தார். அவர் கனவை நான் வாழ்த்தினேன். என் இதயத்தை அவர் அறிந்திருப்பார். ஆனால், நான் அவரைச் சரி வரப் புரிந்து கொண்டிருப்பதாகக் கணித்த நேரத்தில், அவர் மனம் வக்கரித்துக் கொண்டதை—அவரது படைப்புக்களில் இடம் பெறும் கதை உறுப்பினர் களின் விகாரச் சலனங்கள் மாதிரி வக்கரித்துக் கொண்டதைக் கண்ட போது, நான் நிலை கலங்காமல் என்ன செய்வேன்? அவருடைய நெஞ்சத்தை—அவர் என்னைப் பற்றி வைத்திருந்த நினைப்புக்களை என்றேனும் ஒரு நாள் அப்பட்டமாகப் புரிந்து கொள்ளத் துடித்த அந்த ஆசைக் கனவை இன்று தெய்வம்தான் வெற்றி அடையச் செய்தது."

சிந்தனை வசப்பட்ட நிலையில் ஹாலில் நடை பயின்றாள் பரிமளம். ரேடியோக்ராமை இயக்க மனம் ஓடியது. அப்போது, அந்தச் சிவப்பு டைரி அவள் திட்டத்தை வெட்டியது. ஆடியில்—கண்ணாடியில் அவள் அழகு ஆடியது. ஆடவந்த பொற்பாவையை வருணிக்கிறாரே புரட்சிக் கவி, அந்தப் பாங்கில் அவ ளுடைய எழில் விளையாடத் தொடங்கியது.

அழகின் எல்லை இதுதான் என்று சொல்லாமல் சொல்லிக் கொண்டிருந்த அந்த அழகை—தெய்வாம்சம் பொருந்திய அந்த அழகை எப்படிச் சித்தரிக்க முடியும்? கனவு காணும் கண்கள் அவை பிறரைக் கனவு காணத் தூண்டும் நிர்மலமான அழகில் நிர்மலமான இதயம் பிரதிபலித்த அந்தத் தூய்மையே அவளுக்கு வாய்த்திட்ட நல்ல வரம் போன்று நிதானமான

நேர்மைப் பண்பு மிளிர ஒளிர்ந்து கொண்டே இருந்தது.

இடது கன்னத்தில் தெரிந்த திருஷ்டி மச்சத்தில் தெரிந்தது மூக்குத்திக் கற்களின் ஒளி.

எடுப்பான நாசியின் அமைப்பில் கவர்ச்சி கனிந்தது.

செங்கனிவாய்—செம்பவள உதடுகள்—சிந்தூரக் கன்னங்கள்.

பாரதிதாசன் பாடின மாதிரி நீ அழகின் உச்சி! ஆமாம்; பரிமளம் ஆமாம்!—மெரிஞக் கடற்கரையில் தன்னை மறந்து விமர்சனம் செய்ய வில்லையா அதிவீர ராம பாண்டியன்...?

எதையோ நினைத்துக் கொண்டாள் கன்னிப் பெண். காதலர்கள் திட்டமிட்டிருந்த பிரகாரம் சம்பவங்கள் நடத்தப்பட்டிருக்கும் பட்சத்தில் இந்நேரம் அவனும் அவளும்—பாண்டியனும் பரிமளமும் இரு மனம் ஒன்று சேர் தம்பதியாகி விட்டிருக்க வேண்டும்...!

இடை நடுவில் எப்படிப்பட்ட திருப்பு முனைகள் விளையாட்டுக் காட்டி விட்டன?

அழகைச் சிந்தும் குமரிப் பெண்களிடம் சிரிப்பைச் சிந்தி, அவர்களையும் அவர்களது நிழல்களையும் தொடர்ந்து திரியும் அதிவீரராம பாண்டியனை எப்படி விமர்சனம் செய்வது? தேவமனோஹரியின் காதலுக்கு எப்படி பாண்டியன் ஆளானுன்? அவளுக்கு அவன் ஏன் கடிதம் எழுதினுன்? 'காதல் ஒரு ஹம்பக்....வெளி வேஷம்!...வெற்று வேடம்!' என்று வருணித்தானே, அது அவனுடைய சொந்த அனுபவத்தின் விளைவில் உதிர்ந்ததுதானு? அவனுடைய கதைக் காதலர்கள், 'டயலாக்' பேசுவார்களே அதே பாவனையில்தான் அவனும் நடந்து கொள்ளத் துணிந்தானே?

அதிவீரராம பாண்டியனின் கார் வெளியிட்டுச் சென்ற சுழல் ஒலி அவள் நெஞ்சத்தில் இன்னமும் எதிரொலித்துக் கொண்டுதான் இருக்கிறது!

'மிஸ்டர் பாண்டியன்!...' தனக்குத்தானே பரிமளம் இவ்வாறு அழைத்துக் கொண்டாள். உதிர்ந்த சொற்களிலே ஆசை மணத்தது; அன்பு மணத்தது. உதிராத இதயத்திலே கனவு மணத்தது; பண்பு மணத்தது!

மீண்டும் நிலைக் கண்ணுடியில் அவள் பார்வை பதிந்தது. ஹகோபா சோளியின் சந்தன நிறம் துலாம் பரமாகப் பளிச்சிட்டது. காற்று நிறைந்த இரண்டு சிறிய பலூன்களின் காட்சியை அவள் அந்தரங்கம் நினைவூட்டியது. பதறிஞள். சரிந்து விழுந்து கிடந்த மாரகச் சேலையின் நிலையை இப்போதுதான் அவளால் உணர முடிந்தது எடுத்துப் போட்டுக் கொண்டாள். புதிய கவர்ச்சி ஊடாடியது. சந்தன கலர் கொண்ட 'டெரின் நைலக்ஸ்' சேலையும் அதே சந்தன நிறத்தில் அமைந்த ஹகோபா சோளியும் எத்துணை எடுப்பாகக் காட்சி தருகின்றன!—அடி வயிறு ரோஜாப்பூ மெத்தையாகத் தெரிந்தது. காதுகளில் சுழன்ருடிய வளையங்களை நெருடியபடி திரும்பிஞள். கூந்தலில் இழைந்திருந்த கதம்பப் பூச்சரம் நினைவில் மணம் பரப்பியது. அதிவீரராமபாண்டியனுக்குப் பிடித்தமான கதம்ப மணம்!...விபரீத நினைவொன்று சிலிர்த்தது. பலப்பல அழகுகளை ரசிப்பதால் தான் மிஸ்டர் பாண்டியனுக்கு கதம்ப மணத்திலும் ஒரு 'டேஸ்ட்'—ருசி ஏற்பட்டிருக்கிறதோ?'—விழிகள் பொடித்தன. மார்பகம் புயல் வயப்படத் தொடங்கியது. தடவி விட்டாள். தலையை உயர்த்தியபோது, செக்கச் சிவந்த நெற்றித் திட்டில் பொலிந்த திருநீறும் குங்குமமும் அவளுக்கு ஆறுதல் ஊட்டின போலும்!

°°° °°° °°°

குமாரி பரிமளம் சுயப் பிரக்ஞை பெற்ருள். அவள் தன்னுடைய கோல விழிகளை எதிரே செலுத்திஞள்.

வெளி உலகம் காட்சியளித்தது. அந்தி மாலைப் பொழுதிலே உலகம் எவ்வளவு ரம்யமாகத் தென்படு கிறது. முகப்பு மண்டபத்தில் அங்கும் இங்குமாக நடந்தாள்.

வீரபாகுவிற்குச் சொந்தமான 'இம்பாலா' கார் புது மணப் பெண்ணைப் போல நின்று கொண்டிருந்தது. தானும் தேவமனோஹரியும் பாண்டி பஜார்ச் சாலை நெடுக நடந்து வந்தபோது வீரபாகு காரை நிறுத்தி, தன்னை அழைத்து வந்த சம்பவத்தை அவள் மறந்து விடவில்லை. பங்களூர்ப் பங்கஜத்தின் முன்னே தன்னை மகளாக உரிமை பூண்ட நடப்பு இப்போதும்கூட அவளுக்குப் புல்லரிப்பையே உண்டாக்கி விடுகிறது!

எதையோ மறந்து போய் பிறகு மறந்ததை நினைவு படுத்திக் கொண்ட நிலையில், தன்னுடைய அச்சடிக்கப்பட்ட புகைப்படம் பற்றி நினைத்தாள். எங்கே போயிற்று அந்தப் படம்? அது எங்கே? எந்தப் பத்திரிகையில் வெளியானது அப் புகைப்படம்? ஏன் வெளியானது? 'சமுதாயம் என்கிற ஒரு சமுத் திரத்தில் நான் ஒரு சிறு துளி. ஊர் பேர் தெரியாத ஓர் அனாதைக் கன்னி! என் நிழற்படத்தை வெளி யிடும் அளவுக்கு நான் சமூகத்தின் பார்வையில் திடுதிப்பென்று உயர்ந்து விட்டேனா, என்ன?'

தன்னுடைய புகைப்படம் ஏதோ ஒரு பத்திரிகை யில் வெளியாகியிருக்கிறது என்ற உண்மையை மட்டும் அவளால் அப்போது தீர்க்கமாக உணர முடிந்தது. அந்த அளவில் அவள் மகிழ்வு எய்தினாள்.

அதே சமயத்தில் தொழிலதிபர் வீரபாகுவின் படமும் வெளியாகியிருந்த கிழிசல் ஒன்றும் தரையில் கிடந்த நிகழ்ச்சியும் அவள் ஞாபகத்துக்கு வந்தது.

ஐயா பெரிய தொழிலதிபர். அவங்களோட படம் பேப்பரிலே பப்ளிஷ் ஆகிறது நியாயம். இதிலே ஆச்சரியப்பட ஒன்றுமே கிடையாதுதான். ஒருவேளை எங்க இரண்டு பேர் படங்களும் குறிப்பிட்ட ஒரே

பத்திரிகையிலே வெளியாகியிருக்கலாமோ? எங்க இரண்டு பேர் படங்களும் இடம் பெற்றிருக்கக் கூடிய அந்தப் பத்திரிகையைப் பார்த்தா, மனசுக்கு ரொம்ப ஆறுதலாகயிருக்கும்! எங்கே கிடைக்கப் போகுது? சிறுகதை சிற்பி பாண்டியன் முன்னே மாதிரி என்னோடே சோஷலாகப் பழகினால், அவர் கையிலே என் ஆசையைச் சொன்னால், அந்தப் பத்திரிகையை— என்னோடை போட்டோவும் ஐயாவோட போட்டோவும் வெளியான அந்தப் பத்திரிகையை கட்டாயம் டில்லி யிலே இருந்தால்கூட தேடிக் கண்டு பிடிச்சுக் கொண் டாந்து தந்திடுவாரே!...

நினைவுகள் கலைத்துப் போடப்பட்ட சீட்டுகளாக உருக்குலைந்த இரவில் அவளுக்கும் சிறுகதை மன்னன் அதிவீரராம பாண்டியனுக்கும் மத்தியில் நடந்த காதல் போராட்டத்தை அவள் எங்ஙனம் மறப்பாள்?

அதிவீரராம பாண்டியனை ஈடு எடுப்பற்ற சிந்தனை யாளராக—சிறு கதை மன்னராக—புரட்சி எழுத்தாள ராக எண்ணி முடிவிட்டு, நம்பி அவரைக் காதலித் தேன். காதல் திருமணம் செய்து கொள்ளவும் முடிவு செய்தேன். என்னுடன் பண்புடன் பழகத் தொடங்கிய அவர் பதினேழு மாதங்கள் கழித்து, அந்த ஓர் இரவில் என்னிடம் ஏன் அப்படித் தகாத நெறியில் நடந்து கொண்டார்? ஐயோ! என் கறையையே சூறையாடத் துணிந்தாரே?... அப்படியென்றால் அவர் எழுதும் எழுத் துக்களைப் போலத்தானா அவரது உள்ளமும் வக்கரித்துச் செயல்பட்டு வருகிறது? பெண் என்றால் பூதானா! பூவில் மணம் இருக்கும்; தேனும் இருக்கும்! ஆனால், அதனுள்ளே ஒளிந்திருக்குமே பூநாகம்— நிறை காக்கும் கற்பைக் காத்து நிற்கும் பூநாகம்— அதைப் பற்றி ஏன் பாண்டியன் சிந்தித்துப் பார்க்க மறந்து போனார்? என்னைக் கசக்கி எறிந்து விட்டு, என்னில் சுவைக்கும் மணத்தை மறந்து வீசி விட்டு, இன்னொருத்தியை அவர் வலை வீசத் திட்டமிட்டிருக்க வேண்டும். இல்லையென்றால் தேவமனோஹரிக்குக்

கடிதம் எழுதியிருப்பாரா? அந்த மண்ணடி மலையாளக் குட்டியைத் தேட்டம் போட தனக்கு வந்த புதிய காரில் அப்படிப் பேயாக அலைந்திருப்பாரா?

அவரைப் புது வாழ்வு தேடி வந்தது. இவரோ வேறொரு புது வாழ்வைத் தேடி அலைகிறார். ருசி பேதங்கள் தாம் மனிதனுக்கு விதிக்கப்பட்டுள்ள இயல்பான விதியாம்! எவ்வளவு பயங்கரவாதியாக இருந்திருக்கின்றார்! என் முன்னே அவர் தம் சுய ரூபத்தை இதுவரை மறைத்துக் கொண்டு, ஒரு பொய் நாடகமல்லவா ஆடி விட்டார்!...சே!

தன் நாட்குறிப்பில் எழுதி வைத்த கருத்துக்கள் மீண்டும் குமாரி பரிமளத்தின் நெஞ்சமென்னும் டைரியில் ஓடிக் காட்டின.

காதலாகி, கசிந்துருகி, கண்ணீர் மல்கினாள் குமாரி பரிமளம்!

"என்னைத் தெய்வம் என்றார். தேவதை என்றார். படைப்புக் கடவுளின் ரசனைக்கு நான் ஓர் உன்னத எடுத்துக் காட்டு என்றார். அழகுக்கு நான் தான் 'மாடல்' என்றார். எல்லாம் ஹம்பக்!—பொய்!..."

உள்ளத்துள் கனன்ற எரிமலை அவளது அழகு கொழித்த மாம்பழக் கன்னங்களைக் கன்றிச் சிவக்கச் செய்தது. ஆத்திர வெறி மூள கைகளைப் பிசையலானாள். பாவம், கையிலிருந்த அந்தச் சிவப்பு டைரி—சிறுகதை மன்னன் அதிவீரராமபாண்டியனுக்குச் சொந்தம் பூண்ட அந்த நாட்குறிப்பு நிலை குப்புற அந்த 'மொஸைக்' தரையில் வீழ்ந்தது!

"அதிவீரராமபாண்டியனை விட்டுத் தப்பி வந்து, முருகன் சந்நிதியில் நான் முடிவு கொண்டபடி, எப்படியும் என் காதலுக்குப் பாத்திரமான அதே அதிவீரராமபாண்டியனைப் புதிய மனிதராக ஆக்கி, அவரிடம் என்னைக் காணிக்கை ஆக்கியே தீருவேன்!..."

வைராக்கியம் புத்தொளி காட்டியது!

⁂ ⁂ ⁂

தொலைபேசிக்கும் பேசத் தெரியும். மனிதர்களுக்கே பேசத் தெரிந்திருக்கையில், தொலைபேசிகளுக்கும் பேசத் தெரிந்திருப்பது நியாயம்தான்! ஆனால், ஒன்றி லிருந்து திருந்தி—அல்லது, திருத்திப் பேச மனிதர்கள் மாதிரி இந்தத் தொலைபேசிகளுக்குத் தெரிய வாய்ப்பு இல்லை! மனிதர்கள். இயந்திரங்களாக உருமாறும் போது, இயந்திரங்களும் மனிதர்களாக மாறினால் என்னவாம்?

ஐயோ, கடவுளே!—வேண்டாம், வேண்டாம்!

"காதலைக் கட்டிக் கொண்டு இளைஞர் சமுதாயம், அலையட்டும்!... இந்தப் பாழாய்ப் போன சமுதாயத்தைக் கட்டிக் கொண்டு இந்த இளைய பரம்பரையும் ஆடட்டும், பாடட்டும், குடிக்கட்டும், கூத்தாடட்டும்! எக்கேடோ கெட்டுப் போகட்டும்!"

சுரீரென்று அவளது மனச்சாட்சி தூண்டில் முள்ளாக அவளது உந்திக் கமலத்தைத் துளை போட்டது. 'சமுதாயத்தை ஏசிப் பேச நீ யார்?' என்ற ஓர் உள்ளுணர்வு அவளுள் பீறிட்டது. நான் ஒருமுறை இதே கேள்வியை மிஸ்டர் அதிவீரராம பாண்டியனிடம் கேட்டதில்லையா?'—நாணித் தலை தாழ்ந்தாள் பரிமளம்.

தொலைபேசி அலறிக் கொண்டேயிருந்தது.

சுயநினைவை மீட்டுக் கொண்டு உள்ளே விரைந் தாள் அவள்.

மங்களம் அம்மாவையும் காணவில்லை!

பெங்களூர் விருந்தாளியையும் காணவில்லை!

தொலைபேசியில் பேசினான் அதிவீரராமபாண்டியன், "என்னோட டைரியை அங்கே வைத்து விட்டு மறந் திட்டு வந்திட்டேன்?" என்று பதறினான்.

"இங்கே உங்க டைரியைக் காணோமே!..." என்று விடை மொழிந்துவிட்டுத் திரும்பினாள் குமாரி பரிமளம். பிறகு, வாய் திறந்து சிரித்தாள்!

**சிறுகதை மன்னனின் அந்தச் சிவப்பு நாட் குறிப்பு தன் இதயத்தைத் திறந்து காட்டத் தொடங்கியது!...**

# 16. மோகினியா? தெய்வமா?

இளநீலப் பாதரசக் குழல் ஒளி கவர்ச்சியுடன் சிந்திச் சிதறிப் பரவிக் கொண்டிருந்தது.

நான்கு சுவர்களுக்கு மத்தியில் பரிமளத்தின் உலகம் சுழலத் தொடங்கியது.

அடைபட்ட கதவுகள்.

அடைபடாத நெஞ்சம்.

தடைபட்ட சிந்தனைகள்.

தடைபடாத கனவுகள்.

காதலின் தவிப்பு, அன்பின் துடிப்பு, பாசத்தின் பற்று, ஏக்கத்தின் ஆற்றாமை, ஆசையின் கனவு, கனவின் உருக்கம்—இப்படிப் பல திறப்பட்ட மன உணர்வுகளை அணைத்தும்—அணைந்தும் உணர்ச்சிப் பெருக்குடன் காணப்பட்ட குமாரி பரிமளத்தின் முன்னே அந்த டைரி தன்னுடைய இதயத்தை திறந்து காட்டிக் கொண்டிருந்தது.

ஓடிய ஏடுகளை ஓட்டினாள்.

ஓடிய காலம் ஓடியது.

சிறுகதை மன்னன் அதிவீரராம பாண்டியன் பேசத் தொடங்குகின்றான்.

இளங்காலைப் பொழுது தியாகராய நகரில் பாண்டி பஜார் பதிப்பகத்தில் தங்கியிருந்த கும்பகோணத்துக் கதாசிரியர் வி. ராமனோடு இலக்கிய சர்ச்சையில் இரவுப் பொழுதைக் கழித்து விட்டு, புரசைவாக்கத்தில் இறங்கி நடந்து கொண்டிருக்கிறேன்.

அது அம்பாள் ஆலயம்.

அம்மனைத் தரிசிக்கச் செல்கிறேன்.

மோனத்தவம் இயற்றுகிற நிலையில் கணநேரம் கண்களை மூடிக்கொண்டு பிரார்த்தனை செய்கிறேன். கண்களைப் பிறகு திறக்கிறேன். என் பார்வையில் தென் பட்ட அந்தப் பெண்ணின் உருவம் என் நெஞ்சில் சிலையாகக் கொலு அமைத்துக் கொண்ட விசித்தி ரத்தை உணர்கின்றேன். மீண்டும் என் விழிகள் அவளைத் தேடி ஓடுகின்றன.

இப்போது அம்மனையும் அவளையும் மாறி மாறி— மாற்றி மாற்றிப் பார்க்கிறேன். என்னுடைய இலக்கிய மனத்தில் நிழலாடிய அவ்விரு உருவங்களிலே 'யார் பெண்' எது தெய்வம் என்று கணிக்க முடியாத— பிரித்துப் பகுத்துணர இயலாத ஓர் ஆற்றுமை என்னுள் பீரிடுகிறது திரும்பவும் என் விழிகளைத் திருப்புகிறேன். அதே தருணத்தில் அவளுடைய கோல விழிகளும் என்னை நோக்கித் திரும்புகின்றன.

இடது கன்னத்தில் இருந்த அந்த மச்சம்—கவர்ச்சி கனிந்த அந்தத் திருஷ்டி மச்சம் என்னுள் நினைவுச் சின்னமாக நிலைக்கிறது.

அவளைக் காணவில்லை.

ஆனால் என் நெஞ்சில்,—என்னுடைய இலக்கிய நெஞ்சில் அவள் பத்திரமாக இருந்தாள்!

'எல்லையற்ற பேரெழிலே என்று பாரதி பாடு வான்!' அந்த ரசனையில் மனம் ஒன்றித் திரும்புகிறேன். இனம் புரியாத ஒரு பக்தி உணர்வு என்னையும் அறியா மல் விளைகிறது. முகம் அறியாத அந்தப் பெண்ணைச் சந்தித்ததன் விளைவாக ஏற்பட்ட மனநிலையாகத்தான் என்னுடைய இந்தப் பக்தியைப் பாவிக்க வேண்டும்.

அந்த நினைவு முகத்தை மீண்டும் காணப் பாக்கியம் கிட்டுமா?

அவள் யார்?

தெய்வமா?

மோகினியா?

இல்லை, பெண்ணேதானே?...

அடையாளக் குறிப்பிற்காக இணைக்கப்பட்டிருந்த தாரிப்பனை டைரியின் அந்தப் பக்கத்தில் வைத்து விட்டு, குமாரி பரிமளம் சிந்தனை வசப்பட்டாள். மிஸ்டர் பாண்டியனின் ரசிப்புக்கு—ஊஹூம் 'பக்திக்கு பாத்திரமான அந்தப் பாக்கியவதி யாராக இருப்பாள்?'

நினைவுகளின் சங்கமத்தில் நெடுமூச்சு நீண்டது. நெற்றியிலும், கன்னங்களிலும் புறக்கழுத்துப் பகுதியிலும் முத்தார்த்திருந்த வேர்வையைப் புடவைத் தலைப்பை கொய்து துடைத்து விட்டு, தலையை நிமிர்த்தினாள். எதிர் வசத்தில் இருந்த நிலைக் கண்ணாடியில் அவளது இடது கன்னத்தின் திருஷ்டி மச்சம் பளிச்சென்று தெரிந்தது.

நான்தான் அன்று பாண்டியனின் இலக்கியக் கண்களுக்கு விருந்தளித்திருப்பேனா? நான் ஒரு பெண்; அபலைப் பெண்; அனாதைக் கன்னி நான். நானா தெய்வமாக மாறினேன்? நானாவது தெய்வமாக மாறவாவது?" அப்படியென்றால் எனக்கு வாய்த்திட்ட மச்சம் போலவே இன்னொருத்திக்கும் இந்த மாதிரியான மச்சம் இருந்திருக்கத்தான் வேண்டும்! அவள் கொடுத்து வைத்தவள்!... ஆமாம்!...

தமிழ்த் திரைப்படங்களிலே இம்மாதிரி மச்சங்களை அடையாளம் காட்டி, காணாமற் போனவர்களைக் கண்டு பிடிப்பார்கள். அதுபோல என் மச்சமும் கைகொடுக்குமா? காலையில் முருகன் சந்நிதியில் புண்ணியகோடிக் குருக்கள் தன்னை இமைக்காமல் பார்த்ததும் சிந்தையில் உதித்தது. என்னுடைய கன்னத்தின் மச்சத்தைத் தான் அதிசயத்துடன் குருக்கள் பார்த்திருப்பாரோ?

பரிமளத்துக்குத் திடீரென்று தன்னுடைய பிறந்த இடத்தின் ஞாபகம் வந்தது. மனக் கண்ணில் மேற்கு மாம்பலத்தின் குப்பம் வந்து நின்றது. மரணப்

படுக்கையில் போராடிய அன்னையின் அன்பு முகம் நிழலாடியது. கண்கள் பனித்தது. 'அம்மா!' என்று விம்மினாள். ஜீவமரணப் போராட்டம் நடத்திய அந்தத் தெய்வம் தன்னிடம் பொறுப்பு ஒன்றை ஒப்படைத்து விட்டு கண்களை மூடிய நிகழ்ச்சி அவளது கண்களை மூடவிடாமல் நச்சரித்துக் கொண்டிருக்கும் விந்தையையும் அவளால் மறக்க முடியாது. தாயை அறிந்தாள். தாய் முலைப்பாலின் சுவையை அறிந்தாள். ஆனால் தந்தையை அவள் அறிய மாட்டாள். தந்தைப் பாசம் அவளுக்குத் தெரியாது!

என்னுடைய ரத்தத்துக்கு ரத்தம் ஈந்த அந்தப் புண்ணியவான் என் தாயை வஞ்சித்து, அவள் கற்பைச் சூறையாடி, அவளுள் என் ஜனனத்தை அம்பலப்படுத்திவிட்டு நான் இந்தப் பயங்கர உலகத்திலே அவதரித்த அன்றைக்கே—என்னைப் பச்சை மண்ணாகப் பார்த்த கையோடு, என் தெய்வத்தை கை விட்டு ஓடி, பாவியாகி விட்டார்! அவரைப் பழி வாங்க வேண்டும். அம்மாவிடம் சூள் உரைத்திருக்கிறேன்!... தெய்வமே! அம்மா!...கண்களைத் துடைத்துக் கொண்டாள் பரிமளம்.

'அப்பா—ஆமாம்' என் தந்தை—அந்தப் பாவி என்னுடைய திருஷ்டி மச்சத்தைப் பார்த்துப் பூரித்துப் போய் விட்டாராம். 'கமலம்! நம்ப பாப்பா தெய்வ அம்சம் கொண்டு பிறந்திருக்காக்கும்! இந்தத் திருஷ்டி மச்சம் பாப்பாவுக்கு பிரமாதமான எதிர்காலத்தைக் கட்டாயம் கொடுக்கும், என் பேச்சை நம்பு!' என்றாராம். பின் ஏன் அந்தப் பாவி மனம் மாறினர்? அப்பாவின் படத்தைத் தருவதற்கும் அவர் பெயரைத் தெரிவிப்பதற்கும் சந்தர்ப்பம் வரும் வரும் என்று சொல்லி, அந்தச் சந்தர்ப்பம் வருவதற்கு வாய்ப்புக் கொடுக்காமலே அம்மாவின் ஜீவன் பிரிந்து விட்டதே...?'

இமைப் பொழுது வரை, 'பரிமளம் இமைக்க மறந்தாள். உயிர் இயங்க மறந்தது. உணர்வு கடமையாற்ற மறந்தது. ஆனால் அவள் மட்டும் தன் கதையை மறக்கவே இல்லை; மறக்கவும் மாட்டாள்; மறக்கவும்

முடியாது. அவள் வாழ்க்கையில் நடந்து விட்ட மறக்க வொண்ணு சோகங்கள் ஒன்று இரண்டா?

இன்று இரவுக்குள் அவள் குப்பத்துக் குடிலுக்குப் போயாக வேண்டும்!—இல்லாவிட்டால், கிழவி வம்புக்கு வந்து விடுவாள். தொழிலதிபர் வீரபாகு தன்னை இம்பாலாவில் சாயந்திரம் அழைத்து வருவதற்குச் சில நிமிஷங்களுக்கு முன்னர் சிறுவன் ராமையா வந்து செய்தி கொடுத்துச் சென்றதை நினைத்துக் கொண்டாள் சொந்தம் சொல்லி சோறு போட்டாள் கிழவி. படித்தாள். இப்போது சோறு போடுகிறுள். கிழவி பொன்னம்மா படு கோபக்காரி!

அவள்—பரிமளம் சுயப் பிரக்ஞையை மீட்டுக் கொண்டாள். மனமும் மழையும ஒரே ரகம். எடுப்பவர் கைக்கெல்லாம் தாவி ஓடும் குழந்தை. மனமும் அப்படித்தான் தொடுக்கும் நிகழ்ச்சியைத் தொற்றிக் கொள்ளும்; பற்றியும் செல்லும்.

வெளி உலகில் முன் நிலா அழகு காட்டத் தொடங்கிவிடும், இனி!

நீல நிலாவை—நித்திலப்பூ எழிலை ரசிக்கக்கூட இந்தப் பட்டணத்து நாகரிகம் அதிகம் வாய்ப்பு கொடுப்பது கிடையாதுதான்!—மெரினு கடற்கரையில்—கடல் மல்லையாம் மாமல்ல புரத்தில்—சைஞ பஜாரின் பரபரப்புச் சூழலில் பரிமளமும், பாண்டியனும் காதலர்களாகவும் — ரசிகர்களாகவும — மனிதாபிமானிகளாகவும் சந்தித்த அந்த நாட்களை—அந்த கனவுலக நிகழ்ச்சிகளை—பூலோகத்தில் சொர்க்கம் காணத் துடித்து—கண்டு மகிழ்ந்த அந்த இனிய நாட்களை, அவளும் மறக்க மாட்டாள்; அவனும் மறக்க மாட்டான்! நேற்றிரவு பாண்டியன் முன் பரிமளம் உரிமைப் போராட்டத்தைத் தொடங்குவதற்குச் சில விஞடிகளுக்கு முன்புகூட இந்தப் பழைய ஞாபகங்களைப் பற்றி அதிவீரராம பாண்டியன் நினைவூட்டவில்லையா?

பாதங்கள் மரத்துப் போயின. சோபாவில் இருந்தவள் மெதுவாக எழுந்தாள். நிற்க முடியவில்லை. தம்ளரில் எஞ்சியிருந்த தண்ணீரைப் பாதங்களில் தெளித்தாள். இப்போது தேவலாம். உணர்வுகள் இருக்கின்றன. புடவைத் தலைப்பை எடுத்துக் கொய்து போட்டுக் கொண்டாள். சுருட்டைத் தலை முடியின் கொண்டைக்கு எழில் பூட்டிய—மங்கள சௌபாக்கியம் ஊட்டிய பூச்சரமும், பின்னழகுக்கு எடுப்புத் தந்த பிரேஸியரின் கவர்ச்சியும் முதுகுப்புறக் கண்ணாடியில் தெரிந்தன. பாதங்களைத் தொட்டு நின்ற உள்பாவாடை இப்போது சீரடைந்தது. பொட்டுப் பொழுதுக்குள் அவள் தவித்துப் போனாள்.

அந்தச் சம்பவம்...?

தொழிலதிபர் வீரபாகுவின் அன்பையும், பாசத்தையும் அனாதைக் கன்னியான தனக்கு அறிமுகம் செய்வித்த அந்தச் சந்தர்ப்பத்தை அவள் உயிருள்ள மட்டும் நன்றியறிவுடன் வணங்கக் கடமைப்பட்டிருக்கிறாள். மறக்க மாட்டாள்!—மறுக்கவும் மாட்டாள்! உயிர்ப் பிரச்னை அது. ஊஹூம்; மானப் பிரச்னை ஒன்றின் மூலம், ஓர் உன்னத அன்பைப் பழக்கப்படுத்திக் கொண்ட அதிர்ஷ்டம் அவளுக்கு கை கூடி வந்தது. அப்படித்தான் செல்வக் குமாரி சீதா சொல்வாள். மெத்தச் சரி!

தாய்ப்பால் கேட்டுச் சிணுங்கும் பாப்பா மாதிரி அவள் உள்மனம் சிணுங்கியது. ஆசாபாசங்களுக்கு ஈடு கொடுக்க முடியாத ஒரு தவிப்புடன் உழன்ற பரிமளத்தின் கபாலம் கொதித்தது. தன் நிலையின் உணர்வு மீண்டது. வீரபாகு தனக்கென்று அமைத்துக் கொடுத்திருந்த இந்த அறையின் சூழலே தன்னுடைய எதிர்காலத்துக்கு வாய்த்திட்ட வளப்பமான அடையாளமாகவும் அழகு காட்டியது.

தொழிலதிபர் வீரபாகுவைப் பற்றிய சிந்தனைகளில் பரிமளம் ஊர்ந்தாள். நல்லதும் கெட்டதுமான குணக் கணிப்புக்கள் வந்து போயின. தன்னை பெங்களூர்

பங்கஜத்திடம் அறிமுகப்படுத்தும் போது தம் மகளாக்கிச் சொந்தம் பாராட்டிய அந்த உன்னதப் பாசம் அவளைப் புல்லரிக்கச் செய்தன. "அம்மா பரிமளா!" என்று தன் அன்பு முழுவதையும் கொட்டி செல்லமாக அழைக்கும் பான்மை—பாசம் மங்களம் ஒருத்திக்குத்தான் அத்துப்படி! "அம்மா! நாளைகருத் திங்கட்கிழமை வேலைக்குப் போக வேண்டும்!"

டைரக்டர் கோதண்டராமன் கண்டிப்புப் பேர்வழி.

எண்ணிச் சில தினங்களுக்குத்தான் இனி வேலை பார்க்க நே ிடும்!

"கனவுகள் இல்லையென்றால் வாழ்க்கை இல்லை" "ஜாதி ரோஜா"வில் "பூவை" அழகாகச் சொல்லி விட்டார்!' என்று தனக்குள் எண்ணமிட்டாள் பரிமளம்.

ஃ ஃ ஃ

அதிவீரராம பாண்டியனின் சிவப்பு நாட்குறிப்புக்கும் காந்த சக்தி உண்டு போலும்!

சாக்லெட் ஒன்றை எடுத்து வாயில் போட்டுச் சுவைத்துக் கொண்டே டைரியோடு அமரலானாள், குமாரி பரிமளம்.

ஏடுகள் புரண்டன.

கன்னி மனம் புரளவில்லை!

எழுத்தாளர் அதிவீரராம பாண்டியனுக்குப் புகழ் தேடித் தந்த 'ஊர்வசி' என்ற சமுதாயக் கதைக்குக் கிடைத்த விமரிசனங்கள் பற்றிய விவரங்கள் பக்கங்களைத் திருடிக் கொண்டிருந்தன.

ஓரிடத்தில் அவள் பார்வை நிலைத்தது. தலைப்பிலிருந்த அந்தத் தேதியை பரிமளம் நினைவு படுத்திப் பெருமை கொள்வது வழக்கம். அதிவீரராம பாண்டியனை முதன் முதலாகச் சந்திக்க நேர்ந்த நாள் அல்லவா அது!

முதற் சந்திப்பு!

முதற் காதல்!

அப்புறம்...?...

முதல் இரவு!

நாணித் தலை குனிந்தாள்.

கவர்ச்சிக் கன்னி இதழ்களில் கள்ளம் நிறைந்த புன்னகை விளையாடியது.

மோகினிச் சிலைதான் பரிமளமாக உரு மாறி விட்டதோ?

இல்லை புராண கால மோகினியேதான் இப்படி பரிமளமாக நாகரீக அவதாரம் எடுத்து, 'கடாவ் . புல்' வாயல் புடவையும், 'ஹகோபா' சோளியும், 'நாயுடு ஹால்' பிரேஸியரும் திகழ இந்தத் தமிழ் மண்ணுக்கு வந்திருப்பாளோ?'

இன்பத் தவிப்புடன் நாட் குறிப்பில் ஒன்றினாள், அவள்!

"மண்ணாசை, பெண்ணாசை பொன்னாசை ஆகிய மூன்று ஆசைகளைத் துறக்க வேண்டுமென்று யாரோ சொல்லி விட்டுச் சென்றதாக நமது அருமைத் திருநாட்டில் சொல்லிக் கொண்டு வருகிறார்கள். ஆனால் இந்த ஆசைகளில் ஒன்றையாவது இன்றுவரை உலக ரீதியில் யாராவது துறந்தார்கள் என்றால் இல்லை என்று தான் சொல்ல வேண்டும். நல்ல வேளை இந்த ஆசைப் பட்டியலில் புகழாசையை யாருமே சேர்த்துக் கொள்ளக் காணோம்!"

விடிய விடிய விழித்திருந்து சிங்கிள் சாயாவையும் நாலு பாஸிங் ஷோ சிகரட்டையும் துணைக்கு வைத்துக் கொண்டு, கதைகள் எழுதிவிட்டு, அவைகளின் ஐந்து ரூபாய் அன்பளிப்புக்காக சென்னை ரோடுகளில் ஆயிரம் தரம் அலைந்த தொல்லைகள் இனி ஒழிந்து விட்ட மாதிரி தான்!

ஆனால், ஒரு பெண் மட்டும் அந்தக் கதையை கன்னாபின்னாவென்று தாக்கிக் கடிதம் எழுதி விட்டாள். வேடிக்கையான சந்திப்பு, வேடிக்கையான சம்பவம்.

மண்ணடியிலிருந்த என் அறையிலிருந்து கீழ்ப் பாக்கத்துக்கு பஸ் ஏறினேன். புரசைவாக்கம் குளத்தில் ஒரே கூட்டம். ஆபீஸ் முடிந்த நேரம். கண்டக்டர் டிக்கட் கேட்டான். கைப்பிடி வரை பற்றியிருந்த நான் மூர்மார்க்கெட் புத்தகச் சுமையோடு மல்லாடி, சட்டைப் பையில் ஒளிந்து கொண்டிருந்த சில்லறைகளைத் தேடினேன். தோல் பையைத் திறக்க முடியவில்லை. அதன் மேற் பகுதியிலிருந்த என்னுடைய பெயர்ச் சீட்டு சிரித்தது. என்னால் சிரிக்க முடியவில்லை. சில்லறைகளை ஒருவழியாகப் பொறுக்கிவிட்டேன். அதற்குள், "சார், உங்களுக்கும் சேர்த்து அந்தப் பெண் டிக்கட் வாங்கிவிட்டது" என்றான் கண்டக்டர்.

திரும்பினேன்

ஆஹா!

அந்தத் தெய்வப் பெண்!

ஒரு நாள் இளங்காலைப் பொழுதிலே அம்மன் சந்நிதியிலே தன்னையும் தெய்வத்தையும் பிரித்து உணர்த்த முடியாதபடி என்னைத் தவிக்கச் செய்து விட்டு மறைந்தாளே அதே பெண் எனக்கும் சேர்த்து டிக்கெட்டுக்கு துட்டு கொடுத்திருந்தாள்.

அழகை ரசிப்பதில்தான் எழுத்தாளன் எவ்வளவு பரபரப்புக் கொள்கிறான்!...

அந்தப் பெண்ணின் இடது புறத்து ரோஜாக் கன்னத்தில் காணப்பட்ட அந்த மச்சம் அவளை எனக்குக் காட்டிக் கொடுத்து விட்டது.

"எழுத்தாளர் ஸார், உங்களைச் சந்திக்க ஒரு வாய்ப்புக் கைகூடும்னு நான் கனவிலே கூட நினைக்கலே! உங்களோட எழுத்துக்களிலே நீங்க

கையாண்டு வருகிற புதுப்புது உத்திகளும், பாணிகளும் என்னை ரொம்ப ரொம்பக் கவர்ந்து விட்டன!" என்றாள் அவள்.

நான் இருபது காசை எடுத்து அவளிடம் நீட்டினேன்.

அவள் என் செய்கைக்காக வருந்துபவளாக தவித்தாள். உதடுகள் துடித்தன. விழி மணிகள் மருண்டன. 'வேண்டாம் என்கிற பாவனையில் கை வளையல்களும், காது வளையங்களும் குலுங்க சமிக்ஞை காட்டினாள். அவள் தவிப்பை நான் ரொம்பவும் ரசித்தேன். என்றால் கூட எழுத்துக்களில் வடிக்க முடியாத அளவுக்கு அவளை ரசித்தேன்.

அவள் மூச்சு என் மேல் படும்படி நான் நின்றேன்.

பஸ் மடங்கியது.

அவள் என்மீது சாயவில்லை!

வேடிக்கை பார்த்தார்கள் பிரயாணிகள்.

பிரபல எழுத்தாளரும் அதீதமான எழிலரசியும் சந்திப்பதென்றால் வேடிக்கை மட்டுமல்ல விநயமான நிகழ்ச்சியும் கூடத்தானே?

என்னை அவள் எப்படிக் கண்டு கொண்டாள்?

அது சரி.

அவள் பெயர் என்ன?

கேட்டேன்!

"பரிமளம்!" என்றாள்

ஆ ஹா ா! அழகான—பொருத்தமான—பரிமளம் மிகுந்த பெயர்!...

மாடியில் தடதடவென்று சத்தம் கேட்டது.

டைரியை அப்படியே போட்டு விட்டு மாடிப் படிக்கட்டை அடைந்தாள் பரிமளம்.

தொழிலதிபர் வீரபாகு படிக்கட்டுகளின் வழியே தரையில் உருண்டு விழுந்தார்.

"அப்பா" என்று அலறினுள் பரிமளம்.

அவள் பார்வையில் அந்த மஞ்சள் பத்திரிகை தென்பட்டது. 'ஐயோ, தெய்வமே!' என்று அலறிய குமாரி பரிமளம் மயங்கிச் சாய்ந்து விட்டாள்!

# 17. ஜீவந்

ரோஜா நிறப் பூந்திரை தென்றலில் அசைந்து ஆடியது.

பூந்திரைக்குக் கீழ்பக்கத்தில் மாடிப் படிக்கட்டு இருந்தது; மேல் புறத்தில் இரண்டாம் கட்டு அமைக்கப்பட்டிருந்தது.

இரண்டாம் கட்டு நயம் மிகுந்த கலை நுட்பத்துடன் விளங்கியது. எம்பிக் குதித்தால், அதன மேல் தளத்தைத் தொட்டுவிடலாம் போலத் தோன்றும்; ஆனல், முடியாது அந்த ஏமாற்றத்தை ஈடு கட்டும் வண்ணம், அங்கே அழகு படுத்தப்பட்டிருக்கும் கலை எழிலை—'ப்ளாஸ்டர் ஆஃப் பாரிஸ்' நுட்பத் திறனை மெச்சாதவர்கள் பாவம் செய்தவர்கள் ஆவார்கள்.

தொழிலதிபர் வீரபாகு இருக்கிறுர் பாருங்கள். அவர் ஒரு பெரிய ரசிகர். எதையும் ரசிக்கத் தெரிந்தவர். எதிலும் ரசனையை ஈடுபடுத்தி அனுபவிப்பதில் சளைக்காதவர். கண்ணுடித் தொழிற்சாலையில் மட்டும் அல்லாமல், அவருடைய 'தமிழ் வாழ்க' என்னும் பங்களாவிலுமகூட அவரது ரசிப்புத் திறனை அங்கங்கே பரிமளிக்கச் செய்திருந்தார்.

வீரபாகுவின் மாடியறை அவருடைய 'பிரைவேட் ரூம்' மேலை நாட்டுப் பாணியில் அமைக்கப்பட்டது

ஆகும். ஜப்பான் நாட்டு 'ஒமேகா' சுவர்க்கடிகாரத்தின் உச்சியிலிருக்கும் பூஞ்சிட்டு 'கூ, கூ' என்று குயிலாகக் குரல் கொடுக்கும். பிரிட்டிஷ் ரேடியோ கிராம் 'ஜாஸ்' சங்கீதம் முழக்கம் செய்யும். தனி அறைக்குள் ஒரு தனி அறையாக விளங்கும சின்னஞ் சிறு இடத் திலேயே நவநவமான உலகங்கள் நவநவமான மோஸ் தரில்—பான்மையில்—பாவனையில் பொலியும். அங்கு தரிசனம் தரும் விதவிதமான கோப்பைகள்—பாட்டில் கள்!...ஆஹா!...ஊம்! பெரிய இடத்துக் கதைகளைப் பற்றியெல்லாம்...மூச்!

இரண்டாம் கட்டு ஆளோடியில் 'மொஸைக்' வேலைப்பாடு செய்யப்பட்டிருந்த லினோலியம் விரிப்பின் மீது ஒரு ரத்தினக் கம்பளத்தை விரித்து உட்கார்ந்து, மங்களமும் பங்களூர்ப் பங்கஜமும் 'கதை' பேசிக் கொண்டிருந்தார்கள். குழந்தை குட்டிகள் இல்லாத அத்தனை பெரிய பங்களாவில் அப்போதைக்கு அவர்கள் தாம் குழந்தைகளாக மாறிவிட்டிருந்தார்கள்.

பங்களூர் வாழ்க்கையைப் பற்றி பங்கஜத்திட மிருந்து கேட்டுத் தெரிந்து கொண்டாள் திருமதி வீரபாகு.

பங்கஜத்தின் ஆசைப்பிரகாரம் மங்களம், தன்னு டைய வாழ்க்கையைப் பற்றி விவரிக்க வேண்டியவள் ஆனுள்.

பெண்கள் இருவர் பேச ஆரம்பித்தால், பேச்சுக்கா பஞ்சம்? இருவரும் என்னவெல்லாமோ பேசினுர்கள். ஆனுல், ஓர் உண்மை என்னவென்ருல், அவர்கள் இருவரும் தங்களுடைய வாழ்க்கையைப் பற்றி பொது வாக மேலெழுந்த போக்கில்தான் பேசிக் கொண்டிருந் தார்கள்.

இதற்கிடையில், மங்களத்தோடு இருமல் ஓடோடி வந்து விளையாடத் தொடங்கிவிட்டது. அவளுக்கு வேர்த்துக் கொட்டியது.

பங்கஜம் சமையற் கூடத்துக்கு ஓடி தண்ணீரும் கையுமாகத் திரும்பினுள். மங்களத்துக்கு

வாய் கொடுத்தாள். பிறகு தானும் ஒரு மிடறு குடித்தாள். திரும்பும்போது, 'இலக்கியப் பூங்கா' தீபாவளி மலர் அவள் கரங்களில் காட்சியளித்தது. முகப்புச் சித்திரத்தில் அவள் ரசிப்பு இழைந்தது. கோபுலு வரைந்திருந்தார். ஓவியத்துக்கான படக் குறிப்பைத் தேடினாள். தேடியது கிடைத்து விடுமென்பது சட்டம் இல்லை; நியதியும் இல்லை, நியாயமும் இல்லைதான்! என்னவோ இப்போது கிடைத்து விட்டது. பெருமூச்சு பிரிய, குறிப்பைப் படித்தாள்.

மங்களம் இப்பொழுது தெளிவான முகத்துடன் காணப்பட்டாள். கொண்டையிலிருந்த பூக்கள் அவள் காலடியில் கிடந்தன.

இதைக் கவனித்தபடியே சிந்தனை வசப்பட்டாள் பங்கஜம். பிறகு நெடுமூச்சோடு, நீண்டிருந்த படக் குறிப்பில் சிந்தையைத் திருப்பினாள் அவள். பிறகு, தன்னையும் அறியாமல் சிரித்து விட்டாள்.

"என்ன ஸிஸ்டர், நீங்க மட்டும் ஒண்டியாகச் சிரிக்கிறீங்க?"

"ஒண்ணுமில்லேங்க அக்கா. ஒரு தமிழ்ப் பாட்டைப் படிச்சேன், சிரிப்பு வந்திடுச்சு!"

"தமிழ்ப் பாட்டு சிரிப்புக்கு ஆளாகிடுச்சா, என்ன?"

"ஊஹூம், அப்படி இல்லீங்க. இந்தத் தமிழ் பாட்டு என்னைச் சிரிப்புக்கு ஆளாக்கி வச்சிட்டுது!"

"ஓஹோ!"

"ஊம்!"

"பாட்டைச் சொல்லுங்களேன்!"

"பாட்டு வாயிலே நுழையாது. பழைய பாட்டு வேணும்னு அர்த்தத்தைச் சொல்லட்டுமா?"

"ஓ!"

"அழகே உருவான கன்னிப் பெண் ஒருத்தியும், காளையைப் போன்ற ஒரு வாலிபனும் நீராடிக்கிட்டு இருந்தார்களாம் அவன் மூஞ்சிலே பவளம் மாதிரி இருந்த தன்னுடை சிவந்த வாயிலிருந்த நீரை அப்படியே கொப்புளித்துத் துப்பிட்டாளாம்!"

"அடிப் பாவி." என்று பதறினாள் மங்களம்.

ஆனால், பங்கஜமோ கடகடவென்று சிரித்து விட்டாள். "என்ன அக்கா இப்பிடி வையறீங்க? பாக்கிக் கதையையும் கேட்டுட்டு அப்பாலே பேசுங் களேன்?"

"சரி, சொல்லுங்க பங்கஜம்."

"அந்த இளைஞன் இதைக் கண்டு சந்தோஷப் பட்டான்" என்றாள் பங்கஜம்.

"அட, பைத்தியங் கொள்ளி!" என்று எரிச்சலுடன் மீண்டும் திட்டலானாள் பங்கஜம்.

மீண்டும் சிரிப்பு வெடித்தது பங்கஜத்திடமிருந்து. மார்புச் சேலை நல்ல வேளை விலகி விடவில்லை.

"அக்கா, இனிமேல்தான் சஸ்பென்ஸ் இருக்கு!" என்று அவளது ஆர்வத்தைத் தூண்டி விட்டாள்.

"அப்படியா? சொல்லுங்க!" துடித்தாள் மங்களம்.

"அவள் தன் முகத்திலே துப்பிய அந்த எச்சில் நீரை ஆம்பல் பூவிலே இருக்கிற இனிய சுவை கொண்ட தேன் அப்படின்னு விமர்சனம் செஞ்சானும்" என்று நிறுத்தினாள் பங்கஜம்

"அட கடவுளே!...ஊஹூம்!...அடர திமனி தரே!... இது காதல் விஷயம் போலிருக்கே!" என்று கை கொட்டிச் சிரித்தாள் திருமதி வீரபாகு. இருமல் வம்புக்கு வந்து விடாமல் இருக்க சிரிப்புக்கு முற்றுப் புள்ளி இட்டாள்.

கேட்ட காதல் விவகாரம் மங்களத்தை அவளது கடந்த உலகத்துக்கு அழைத்துச் சென்றது போலும்!

அவள் சுய உணர்வு பெற்று, பங்கஜத்தைப் பார்த்த நேரத்தில் அவளும் ஏதோ சிந்தனை லயிப்பில் கட்டுண்டிருந்தது தெரிய வந்தது.

காலம் ஏன்தான் இப்படி புள்ளி மானாக ஓடுகின்றதோ?

பொய்யாகி, கனவாகிப் போன நடந்த கதைகள் ஏன்தான் திரும்பி ஓடோடி வருகின்றனவோ?

பங்கஜத்தின் வாழ்க்கையைப் பற்றித் தெரிந்து கொள்ள மங்களம் ஆசை கொண்டாள்.

அதற்குள், "எங்கே மிஸ்டர் வீரபாகு?" என்று விசாரித்தாள் பங்கஜம்.

"அவங்க மாடிக்குப் போயிருக்காங்கண்ணு தோணுது அவங்களுக்கு ஆயிரம் சோலி!"

"ஆமா, ஆமா!... இண்டஸ்ட்ரியலிஸ்ட் வீரபாகு இன்று மெட்ராஸிலே ரொம்பப் பிரசித்தமாக இருக்கு!"

"என்னவோ, எல்லாம் பகவான் கடாட்சம் பங்கஜம்!"

"நம்ப பரிமளத்தையும் கூட காணலியே? அதோட அப்பாவோட அது இருக்குமோ?"

"ஊஹூம்!" என்று பதில் சொன்ன மங்களத்துக்கு வயிற்றில் புளியைக் கரைத்தது. பரிமளத்தை தங்களுடைய அருமைத் திருமகளாக—அன்புத் தவப் புதல்வியாக பங்கஜத்திடம் அறிமுகப்படுத்தி வைத்ததை அவள் நம்பி மேலும் ஏதாவது கேட்டு விடுவாளோ என்று பயந்தாள் மங்களம்.

மங்களம் செய்த புண்ணியம், அப்படிப் பட்ட சிக்கலில் கை வைத்துப் பாவம் தேடிக் கொள்ளவில்லை பங்கஜம்!

"அக்கா, நம்ப பரிமளத்தோட கல்யாணத்தை எப்போது நடத்தப் போறீங்க?" என்று மட்டும் ஆதுரம் பொங்கக் கேட்டாள் அவள்.

"பகவான் அனுக்கிரகம் கிடைச்சிட்டால், சீக்கிரம் நடத்திட வேண்டியதுதான்!" என்ருள் மங்களம்.

"மாப்பிள்ளை ரெடியா?"

"நிலவைப் பிடிச்சிட்ட இந்தக் காலத்திலே, மாப்பிள்ளை ரெடிமேட் சரக்காவா இருக்குது, ஸிஸ்டர்?"

"அது சரி. விஷயத்துக்கு வருவோம். மாப்பிள்ளை யார்? நீங்க பார்த்து வச்சிருக்கீங்களா? இல்லே, பாப்பாவே பார்த்து வச்சிருக்குதுங்களா?"

சற்றே தயங்கிய பிறகு, "அதிவீரராம பாண்டியன்னு ஒரு பிள்ளையாண்டானை நம்ம பரிமளம் லவ் பண்ணுது!" என்று கூறி நிறுத்திஞள் மங்களம்.

"ஓஹோ! 'லவ்' விஷயத்திலே இது புரட்சிதான்!"

"அந்தப் பிள்ளையாண்டான் புரட்சி எழுத்தாளராக்கும்!"

"அதாலேதான காதல் புரட்சி பண்ணுது போலே!"

"காதல் என்கிறதே புரட்சிக்கு மறு பெயரின்னு யாரோ சொல்லியிருக்காங்களே, பங்கஜம்!"

"அக்கா ஆல்ரவுண்ட்! சரி, சரி! யார் அந்த வாலிபர்? நான்கூட அவரோட கதை ஒண்ணு ரெண்டை படிச்சதாகத்தான் ஞாபகம் வருது."

"கொஞ்ச முந்தி நம்பளுக்கு எதிர்த்தாப்பிலே— என் அத்தானுக்குப் பக்கத்திலே இருந்திச்சே, அது தான் நான் சொல்லுற பாண்டியன்!"

"ஓஹோ! அப்படியா?...நல்ல பிள்ளையாகத்தான் தோணுச்சு!"

மங்களம் நெடுமூச்செறிந்தாள். அதிவீரராம பாண்டியனோட எழுத்திலே காதல் வசப்பட்டுடுச்சு பரிமளம்!

"ஆல்ரைட்!..." என்று பேச்சை சடக்கென்று நிறுத்தினாள். தொடர்ந்து எதையோ தெரிவிக்க வேண்டுமென்று மின் வெட்டும் நேரம் தவித்தாள். பிறகு, எதையுமே சொல்லாமல் மௌனம் காத்தாள் பங்கஜம்.

அப்போது ஜெனரல் ஆஸ்பத்திரியிலிருந்து போன் கால் வந்தது. புண்ணியகோடிக் குருக்கள் உடனே வீரபாகுவைப் பார்க்க வேண்டுமாம்!—இதுதான் செய்தி "ஆகட்டும் சொல்கிறேன்" என்று பதிலிறுத்து விட்டு நகர்ந்தாள் மங்களம். அடுத்த குரல் தேவ மனோஹரியுடையதாக இருந்தது. பரிமளத்தைக் கூப்பிட்டாள். பரிமளத்தைக் கூப்பிட்ட மங்களம் வாயெடுக்க முனைந்திட்ட வேளையில் தான் மாடிப்படி களில் தடதட வென்று பயங்கரச் சத்தம் ஒன்று கேட்டது. தொலைபேசிக் கருவியை அப்படியே மேஜை மீது போட்டுவிட்டு பொட்டில் அடிபட்ட பதைப்புடன் மாடிப்படிக்கட்டை நோக்கி ஓடினாள் மங்களம்.

உடன் தொடர்ந்தாள் பங்களூர் பங்கஜம்!

பங்கஜம்தான் விளக்கைப் போட்டாள்.

"ஐயோ அத்தான்!" என்று முதலில் அலறினாள் மங்களம். நெற்றித் திலகமும் அலறியது.

மாடிப்படிக்கட்டின் காலடியில் கிடந்தார் வீரபாகு.

அவர் காலடியில் கிடந்தாள் பரிமளம்.

"அம்மா பரிமளம்!" என்று ஓலமிட்டாள் மங்களம், ஜீவநதியாக பொங்கிப் புரண்ட பாசம் ஓலமிட்டது.

கண்ணீர் விளைந்தது வினையைப் போல!

வரவேற்புக் கூடத்தில் யாரோ வரும் காலடி யோசை நுட்பமான ஒலிப்பதிவுடன் கேட்டது.

வரவேற்பறையின் நிலைப்படியில் பெண் ஒருத்தி யின் இரட்டைப் பின்னல் மாத்திரம்தான் தெரிந்தது.

மங்களத்தின் வயிறு பற்றி எரிந்தது. கடவுளே!... என்று நொந்தவளாக வரவேற்புக் கூடத்தின் வடக்குப் பகுதிக் கதவுகளை ஆத்திரத்தோடு இழுத்துச் சாத்தித் தாழிட்டாள்.

மங்களம் அவ்விடத்தைத் தொடும் கேரத்தில்தான் பங்கஜம் அந்த மஞ்சள் பத்திரிகையைப் பார்க்க நேர்ந்தது. "ஆ!" என்று பதட்டம் அடைந்தாள். எந்தப் பத்திரிகையில் வெளியாகியிருந்த அவதூறுச் செய்திகள் வீரபாகுவுக்கோ, அல்லது பரிமளத்துக்கோ தெரியக் கூடாது என்று நினைத்து, அதைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்து வீசினாளோ, அதே பத்திரிகை இப்போது அவர்கள் இருவருக்கும் நடுவே விதியாக, வினையாக விசுவரூபம் எடுத்தாற்போன்று கிடந்தது. அந்தப் பத்திரிகையை எடுத்து மறைத்துவிட எண்ணி—மங்களத்தின் பார்வையினின்றும் மறைத்து விட எண்ணி, சாகசததோடு அதை 'லபக்'கென்று எடுத்தாள் பங்களூர் சீமாட்டி.

"ஸிஸ்டர், அதை எங்கிட்டே தாங்க!" என்று கண்டிப்புக் குரலில் கேட்டாள் மங்களம்.

பங்கஜம் தயங்கினாள். கையிலிருந்த அந்த நச்சுப் பத்திரிகை அவளை கருவேலமுள்ளாகக் குத்திப் பிராண்டிக் கொண்டிருந்தது. பெங்களூரில் இந்தப் பத்திரிகையைப் பார்க்க நேர்ந்த சம்பவமும் அதைத் தொடர்ந்து இடம் கண்ட நடப்புக்களும் அவளது மனத்திடலில் நிழற்படம் காட்டின. "இந்தச் சனியனை நீங்க பார்க்கத் தேவையில்லை, அக்கா!" என்று நயமாக உரைத்தாள்.

மங்களத்தின் கண்கள் தளும்பின. அந்த மஞ்சள் பத்திரிகையில் பளிச்சென்று தெரிந்த வீரபாகு—பரிமளம் ஆகியோரின் புகைப்படங்களையும் தரையில் கிடந்த வீரபாகு—பரிமளம் ஆகியோரின் உருவங்களை யும் மாறி மாறிப் பார்த்தாள் அவள். தோழி பங்க ஜத்தின்—அல்ல, சகோதரி பங்கஜத்தின் நேத்திரங் களின் கண்ணீரையும் அவள் கவனிக்காமல் இல்லை.

பங்கஜத்தின் பிடியிலிருந்த பத்திரிகையைப் பறிக்கத் தன்னுடைய கைகளை நீட்டினுள் மங்களம். "நா அந்தப் பேப்பரை கட்டாயம் பார்த்தாகணும்!" என்று தெரிவித்தாள்.

பங்கஜம் விபரீதங்கள் சுழித்திட்ட அந்த மஞ்சள் பத்திரிகையைக் கொடுக்க மனமின்றி மங்களத்திடம் கொடுத்தாள்.

மங்களம் அந்தப் பத்திரிகையை வாங்கினுள். முகப்பின் தலைப்பில் அச்சிடப்பட்டிருந்த "சென்னை லட்சாதிபதி வீரபாகு—அறுதை அழகி குமாரி பரிமளம் காதல் லீலைகள்!" என்ற வரிகளை—வாசகங்களை வாசித்தாள். பிறகு, அதை நாலாக மடித்துச் சுருட்டி வைத்துக் கொண்டு, தரையில் உட்கார்ந்தாள். தன் கணவரை ஏற இறங்கப் பார்த்தாள். பிறகு பரிமளத்தையும் நோக்கினுள். கண்ணீர் மாலை நீண்டு கொண்டேயிருந்தது.

'நல்ல காலம், அத்தானுக்கு அடி ஒண்ணும் படல்லே!" என்று சொல்லிக் கொண்டே, பரிமளத்தைச் சோதித்தாள் மங்களம்.

பரிமளத்துக்கு இன்னமும் சுயப்பிரக்ஞை திரும்ப வில்லையே!

'அம்மா பரிமளம்! கண்ணே பரிமளம்!' என்று மங்களத்தின் உந்திக்கமலம் விம்மிப் புடைத்தது.

குமாரி பரிமளம் ஸ்மரணை இழந்து மல்லாந்து கிடந்தாள், புரட்டி வீசப்பட்ட அம்மன் சிலை மாதிரி. மார்புச்சேலை நிலைகுலைந்திருந்தது மார்பகத்தின் நடுவில் தங்கப் பதக்கம் நெருகிக் கிடந்தது. அவள் நெற்றியில் இருந்த அந்தப் பொட்டும் திருநீறும்...

மங்களத்துக்கு அவளைக் கையெடுத்துக் கும்பிடத் தோன்றியது.

வீரபாகுவின் பனியனில் பதிந்திருந்த கறைகளைக் கண்டாள் மங்களம். அவளுக்குப் புரிந்து விட்டது. 'கடவுளே! அத்தான்!' மனம் அழ, கண்கள் அழுதன.

விதிக்கு மட்டும் அழவே தெரியாதோ?

தெய்வத்துக்கு மட்டும் சிரிக்கவே தெரியாதோ?

"அக்கா!" என்று அழைத்தபடி, மங்களம் திரும்பினாள்.

அப்போது பங்கஜம் லோட்டாத் தண்ணீருடன் வந்து நின்றாள். அவளே முன் நின்று வீரபாகுவின் முகத்திலும் பரிமளத்தின் முகத்திலும் தண்ணீரைத் தெளித்தாள்.

"அப்பா!" என்று பாசத்தின் பெருமிதத்தோடு அழைத்த வண்ணம், எழுந்தாள் பரிமளம். உடைகள் சீர்பட்டன.

"அப்பா!" என்ற அழைப்பில் உருகினார் வீரபாகு. இந்த ஒரு அழைப்புக்காக அவர் தவம் இருந்த நாட்கள் ஒன்றா, இரண்டா? "அம்மா பரிமளம்! கண்ணே!" என்று உணர்ச்சிப் பெருக்குடன் விம்மினார். அவளுடைய கண்ணீரைத் துடைத்தார். அவளது செம்மணிக் கரங்களை வாரியெடுத்து முத்தம் கொடுத்தார் அவர்.

"அப்பா! அந்த மஞ்சள் பத்திரிகையிலே வெளியான தலைப்புச் செய்தியை நானும் படிச்சேன்!" குழந்தைபோல நிர்மலமாகச் சிரிக்க முயன்றாள் குமாரி பரிமளம்.

வீரபாகு என்ன பதில் சொல்வார், பாவம்?—மௌனமாக நடந்தார். கதவைத் திறந்தார்.

"மணி ஆறு, நாற்பது!"

"வேறென்ன வேண்டும். உன்னைத் தவிர?" என்று திரை நாயகனும் நாயகியும் 'டூயட்' பாடிக் கொண்டிருந்தார்கள்—ரேடியோவில்.

பரிமளம் விம்மினாள்.

மஞ்சள் பத்திரிகையைப் பிரித்தவாறு அவளை நெருங்கி வந்தாள் மங்களம். "விதி விளையாடுகிறது, அம்மா!" என்றாள்.

"விதி விளையாட வில்லை, அம்மா!...மனிதர்கள் விளையாடுகிறார்கள்!" என்று பழிவெறி முழங்கக் கூவினாள் குமாரி பரிமளம்!...

# 18. பூஞ்சிட்டுக் கன்னங்கள்

'விதி விளையாடவில்லை, அம்மா!...மனிதர்கள் விளையாடுகிறார்கள்!...'

பழி வெறி முழங்க பரிமளம் கூவினாள் அல்லவா? அந்தச் சொற்கள் வீரபாகுவின் தளர்ந்த நெஞ்சத்தைச் சுண்டி இழுத்தன. ரத்த நாளங்களில் பாய்ந்தோடிக் கொண்டிருந்த இரத்தம் பூராவும் உறைந்து விட்ட உணர்வு எழுந்தது. அவ்வுணர்வின் நினைவே அவருக்கு அதிர்ச்சியாகவும் ஆறுதலாகவும் இருந்தது. அதிர்ச்சியையும் ஆறுதலையும் சீர்தூக்கிப் பார்க்கக் கூடிய மன நிலையிலா அவர் இருந்தார்?...இல்லைதான்! என்றாலும், இவ்விரு உணர்வுகளும்—ஒன்றுக்கொன்று மாறுதலையான இவ்விரு உணர்வுகளும் அவரைச் சிந்திக்க வைத்து விட்டன. இது மட்டும் நூற்றுக்கு நூறு உண்மை.

வீரபாகு தலையை உயர்த்திப் பார்த்தார்.

குமாரி பரிமளம் தன்னுடைய இடது கன்னத்து மச்சத்தில் வழிந்திருந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டிருந்தாள்.

அவருக்குப் பகீரென்றது. சற்று முன்னம், அவளுடைய விழி நீரைத் துடைக்கும் பாக்கியம் அவருக்குக் கிட்டியது. இப்போதும் அவள் கண்ணீரை அவர்

துடைக்க முடியும். இதயத்தின் அன்பு முழுவதும்— தூய்மையே வடிவம் கொண்ட அந்த அன்பு முழுவதும் நடுங்கிக் கொண்டிருந்த அவரது கைகளுக்குப் பாய்ந்து அவளது விழி நீரைத் துடைக்கத்தான் துடித்தன! அதற்குள் அவருடைய பார்வை மங்களத்தின் கரங்களிலே இருந்த அந்த மஞ்சள் பத்திரிகை 'சினிமா நேசன்' மீது ஊர்ந்து தொலைத்தது.

தொலைந்தது பாசத்தின் துடிப்பு!

விளைந்தது பாசத்தின் தவிப்பு!

சிறு குழந்தை போல தொழிலதிபர் விம்மினார். அவருக்குச் சொந்தமான மனச்சாட்சிக்குக் கேட்கும்படி விம்மினார்.

அந்த விம்மலில், "சென்னைத் தொழிலதிபர் வீரபாகு—அனாதை அழகி குமாரி பரிமளம் காதல் லீலைகள்!" என்ற சொற்கள் எதிரொலிக்கத் தொடங்கி விட்டன. "தெய்வமே!" என்று வீரிட்டலறினார் அவர். மண்டையில் அடித்துக் கொண்டு கதறினார். தலைமுடிகளைப் பிய்த்துக் கொண்டு ஓலமிட்டார்.

பரிமளம் உயிர்ப் பதைப்புடன் வீரபாகுவை அண்டினாள். அவள் பார்வைக்கு அந்த மஞ்சள் பத்திரிகையின் தலைப்புச் செய்தி இலக்காகாமல் இல்லை. உடல் நடுங்க, உள்ளம் ஒடுங்க, அவளது கஞ்ச மலர்ப் பாதங்கள் முன்னேறி அடியெடுத்து வைத்தன.

"அப்பா!" என்று அன்பின் பாசம் முழங்க அழைத்தபடியே, வீரபாகுவை நெருங்கி, அவருடைய கண்களில் ஓடிய கண்ணீரை புடவைத் தலைப்பால் ஒற்றி எடுத்தாள். உணர்ச்சி வசப்பட்ட நிலையில் அப்படியே கல்லாக ஒரு கணம் நின்று விட்டாள் பரிமளம். கல், கனியாதா? ஆயிற்று: என்ன விந்தை இது? பரிமளமா கல்? ஊஹூம், அவள் கனி!... ஆனால் கல் உள்ளங்களின் சதித் திட்டம்தான் இந்த மஞ்சள் பத்திரிகையாக உருக் கொண்டிருக்கிறது!

'தெய்வமே!' என்று விம்மி வெடித்த அந்தச் சொற்கள் அவளுடைய நெஞ்சில் ரத்தக் கசிவை உண்டு பண்ணியது.

"அப்பா! தெய்வம் நாம் அழைத்தால் வராது. தீயவர்கள் அழைத்தால்தான் ஓடோடி வரும். காலம் மாறி போய் விட்டது அல்லவா?" என்று அவளும் விம்மத் தொடங்கினாள்.

மௌனப் பிண்டமாக நின்றிருந்த பங்களூர்ச் சீமாட்டி பங்கஜத்தை ஊடுருவிப் பார்த்த வண்ணம், அவளைக் கடந்து நடந்தாள். வீரபாகுவின் இனிய பாதியான மங்களம், பரிமளம் தீப்பிழம்பாகக் காட்சி யளித்த கோபத்தைக் கண்டாள். உணர்ச்சிச் சுழிப் புடன் நின்ற பரிமளம் தன்னுடைய புடவைத் தலைப்பு சரிந்து விழ, அப்போது விளைந்திருந்த இனக் கவர்ச் சியைப் பற்றிய உணர்வு சிறிதும் அன்றிக் காணப் பட்ட நிலையையும் அவளால் உணர முடிந்தது. பரிமளத்தின் சார்பில் மங்களம் பதட்டம் அடைந்தாள். சமைந்த பெண்ணின் மாரகச் சேலை யைக் கொய்து இடது புறத் தோள் பட்டையில் விசிறினாள்.

அப்போதுதான் பரிமளத்துக்குச் சுயப் பிரக்ஞை சிலிர்த்தது போலும்! அவள் பதறி அடங்கிய மன நிலையோடு வீரபாகுவை நோக்கினாள்.

வீரபாகு எங்கோ சூனியத்தில் லயித்திருந்ததை அவரது கண்களின் நிலையற்ற சுழற்சி காட்டியது.

இங்கு விருந்து சாப்பிட்டபோது, குஷன் நாற்காலி யில் விசையுடன் சாயப் போக, அந்த அதிர்ச்சியில் தன்னுடைய சோளியின் மேற்பகுதிப் பொத்தான் விடு பட்டதை வீரபாகு சூசகமாகத் தெரிவித்த பாசத்தின் கடமைக் குறிப்பை அப்போது குமாரி பரிமளம் மீண்டும் பாராட்டினாள். இப்போது மங்களம் தன்னு டைய புடவையைச் சரி செய்து விட்ட பான்மையையும் அதே மனநிலையில் போற்ற வேண்டியவள் ஆனாள்.

"அம்மா பரிமளம்!" என்று பாசத்தின் கட்டுக் கடங்காத சுழிப்போடு அழைத்தாள் மங்களம். பரிமளத்தின் கன்னங்களில் சிந்திச் சிதறியிருந்த உவர்க்கோடுகளைச் சுத்தம் செய்தாள்.

தன் கண்ணீரை இப்போது மங்களமும், சற்று முன் வீரபாகுவும் துடைத்திட்ட அந்த இரு வேறு நிகழ்ச்சிகளையும் பரிமளம் ஆராதனை செய்தாள். கோடை மின்னல் கொடி சுற்றிக் கிறுக்கிப் பாய்வதைப் போன்று வீரபாகு தனக்கு பழக்கமான அந்தச் சம்பவம் பளிச்சிட்டது. தன்னுடைய மானத்தைக் காத்திட்ட அந்தப் பாச நிகழ்ச்சியை அவள் மறக்காத நாழிகை உண்டா, என்ன?

மங்களம் தன் கையிலிருந்த மஞ்சள் பத்திரிகையை பிரித்தாள். வெளிப்படுத்தப்பட்டிருந்த தலைப்புச் சேதி களுக்கு அடியில் எதிரும் புதிருமாக தன் பிராணநாதர் வீரபாகுவின் புகைப்படமும் அபலைக் கன்னி பரிமளத் தின் நிழற்படமும் அச்சிடப்பட்டிருந்த பயங்கரத்தை அவள் உணர்ந்தபோது, அடி வயிற்றை என்னவோ செய்தது.

"விதி விளையாடுகிறது அம்மா!" என்று பரிமளத் திடம் வேதனை சூழ இயம்பிய பேச்சுக்கு மறுப்புப் போல, "விதி விளையாட வில்லை அம்மா, மனிதர்கள் விளையாடுகிறார்கள்!" என்று பரிமளம் விடையிறுத்த செய்தியையும் அவள் மறந்து விடவில்லை; மறந்து விடவும் முடியாது. ஏதோ சதி ஒன்று சென்னைப் பட்டணத்தில் உருவாகி அது பங்களூரில் இப்படிப் பட்ட வினையாக செயற்பட்டு இருக்கிறது என்பதை இப்போது மங்களம் நன்கு புரிந்து கொண்டாள்.

அதிவீரராம பாண்டியன் இந்தப் பத்திரிகையை அவள் கணவரிடம் கொடுத்து விடை பெற்றுச் சென்றான். அல்லவா? அந்த நடப்பு மங்களத்தை மட்டுமல்ல, வீரபாகுவையும்தான் சிந்திக்கச் செய்து விட்டிருக்க வேண்டும்.

"வழியிலே நின்னுக்கிட்டிருந்தால் எப்படி? போய், அந்த அறையிலே உட்காருங்க. கொஞ்ச நேரம் ரெஸ்ட் எடுத்துக்கிட்டு, அப்புறம் சனியன் பிடித்த இந்த விவகாரத்தைப் பத்தி மூளையைக் குழப்பிக்கிட லாமே!" என்று எரிச்சலுடன் குறுக்கிட்டாள் பங்களூர் பங்கஜம்.

"ஸிஸ்டர் சொல்றது வாஸ்தவம்தான். நம்ப பரிமளத்தோட ரூமிலே போய் உட்காரலாம். ஒரு நொடியிலே நான் போய் இன்னொரு டோஸ் காப்பி கலந்துக்கினு வந்திடறேன்" என்றாள் மங்களம்!

"ஓ கே!" என்று புதிய தெம்பு பெற்றவர் மாதிரி சொல்லிக் கொண்டே, பரிமளத்துக்கென்று ஒதுக்கப் பட்டிருந்த—ஒதுக்கிக் கொடுத்திருந்த அறையில் பிரவேசித்தார் தொழிலதிபர் வீரபாகு. மகுடியின் இசை நயத்தில் கட்டுப்பட்ட பூ நாகமாக அவரைத் தொடர்ந்தாள் குமாரி பரிமளம்.

அதோ, மங்களமும், அவளைத் தொடர்ந்து பங்கஜ மும் பின் கட்டுக்கு நடந்து கொண்டிருக்கிறார்கள்!

∴ ∴ ∴

பூஞ்சிட்டுக்கள் இரண்டு ஒன்றையொன்று அணைத்தும் விலகியும் விளையாடிக் கொண்டிருந்தன.

அவை காதல் ஜோடியாகத்தான் இருக்க வேண்டும்!

வீரபாகுவும் பரிமளமும் அந்தக் குருவிகளை மாறி மாறிப் பார்த்தார்கள். பிறகு அவர்கள் இருவரும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

வீரபாகுவின் மனக் கண்ணில் அந்த மஞ்சள் பத்திரிகை நிழலாடத் தொடங்கியது. அவ்வளவு தான் அவரது உந்திக் கமலத்தில் கொந்தளித்துப் புரளத்தலைப்பட்ட வேதனையும் ஆத்திரமும் தொண்டைக் குழி வரை மோதத் தொடங்கி விட்டன. பரந்த நெற்றி மேட்டில் நரம்புகள் புடைத்தன. தாறு

மாருகக் கலந்து கிடந்த கிராப்பு முடிகளின் ஓரங்களில் ஈரம் சொட்டியது.

அந்த ஈரம் மஞ்சள் பத்திரிகைக்கும் இருந்திருந்தால்......?

வேடிக்கையான கேள்விதான்! ஆமாம், வேடிக்கையான கேள்வியேதான்!

கேள்வி கேட்கும் உரிமை எல்லோருக்கும் இருக்கிறது. அந்த உரிமையில்தான் வீரபாகுவும் இப்படிக் கேள்வி ஒன்றைக் கேட்டு விட்டார். ஆனால் பதில் சொல்வதற்குரிய உரிமையை தெய்வத்தின் பேரில் எடுத்துக் கொண்டு அந்த மஞ்சள் பத்திரிகை பதில் கொடுக்குமா?

'கடவுளே! சமுதாயத்தின் சந்நிதானத்திலே எத்தகைய பயங்கரமான—பாவக் கறை படிந்த—அவதூறு நிறைந்த குற்றச்சாட்டை என் மீது—என் மகள் பரிமளத்தின் மீது—எங்கள் இருவரையும் பிணைத்து நிற்கும் பாசத்தின் மீது சுமத்தி விட்டதே அந்த மஞ்சள் பத்திரிகை? நானும் பரிமளமும் காதல் லீலை புரிந்தோமாம்! சே!...ஒர்ஸ்ட் திங் டு திங்க்! நினைச்சுப் பார்க்கிறதுக்கே அசூசையும் அருவருப்பும் தரக்கூடிய ஒரு சங்கதி!...இந்த ஒரு செய்தியை இன்னொரு வாட்டி நான் மனதிலே ஞாபகப்படுத்திப் பார்த்தால் கூட என் நெஞ்சு கட்டாயம் வெடிச்சு இரண்டாகப் பிளந்து, சிதறிடும்!...அப்படிச் சிதறிட்டால் கூட, தேவலாம். ஊஹூம்! கூடாது! நான் என்னுடைய அருமை மகள் பரிமளத்தை மாலையும் கழுத்துமாகப் பார்க்க வேணும்! பார்த்துப் பரவசமடைய வேணும்! இல்லாட்டா என் நெஞ்சு வேகாது!...வேகவே வேகாது! தெய்வமே! அநீதிகளும் அநியாயங்களும் லோகத்திலே தலைவிரிச்சாடும் போது, நீ இந்த மண்ணிலே வந்து விளையாடுவாயாமே?...எப்போது வரப்போகிறாய்? நீ வரமாட்டாய்!...ஏன்னு கலி முற்றிப் போயிட்டுது! மனிதர்கள் மனிதர்களாக இருக்காத போது, தெய்வம் தெய்வமாக இருக்க வேணும்னு

நினைக்க—நம்ப—எதிர்பார்க்க எனக்கு 'ஏது உரிமை!... உரிமை! நல்ல சொல் இது! இந்த ஒரு சொல்லை சுதந்திரம் என்கிற சட்ட சலுகையைக் கொண்டு தானே அந்த மஞ்சள் பத்திரிகைக்காரன் கன்னு பின்னு வென்று செய்திகளை ஜோடிச்சு, ஒரு பத்திரிகையாக்கி அதை அயல் மாநிலத்திலிருந்து வெளியிடத் துணிஞ் சிருக்கான்?... தமிழ்நாடு அரசு நல்ல வேளை, இந்த மாதிரியான பண்பு கெட்ட பத்திரிகைகளை நடத்த அனுமதிக்கல்லே!...வயிற்றுப் பிழைப்புக்கு இப்படி ஒரு மானங் கெட்ட பிஸினஸ்! சே! பன்றி கூடத் தான் எப்படியோ தன் வயிற்றை நிரப்பிக்கிடுது! ஓ!...'

வீரபாகுவின் காலடியில் சுழன்ற உலகம் தலை குப்புறக் கவிழ்ந்து விட்டது போன்றதொரு பயங்கரச் சிந்தனையை அவர் உணரலானார். பரிமளத்தின் டவலை எடுத்து முகத்தைத் துடைத்துக் கொண்டார். சற்று நேரம் விசிராந்தியாக உட்கார எண்ணி, அருகில் கிடந்த குஷன் நாற்காலியில் உட்காரப் போனார் அவர்.

அங்கே நிலைகுப்புறக் கிடந்தது அந்தச் சிவப்பு டைரி!...

ஆமாம்; சிறுகதை மன்னன் அதிவீரராமபாண்டி யனின் சிவப்பு நாட்குறிப்பே தான் அது!...

மனச்சான்றின் உயிர்ப் பகுதியில் தயாராகக் காத்திருந்த குற்ற உணர்வு, தொடரவிருக்கும் ஒரு குற்றத்துக்கு உடந்தையாகி விடாமல் மனிதத் தன்மையோடு தப்பித்துக் கொள்ள வேண்டிய தற்காப்புணர்வு துலங்க சுழித்துக் கொண்டிருக்கை யில், வீரபாகு அந்த நாட்குறிப்பைப் புரட்ட எண்ணி னார். ஆனால் மறுகணத்தில் அவர் அவ்வாறு செய்யா மல் தப்பினார். பிறருடைய நாட்குறிப்பைப் பார்ப்பது தவறு என்பது அவருக்கும் தெரியாத உண்மை அல்லவே!

யாருடைய டைரி இது? ஒருகால், பரிமளத்தோட தாக இருக்குமோ? அது அலுவல் செய்கிற கம்பெனி யிலே கொடுத்திருப்பாங்க!...என்ற யோசனையுடன்

அவர் அதை அருகிலிருந்த மேஜை மீது வைத்தார். அப்போது, நாட்குறிப்பின் மேலட்டைப் பகுதி முன்வச மாக அமைந்திருந்தது. சிவப்பு பின்னணியில் ஒட்டப் பட்டிருந்த அச்செழுத்துக்களிலே அவர் நாட்டம் ஓடியது. ஓடிய மனவோட்டம் தடைபட்டது.

''அதிவீரராமபாண்டியன் சிறுகதை எழுத்தாளர், சென்னை-10'' என்ற வாசகக் குறிப்பு பளிச்சிட்டது.

வீரபாகு குழம்பினார். 'மிஸ்டர் அதிவீரராமபாண்டி யன் டைரி இங்கே எப்படி வந்ததாம்?—அதுவும் இந்தத் தனி அறையில் பரிமளத்தின் பிரத்யேக அறையில் எப்படி வந்தது'?

மூளை நரம்புகளில் வலி எடுக்கத் தொடங்கி விட்டது.

தம்மைப் பற்றிய சொந்தச் சிந்தனைகளிலேயே சில கணப் பொழுதுகளை இதுவரை ஓட்டிவிட்டு, பிறகு ஒரு மனமாற்றத்தைக் கருதி அங்கிருந்து வெளியேறி, வரவேற்புக் கூடத்தின் தென்புறம் இருந்த ஒரு ஜப்பான் பீரோவின் வெளியே இருந்த பொத்தான் ஒன்றை அழுத்தினார் வீரபாகு.

வர்ஜீனியா சிகரெட் ஒன்று வந்தது.

புகைச் சுருள்கள் புறப்பட்டன.

புறப்பட்ட அமைதியைத் தட்டிப் பறிக்க அதோ அவள் தரிசனம் தந்து விட்டாள்!

மஞ்சள் பத்திரிகைகளில் வெளியாகியிருந்த புகைப் படங்கள் பங்களூர் மஞ்சள் பத்திரிகைக்காரனுக்கு எப்படிக் கிடைத்தன என்ற ஆலோசனையில் ஈடுபட்ட போதுதான், வீரபாகுவின் முன்னே ஒரு கனைப்புத் தொனி எழுப்பிக் கொண்டே வந்து நின்றாள் அந்த அழகி.

''நீயா? நீ ஏன் இங்கே வந்தாய்?...இந்த மாதிரி பெண்கள் என்னைத் தேடி என்னுடைய பங்களாவுக்கு

யாருமே இதுவரை வந்ததில்லையே?...சே!...மனிதன் அவனுக்கு விதித்த இலட்சுமணன் கோட்டை தாண்டும்போது, அவன் எப்படிப்பட்ட சோதனைகளை யெல்லாம் எதிர்கொள்ள வேண்டியிருக்கிறது?...'' வீரபாகு உரத்த குரலெடுத்துச் சத்தம் போட்டார். முன்பு தப்பி விட்டதாகப் பெருமைப் பட்டுக் கொண்ட குற்ற உணர்வு இப்போது தலைகுனிய நேர்ந்தது. "சே! நான் மிருகம்!" என்று அளவு மீறிய எரிச்சலுடன் கூவிக் கொண்டே சிகரெட் புகையை உறிஞ்சினார். சிகரெட்டுத் துண்டில் இருந்த நெருப்பு அவரது உதடுகளைச் சுட்டது. சுட்டதோடு சரி. சுட்டெரித்து விடவில்லை!

வந்தவள், மறு பேச்சாடாமல் அங்கிருந்து நகர்ந்து விட்டாள்.

ஒருவேளை, அவருடைய சிகரெட்டுத் துண்டின் நெருப்பு அவளைச் சுட்டெரித்து விட்டிருக்குமோ?

அவள் ...?

° 0 °

''அம்மா! பரிமளம்!...'' என்று அன்புடன் அழைத்தார் வீரபாகு.

குமாரி பரிமளம் நிழற்பட உருவத்தில் அந்த அறையில் காட்சி தந்தாள்!

பேசும் விழிகள்.

அவை பிறரைப் பேச வைக்கும்.

பேசாத இதழ்கள்.

அவை பிறரைப் பேச வைக்காது.

பூஞ்சிட்டுக் கன்னங்கள்.

தூய கனலின் வடிவம் கொண்டு, பரிமளமே தீயாக, நீராக, மலராக மணமாக, அங்கு தரிசனம் கொடுத்தாள்.

நெற்றியில் நீறு.

நீள் விழிகளிலே கனவு.

கன்னங்களின் குழிவில் அழகின் சிரிப்பு.

அந்தத் திருஷ்டி மச்சம்!...ஆஹா!...

அவள் பெண்தானா?

இல்லை...தெய்வமா?

வீரபாகுவின் நெஞ்சில் அம்பிகை சிலையோடினாள். அவரது கைகள் பரிமளத்தின் படத்தை நோக்கிக் குவிந்தன. 'அம்மா பரிமளம்...என் தெய்வமே!' கண்கள் பொடித்தன.

மங்களமும் பங்கஜமும் காப்பிக் கோப்பைகளை ஆளுக்கொன்றாக ஏந்தியவாறு அந்த அறைக்குள் நுழைந்தார்கள்.

"அப்பா! அப்பா!...விதி விளையாடவில்லை மனிதர்கள்தான் விளையாடுகிறார்கள் என்று நான் சொன்னேனே! அது முற்றிலும் உண்மைதான் அப்பா! இந்த ஈவிரக்கமற்ற பாதகச் செயலுக்கு உடந்தையாக இருந்தவர்களை நான் கண்டு பிடித்து விட்டேன். அப்பா!" என்று கூவினாள் பரிமளம். அவள் கையில் அவளது புகைப்படம் ஒன்று 'இருந்தது. கழுத்துச் சங்கிலி ஊசலாடியது.

"அப்போது"

"ஸார்!" என்று அழைப்பு விடுத்தவாறு வந்து நின்றான் சிறுகதை மன்னன் அதிவீரராமபாண்டியன்.

# 19 முத்தமிட்ட இதழ்கள்

படப் பிடிப்பில் பங்கு பற்றும் நடிகைகளும் நடிகர்களும் டைரக்டர் ஆணையிடுகிற மாதிரி, தங்களுடைய முகக்குறிப்புக்களை உடனுக்குடன் உருவாக்கிக் காட்ட வேண்டும்.

அழுபவர்கள் சிரிப்பதும், சிரிப்பவர்கள் அழுவதும் படப்பிடிப்பில் சர்வ சாதாரணமான ஒரு நிகழ்ச்சி.

இவ் விதி, வாழ்க்கை நிலைக்கும் பொருந்தும்!

"ஸார்!..." என்ற அழைப்பின் ஓசையைக் கேட்ட மாத்திரத்தில், குமாரி பரிமளம் நிதானமான விழிப்புப் பெற்றாள். குரலின் தன்மையை வைத்து, குரலுக்கு உடைய உள்ளத்தை அனுமானம் செய்து கொள்ள கைந் நொடிப் பொழுதுகூட அவளுக்குத் தேவைப்படவில்லை. அப்போதைய மனநிலையில்—மன உணர்வில் அவளுக்குத் தேவைப்பட்டதெல்லாம் அமைதி ஒன்றுதான்! அந்த அமைதியை நிலைப்படுத்திக் கொள்ள வேண்டிய கட்டத்தில் நிறுத்தப்பட்டிருந்த போதுதான். அவள் வேண்டிய—எதிர்பார்த்த அமைதியைப் பறித்துக் கொள்கிற மாதிரி அந்தக் குரல் எதிரொலித்தது.

அதிவீரராம பாண்டியன் வருகை புரிந்திருக்கின்றான்!

அமைதிக்காக, உள்வட்டத்தில் சுழன்று வியாபித்தவாறு நடந்து கொண்டிருந்த ஒரு போராட்டத்தில் முடிவைப் பற்றிய அக்கறை கொள்ளாமல், புதிய உணர்வு பெற்றவளாக வெளியே வந்தாள் குமாரி பரிமளம். "ஓ!...நீங்களா?...வாங்க மிஸ்டர் பாண்டியன்!" என்று முகமன் மொழிந்தாள்.

அதிவீரராமபாண்டியன் அவளுக்குரிய அந்தத் தனி அறையில் கால் பாவ தயாராக நின்ற கோலத்தை

அவளுடைய கோலவிழிகள் கணித்தன. சுதாரித்துக் கொண்டாள். "வாங்க; இப்படி ரிசெப்ஷன் ஹாலிலேயே உட்கார்ந்து கொள்ளலாமே!" என்று நயமான தொனி எடுத்துச் சொல்லிக் கொண்டே அவனை 'ஓரக்கண்ணால்' பார்வையிட்டாள்.

பாண்டியன் கெட்டிக்காரன். இல்லாவிட்டால், கதை அளக்கும் கலையில் தேர்ந்திருக்க முடியுமா?—சிறுகதை மன்னன் என்ற பட்டத்தை சூட்டிக் கொண்டிருக்கத்தான் இயலுமா? சிறுகதை மன்னன் என்றால் அந்த நாளில் புதுமைப் பித்தனைத்தான் குறிக்கும். இப்போது, அதிவீரராமபாண்டியன்தான் சிறுகதை மன்னன்! அவன் நாசூக்காக புன்னகை செய்யலானான். வலுவில் வரவழைத்துக் கொண்ட புன்னகை அது. செயற்கைப் புன்சிரிப்பு என்றும் வரம்பு கட்டலாம்.

பாண்டியனுக்குச் சிந்திப்பதற்கு வாய்ப்பு கொடுக்காமலே, பரிமளம அந்த அறையின் முகப்பைக் கடந்து தென்புறமாகத் திரும்பி வரவேற்புக் கூடத்தை நோக்கி நடை பயின்றாள். குஞ்ச மலர்ப்பாதங்கள் விநயபூர்வமானதொரு சாகசத்தோடு—சாகசம் மண்டிய கவர்ச்சியோடு—கவர்ச்சி நிரம்பிய காந்த எழிலோடு அடி பிரித்து அடிமிதித்து நடந்தன.

நாத லயத்தின் கட்டுப்கோப்பில் மதிமயங்கிய கலா ரசிகனென்ன பாண்டியன் உருமாறினான். பரிமளத்தைப் பின் தொடர்ந்தான்.

பாண்டியனின் பார்வைக்கு அந்தச் சிவப்பு டைரி இலக்காகி விடாமல் இருக்க வேண்டும்! தவிப்பு பரிமளத்தைக் குடைந்தது!

ட்காருங்கள், பாண்டியன்!...வீரபாகு ஐயா ஏதோ குழப்பத்திலே இருக்காங்க. ஒரு சில நிமிஷத்துக்குள்ளே வந்திடலாம்னு நினைக்கிறேன். 'ஹாட் டோஸ்' வேணுங்களா? இல்லே...?" என்று பேச்சைப் பாதியில் நிறுத்திவிட்டு, கடைக்கண் பார்வையை பாண்டியன் மீது வீசினாள் பரிமளம்.

அவன் விழித்தான்.

அவன் நிலை அவளுக்குப் புரியாமல் இருக்குமா? இன்று நேற்றுப் பழக்கமா? பலமாதங்கள் அவனுடன் பழகி அவனைப் படித்துக் கொண்டவளாயிற்றே! அவனுடைய கதைகளைப் படித்து, பித்தாகி, மயங்கிக் கிடந்தவள் அல்லவா அவள்?

சூடாகத் திட்டப் போகிறாளா?...

"டோண்ட் ஒர்ரி, ப்ளீஸ்! ஹாட்டாக காபி வேணுமா, இல்லே ஃபாண்டா ட்ரிங் கொண்டாரட்டுமா என்று கேட்டேன்! விஷயம் அவ்வளவு தான்!" என்று சொல்லிவிட்டு, பரிமளம் சிரித்தாள்.

எவ்வளவு அழகாகச் சிரிக்கின்றாள்!

பச்சைமண் இதழ் குவித்து, இதழ் பிரித்துச் சிரிக்குமே அப்படிப்பட்ட சிரிப்பு அது!—அவளையும் மீறிய சிரிப்பு அது. பாவம், சிரிக்கும் நிலையிலா அவள் நிறுத்தப்பட்டிருந்தாள்? என்னவோ சிரித்து விட்டாள்.

அந்தச் சிரிப்பை—சிரிப்பின் மலர்ச்சியைத் தரிசித்து எத்தனை நாட்கள் ஆகிவிட்டன!

பாண்டியன் இவ்வாறு தனக்குத்தானே கேட்டுக் கொண்டான். இனம் புரிந்த குற்ற உணர்வு ஒன்று அவனை என்னவோ செய்திருக்க வேண்டும். பாதி மனிதனின் பாதிச் சிரிப்பை நினைவூட்டும் வகையில், அவனுடைய பற்கள் வெளியே எட்டிப் பார்த்தன. சிகரெட்டுப் புகை மேலும் கறுப்பாக்கி விட்டிருந்த உதடுகளின் கரையில் இயல்பற்ற இளமுறுவல் தேங்கியது. "எனக்கு இப்போதைக்கு ஒன்றுமே வேண்டாம் பரிமளா!" என்று பதில் கொடுத்தான்.

"பரிமளா!"—அந்தப் பெயர் உச்சரிப்பை பாண்டியன் வெளிப்படுத்தக் கேட்டதும், குமாரி பரிமளம் மெய்ம்மறந்தாள். 'பரிமளா, பரிமளா' என்று விநாடிக்கு நூறு வாட்டி கூப்பிட்டு, என் அழகை ரசித்து என்

அழகின் உபாசகராக இருந்து வந்த இந்தப் பாண்டியன் இப்போது எப்படியெல்லாம் உருமாறிப் போய்விட்டார்! அவர் உள்ளம்தான் எப்படித் திசைமாறி விளை டாயத் தொடங்கிட்டுது!...பரிமளத்தின் குறுவிழிகள் கசிந்தன. மது மலர் இதழ்கள் உணர்ச்சி வசப்பட்டுத் துடித்தன. பூஞ்சிட்டுக் கன்னங்கள் உணர்வுகளை உருமாற்றிப் பிரதிபலித்தன. உதிர்ந்த ஒரு துளிக் கண்ணீர் முத்து அவளுடைய இடது கன்னத்தின் 'மச்சப்புள்ளியை முத்தமிட்டது. ''பரிமளம், நான் கற்பனையில் வாழ்பவன் தினம் தினம் ஆயிரமாயிரம் அழகிகளைக் கற்பனை செய்து பார்ப்பவன் நான். ஆனால் என்னுடைய கற்பனைத் திறன்களையெல்லாம் தோல்வியடையச் செய்கிற மாதிரி உன்னுடைய திருஷ்டி மச்சம் அமைந்து விட்டது. அழகின் உச்சி என்று பாரதிதாசன் பாடிய அந்தப் பாட்டின் உயிர் உன்னுடைய மச்சத்தில் தான் உயிர்ப்புக் கொண்டு நிலவுவதாக நான் எண்ணுகிறேன்!'' என்று பரிமளப் புராணம் பாடியவன் இதே பாண்டியன் தான்!

வரவேற்புக் கூடத்தில் இருந்த நிலைக்கண்ணாடி, பரிமளமும், பாண்டியனும் அப்பொழுது தங்களை மறந்த லயத்தில் கடந்தகாலச் சிந்தனைகளின் மனம் லயித்து நின்ற நிலையைப் பிரதிபலிக்கத் தவறிவிட வில்லை தான்.

சுவர்க்கடிகாரம் ஏழு முறை குரல் கொடுத்தது. இரவல் குரல் அல்ல அது!

முதலில் விழிப்புப் பெற்றவன் கதாசிரியன் பாண்டியன்தான்! 'பரிமளம்!' என்றான்.

பரிமளம் சுயப் பிரக்ஞை கொண்டாள். 'பரிமளம்!' என்று அவன் அழைத்த அழைப்பு, அவள் நெஞ்சில் வேதனையை விளைவித்தது போலும்! அழகு கொழித்த இளம் மார்பகம் எம்பித் தாழ்ந்தது 'பரிமளான்னு நீங்க என்னை அழைக்க மாட்டிங்களா?' என்று குழந்தைத்தனமான சபலத்தோடு கெஞ்சினாள் அவள்.

கழுத்துச் சங்கிலியின் டாலர் ஊசலாடிக் கொண்டிருந்தது, அவளது உயிரைப் போல! காது வளையங்கள் அசைந்தாடிக் கொண்டிருந்தன—அவளுடைய உள்ளத்தின் துடிப்பு மாதிரி!

'பரிமளம்' என்று வாய் ஓயாமல் முன்பெல்லாம் அழைப்பான் பாண்டியன். பிறகு 'பரிமளா!' என்று அழைக்கத் தொடங்கினான். 'என்ன மிஸ்டர் பாண்டியன்!...என்னை ஒடித்து போட்டு விட்டீர்களே?' என்று கேலி பண்ணினாள் அவள். பரிமளம் என்ற 'பெயரில் இருந்த' எழுத்தை விட்டுவிட்டதைத்தான் அவள் அப்போது கிண்டலாகக் குறிப்பிட்டாள். 'ஐயோ! இப்போது என்னை நிஜமாகவே ஒடித்துத்தான் போட்டுட்டீங்க நீங்க!' மனச்சாட்சி கதறிக் கதறி அழுதது.

பாண்டியன் பதறினான். அவள் கண் கலங்கிப் பார்த்த நேரம் வெகு குறைவு. ஆகவே பதறினான். நேற்று ஜார்ஜ் டவுனில் தன் முன நடத்திய காதல் உரிமைப் போரில் அவன் மனம் அடையாத நெகிழ்ச்சியை இப்போது அவன் அடைந்தானே? மனச்சாட்சி வேலை செய்வதற்குக்கூட நேரம் காலம என்ற வரம்பு நிர்ணயம் உண்டென்பது மெய்தானே?

'பரிமளம்!'

அவன் கூப்பிட்டான்.

கூப்பிட்ட குரலுக்கு இதோ என்று அழகுப் புள்ளி மானாக, வண்ணக் கலாப மயிலாக பாடும் எழிற் குயிலாக ஓடோடி வரும் பரிமளம் சரிந்து விழத் துடிக்கும் சேலைத் தலைப்பைப் பூவிரல்களில் பின்னிக் கொண்டு விழிகளை மூடி, உதடுகளை மூடி நின்றாள். அன்றொரு நாள் அவன் புரசைவாக்கத்தில் கோயில் ஒன்றில் தரிசித்த அம்பிகையின் ஞாபகம் தான் அவனுக்கு இப்போது சிலிர்த்தெழுந்தது கைகள் துடித்தன. இரண்டு கைகளும் ஒன்று சேரக் குவியத் தலைப்பட்ட நேரம் அது.

அப்போது அவளாகவே தன்னுணர்வு பெற்று ஓ!...பாண்டியன்! வில் யூ எக்ஸ்யூஸ் மி ப்ளீஸ்!...என்று தட்டுத் தடுமாறிச் சொல்லிக் கொண்டு, கண்ணீரை அவன் பார்வைக்கு அஜாப்படுத்தியவாறு கைவிரல்களால் துடைத்துக் கொண்டாள். ஈரம் இன்னமும் விலகவில்லை. ஆகவே புடவை முந்தியைக் கொய்து துடைத்துக் கொள்ள வேண்டியவள் ஆனாள்.

பாண்டியனின் ரசிகத் தன்மைக்கு அவளையும் மீறிய விதத்தில் ரசிப்பு விருந்து கொடுத்தாள் பரிமளம்!

பாண்டியன் பெருமூச்செறிந்தான்!

"பாண்டியன்! இங்கேயே உட்கார்ந்திருங்கள்!"

அவன் உட்கார்ந்தான். நாழிகைப் பொழுதுக்கு முன் உட்கார்ந்து, தொழிலதிபர் வீரபாகுவுடன் உரையாடி, பிறகு 'சினிமா நேசன்' மஞ்சள் பத்திரிகையை அவர் வசம் ஒப்படைத்து விட்டுப் பிரிவதற்கு இடம் அளித்த அதே குஷன் சோபாவில்தான் இப்போதும் அவன் உட்கார்ந்திருந்தான். ஜரிகை வேட்டிக் கரைகள் பளிச்சென்று துலங்கின டெர்லின் ஸ்லாக்கின் முதுகுப்புறம் நனைந்து விட்டிருந்தது சுற்று முற்றும் பார்வையை வலையாக்கினான் அவன் எதைத் தேடுகிறான்? அபாய அறிவிப்பின் நிறம் பூண்ட அந்தச் சிவப்பு நாட்குறிப்பைத்தான் தேடுகின்றானோ?...

ஃ ஃ ஃ

வர்ஜீனியா புகை, மணம் பரப்பிக் கொண்டேயிருந்தது!

"என்ன தேடுறீங்க, பாண்டியன்?" என்று விஷமத்தனமான குரலில் நமட்டுச் சிரிப்புடன் கேட்டாள் பரிமளம்.

"என்னைத் தேடுகிறேன், பரிமளம்! ஆமாம். என்னைத்தான் தேடுகிறேன் பரிமளா!" என்று சிந்தனை வயப்பட்ட நிலையில் விடை பகர்ந்தான் பாண்டியன்

'பரிமளா!' என்ற அந்தப் பெயர் உச்சரிப்பைக் கேட்டதும், அவள் ஏன இப்படி மெய்ம்மறந்து போய் விடுகிறாள்? '-ரியளம்' என்ற அழைப்பில் அடையாத அமைதியையும்—ஆனந்தத்தையும் பெருமிதத்தையும் அவள் இப்போது 'பரிமளா' என்னும் அழைப்பைக் கேட்டதும் அடைகிறாளே, என்ன காரணம்?...

"உங்களைத் தேடிப் பார்க்க வேணும் என்கிற சுயப் பரிசோதனை உணர்வு இப்போதாவது உங்களுக்கு வந்திச்சே? அந்த மட்டுக்கும் நல்லதுதான்!" என்று குறுக்கிட்டாள் பரிமளம்.

"என்ன சொல்றே நீ?" என்று பதட்டம் மூள வினவினான் அதிவீரராம பாண்டியன்.

"என்னோட டைரியை நான் தேடுகிறேன்!" என்று விளக்கம் கொடுத்தான்.

பரிமளத்தின் சிவந்த முகம் அடிபட்ட மதலையின் கன்னங்களை ஒப்ப கன்றியது.

"உங்க டைரி கிடந்தால் இங்குதானே கிடக்க வேணும்? நீங்க டெலிபோன் செஞ்சவுடனே நான் தேடிப் பார்த்துட்டேன். உங்களுக்கு ஆயிரம் பணி, ஆயிரம் இடம்! வேறு எங்காவது மறந்துவிட்டிருக்க லாம்" என்றாள்.

அவள் பேசிய பேச்சில் இருந்த 'பொடி'யை கதை பண்ணும் பாண்டியனா அறிய மாட்டான்? தும்மினான் யதார்த்தமான தும்மல். ஏனென்றால் பரிமளம் வீசியது மூக்குப் பொடி அல்லவே!

"மிஸ்டர் வீரபாகு இங்கு வர நேரமாகுமோ?"

"ஆனாலும் ஆகலாம்! நீங்க கொடுத்திட்டுப் போனீங்களே மஞ்சள் பத்திரிகை, அதை ஒருவேளை அலசி அலசிப் படிச்சிட்டிருக்காங்களோ என்னவோ!'

அவள் பேச்சு இயல்பாக அமையவில்லை என்ற ரகசியமும் அவனுக்குப் புரிந்தது.

"பொழுது போகவில்லையானால் இதோ ரஷ்யக் கதைப் புத்தகம் ஸ்வாரஸ்யமாக இருக்கு. மறுபடியும் ஒரு ரவுண்ட் படியுங்களேன்! உபயோகப்படக்கூ—" என்று உபாயம் கூறி, அந்தப் புத்தகத்தையும் அவனிடம் நீட்டினாள் பரிமளம்.

புத்தகத்தை வாங்கும்போது பாண்டியனின் கைகள் நடுங்கின. அந்த நடுக்கத்தில் அவளுடைய பூவிரல்களை கொஞ்சம் கெட்டியாகவே அவன் பற்றி விட்டான்.

"மிஸ்டர் பாண்டியன்!" என்று வீரிட்டாள் குமாரி பரிமளம்.

"தீ சுடும்! நான் அறிவேன் பரிமளா!" என்று மயக்க நிலையில் சுழல்பவன் மாதிரி சொல்லிக் கொண்டே அவளுடைய இன்ப ஸ்பரிசத்துக்கு இலக்கான தன்னுடைய கை விரல்களை முத்தமிட்டான் சிறு கதை மன்னன் அதிவீரராமபாண்டியன்! முத்தமிட்ட இதழ்களிலே எச்சில்!

"பாண்டியன் நீங்க சுய உணர்வோடுதானே வந்திருக்கீங்க?" என்று பவ்யமான குரல் காட்டி, பரிவு மிக்க பார்வையைக் கூட்டிக் கேட்டாள் குமாரி பரிமளம். அவனை அவள் நெருங்கினாள்.

அவன் மூச்சு அவள்மீது பட்டது.

என்ன வாடை அது?

துடித்தாள் பரிமளம்! 'எஸ்...நோ டவுட்!... பாண்டியன் குடித்து விட்டுத்தான் வந்திருக்கிறார்! ஐயோ பாவம்!...என் அன்பைத் துண்டித்துக் கொள்ளாத வகையில் பாண்டியனுக்கு நானே விதியாக—கட்டளையாக—காப்பாக இருந்தேன். இப்போதும்... அவருக்கென்ன? மலையாளத்து அம்முக்குட்டி, கறுப்புத் திராட்சையழகி தேவமனோஹரி......இன்னும் யார் யாரோ இருப்பார்கள்!'...நினைவுகள் பூச்சரம் தொடுத்தன.

அவளது குழற்கற்றையினின்றும் சிதறிய மல்லி கைப்பூ ஒன்றைப் பாண்டியன் குனிந்து எடுத்தான். நிமிர்ந்தான் அவனையே இமை பரவாமல் பார்த்து நின்ற பரிமளத்தின் மார்பகத்தில் அவனுடைய தலை இடித்தது.

"ஓ...ஐ...ஆம் ஸாரி!" என்று மன்னிப்புக் கோரிச் சிரித்தான். தன்னுடைய ஜரிகைக் கரை வேட்டியின் முனையோடு பரிமளத்தின் டெரின் புடவையின் கீழ் முனைப் பகுதி உரசிக் கிடந்ததையும் அவன் கண்டு கொண்டான். பிறகு, அவளை விழுங்குபவனைப்போல ஏதோ ஒரு புது வெறியுடன் பார்த்தான் பாண்டியன்.

பரிமளம் ஒதுங்கி நின்றாள். பாண்டியனின் விழிகளை ஊடுருவினாள். கண் இமைகள் பட்டுப் பூச்சி களாகத் துடிக்கத் தொடங்கின.

"பாண்டியன்! நீங்க குடிச்சிட்டு வந்திருக்கீங்க! எஸ்...ஐ ஆம ஷுரக்ட்! இல்லீங்களா?" என்று உக்கிரத் தோடு நிர்த்தாட்சண்யமான குரலில் கேட்டாள் பரிமளம்.

"நானும் உன்னுடைய அன்புக்குரிய வீரபாகு மாதிரி குடித்து விட்டுத்தான் வந்திருக்கிறேன்! ..நான் குடித்ததற்குச் சாட்சி இல்லை! ஆனால் உன்னுடைய வீரபாகு குடித்ததற்கு தேவமனோஹரி சாட்சியிருக் கிறாள்!...புதிராக இருக்கிறதா பரிமளம்?...வாழ்க்கை யையும் காதலையும் விதியையும் மட்டுமே புதிர் என் கிறார்கள். அந்தப் பட்டியலில் பெண்ணையும் சேர்ப் பாாகள் கதாசிரியர்கள்! ஆனால் நான் வீரபாகுவுக்குத் தான் புதிர்ப் பட்டியலுக்குத் தலைமைப் பதவி கொடுப் பேன! பாவம், உன் நேசத்துக்கு உகந்த வீரபாகுவை இப்படி ஏசுவதைக் கண்டு நீ என் பேரில ஆத்திரப்படு வாய்!...பாவம!"

பரிமளம் பெண்தானா?

இல்லை, காளியா?

தில்லைச் சிவனோடு போட்டியிட்டு அம்பலக் கூத்தில் ஆடினாளே காளி, அவளா இந்தப் பரிமளம்?

தென்றல், புயலாக உருவெடுக்க ஒரு கணப் பொழுது போதாதா?

"பாண்டியன்! நீங்கள் மிருகம்! புனிதமான எழுத்துத் தொழிலை மேல் பூச்சுக்கு வைத்துக்கொண்டு பாவ நாடகம் ஆடும் சமுதாய விரோதி நீங்கள். என்னோடுதான் இத்தனை நாட்களாக விளையாடினீர்கள்! இப்போது, என் அப்பா வீரபாகுவோடும் விளையாட ஆரம்பிச்சிட்டீங்க! தந்தைக்கும் மகளுக்கும் உள்ள உறவு முறையை அறியாத பாவி நீங்கள்! உங்களை இனியும் சும்மா விடமாட்டேன்!...பாவிகளை ரட்சிக்க இயேசு பிரான் இந்தப் பாழாய்ப் போன மண்ணுக்கும் வருவாராம்!...ஆனால், இப்போது உங்களை ரட்சிக்க யார் வருகிறார்கள் என்று நான் பார்த்திடுறேன்" என்று ஓங்காரக் காளியாக முழங்கிய பரிமளம், மெய் விதிர்த்து நின்ற அதிவீரராம பாண்டியனின் அழகுக் கன்னங்களிலே மாறி மாறி அறையத் தலைப் பட்டாள்!

# 20 மனிதர்கள் விளையாடுகிறார்கள்

ஆம்; புயலாக உருமாற, தென்றலுக்கு ஒரு கணப் பொழுது போதும்!

ஓங்காரக் காளியாக உருக் கொண்ட பரிமளம், பழி வெறி முழங்கச் சூள் உரைத்த வண்ணம் அதிவீரராம பாண்டியனின் அழகுக் கன்னங்களிலே மாறி மாறி அறைந்தாள்.

புயல் சூறாவளியாகச் சீற ஓர் இமைப் பொழுது போதாதா?

போதும்...போதும்!

அவனுடைய கன்னங்களில் விழுந்த அறைகள் அவனைச் சிலையாக்கி விட்டன. தாழ்ந்திருந்த தலையை மீண்டும் உயர்த்தினான். உயர்ந்து விட முயன்ற மனம் தாழ்ந்தது. விளைந்த புயலில் சூறுவளி விளைந்தது. நெஞ்சைத் தடவி விட்டுக் கொண்டான் அவன்.

அப்படியென்றால் அவன் கன்னங்களிலே அறை விழவில்லையா?

பிரமை பிடித்தாற் போன்று வீற்றிருந்தான் பாண்டியன். அறைகளை ஏந்திய கன்னங்களைத் தடவி விட்டுக் கொள்ளவில்லை. அவன் நெஞ்சைத்தான் தடவி விட்டான். வலி ஆறவில்லை; அடங்கவில்லை.

நெஞ்சம் துடித்தது.

நெஞ்சத்தின் நெஞ்சம் துவண்டது.

மனச்சாட்சி பதைத்தது.

தன்மானம் சிலிர்த்தது.

அதிவீரராம பாண்டியனைத்தான் பரிமளம் அறைந்தாள்.

ஆனால் துடித்துத் துவண்டவனோ சிறு கதை மன்னன் அதிவீரராம பாண்டியன்!

சுவர்க் கடிகாரத்தின் இதயத் துடிப்பு நுட்பமான உணர்வின் அலைகளை அஞ்சல் செய்து கொண்டிருந்தது

அவன் இப்போதுதான் தன்னுடைய விழிகளை உயர்த்தி விட்டான். ஏற்கனவே சிவந்திருந்த விழிகள் மேலும் சிவந்து விட்டன. அவனது பார்வையில் பரிமளம் படவில்லை!—பொழுது போவதற்காக அவனிடம் கொடுத்த ஹாஸ்யக் கதைத் தொகுதிதான் தென்பட்டது. எரிச்சலுடன் கண்களைத் திருப்பினான்.

அதோ, பரிமளம்!...

"பரிமளா!..." என்று ஓங்காரக் குரலெடுத்து மூர்த்தண்யமான பாவனையில் அலட்டினான் பாண்டியன்.

பரிமளம் சடக்'கென்று திரும்பிப் பார்த்தாள். மகுடிக்குக் கட்டுப்பட்ட நல்ல பாம்பாகத் திரும்பிப் பார்த்தாள் அவள். 'பரிமளா' என்ற அந்தச் சொல் அவளது கன்னி மனத்தில் ஏதேதோ நினைவலைகளைத் தோற்றுவித்திருக்க வேண்டும் போலும்! 'பரிமளா!'— அவளே தன் பெயரைத் தனக்குத்தானே ஒருமுறை உச்சரித்துக் கொண்டாள். அவளது சந்திரபிம்ப வதனத்தில் முற்றுகை இட்டிருந்த கோபமும், ஆத்திரமும் சிறுகச் சிறுக மாறத் தொடங்கின.

புயல், தென்றலாகவும் மாறி விடுமோ?

பாண்டியனைக் குறி வைத்து நடந்தாள் அவள். அன்னப் பேடையென நடந்தாள். நிமிர்ந்த நன்னடையும் நேர் கொண்ட பார்வையும் துலங்க நடந்தாள்.

அப்போது புயல் சூறாவளியாக மாறிவிட்டிருந்தது.

"பரிமளம்!" என்று அலறினான் சிறுகதை மன்னன்.

"பரிமளம்!"—இந்தப் பெயர் உச்சரிப்பு அவளது உந்திக்கமலத்தில் மரண அடியாக விழுந்திருக்க வேண்டும்! துடித்தாள்; துவண்டாள்.

அவனை அறைந்தாளே அந்த அறையை விடவா, இப்போது அவள் மனத்தில் விழுந்து விட்ட அடி அவ்வளவு வலியை உண்டாக்கி விட்டது! மகுடியின் நாதம் அடங்கியதும், நல்லபாம்பு படமெடுக்குமே அப்படி பரிமளம் ஆனாள். பரிமளமாம்!...பரிமளம்! அவள் பற்களைக் கடித்துக் கொண்டாள்.

"நீதான் அசல் தமிழச்சி!" என்றான் அவன். வரவழைக்கப்பட்ட பொய்ச் சிரிப்பு—போலிச் சிரிப்பு கூட அவனை வஞ்சித்து விட்டது.

அவள் மௌனம் காத்து நின்றாள்! மோகினிச் சிலையாக நின்றாள். சிலையில் உணர்ச்சிகள் விளையாடுமா, என்ன?

"பரிமளம்! இன்னும் ஒரு ரவுண்ட் வேண்டுமானாலும் அறை! நான் ரெடி!" என்றான் பாண்டியன். ஆசையும் பாசமும் கொண்ட—சபலமும் சலனமும் பூண்ட—குறையும் நிறையும் பெற்ற பாண்டியனே தான் இவ்வாறு பேசினான்.

சிலை பேசத் தொடங்கியது, குவளைக் கண்கள் துடித்தன. "உங்கள் வாய் மறுபடியும் நீண்டால் என் கைகளும் மறுபடியும் நீண்டுவிடும்!..." என்று எச்சரித்தாள் குமாரி பரிமளம். கோல விழிகள் நெற்றிமேட்டில் ஏறி இறங்கின. குங்குமமும் திருநீறும் ஒன்றோடொன்று கலந்து விளங்கிய பிறை நுதலில் சுருக்கங்கள் இறங்கி ஏறின. அவள் பார்வை அவனைச் சுட்டெரித்துச் சாம்பலாக்கி விடத் துடித்தன!

அருள் சுரக்கும் தெய்வப் பெண்ணா? அழகு சுரக்கும் மானிடப் பெண்ணா? என்று விளங்காமல்—விளங்க வைக்காமல் பாண்டியனைத் தவிக்க வைத்துக் கொண்டிருந்த பரிமளம்தானா இவள்?—குமாரி பரிமளம் தானா இவள்?

பேசும் விழிகள் எங்கே?

பேச வைக்கும் இதழ்கள் எங்கே?

அழகுக் கவர்ச்சி பொலிந்த அந்தத் திருஷ்டி மச்சத்தின் அற்புதப் பொலிவு எங்கே?

அழகின் தத்துவ மெய்ப்பொருள் இங்கேதான் பிறக்கிறது என்று சொல்லாமல் சொன்ன அந்த ரோஜாப்பூக் கன்னங்கள் எங்கே?

எதையோ பறிகொடுத்து விட்ட தவிப்புடன்—தாபத்துடன் சிலையாக நின்று கொண்டிருந்தாள் குமாரி பரிமளம்!—எதையோ மீட்டுக் கொள்ளத்

துடிக்கும் தாகத்தோடு—ஏக்கத்தோடு நின்று கொண்டேயிருந்தாள் பரிமளம்!

பழி வெறியும், ஆத்திரவெறியும் ஒன்றையொன்று அணைய அவள் தோன்றினாள்! மாரகச் சேலையின் வலதுபுறப் பகுதி சற்றே நெகிழ்ந்து அழகுக் கவர்ச்சியை விளைத்த நிலையில், தன் நினைவு இன்றித் தோன்றினாள் அவள்!

அவளையே மோகக் கிளர்ச்சி முழங்க வெறித்துப் பார்த்தான் அதிவீரராம பாண்டியன்! முகத்தை தன்னுடைய இரு கைகளாலும் துடைத்துக் கொண்டு அவளை மீண்டும் பார்த்தான். அவன் உதடுகள் மட்டும் துடிக்கவில்லை; இள மீசையும் பட படத்துத் துடித்தது. நல்லவேளை இப்போதாகிலும் அந்த அழகிய ஆண்மை மிக்க மீசை துடித்ததே? "ஓஹோ! அப்படியென்றால் நீ...?" சொல்ல நினைத்ததைச் சொல்லாமல் அப்படியே வாயடைத்து நின்றான் அவன்.

இப்போது பாண்டியனை மேலும் நெருங்கலானாள் பரிமளம். "ஊம்!...சொல்லுங்கள் சொல்ல நினைத்ததைச் சொல்லுங்கள். நீங்கள் புரட்சி எழுத்தாளரல்லவா?—தைரியமாகச் சொல்லுங்கள்!' என்று ஓலம் பரப்பினாள் அவள்.

கண்மூடிக் கண் திறக்கும் நேரம் வரை பாண்டியன் எதையோ சிந்தித்திருக்க வேண்டும். நெற்றியில் புரண்ட சுருட்டை முடிகளைக் கோதிவிட்டவனாக அவன் தலையை நிமிர்த்தினான் "என்னுடைய சிவப்பு டைரி எங்கே?"—சட்டைப் பையிலிருந்த சிகரெட்டுப் பெட்டியை எடுத்தான். புகை பரவியது.

அணைந்து விட்ட தீ அப்போது அவர்கள் இருவரது கண்களிலும் மாறிமாறி எரியத் தலைப்பட்டது!

"அப்படியென்றால்...நீ......பதிவிரதை என்று சொல்லிக் கொள்கிறாயா?" என்று ஆத்திர உணர்வு சுழிக்க பழிக்குப் பழி வாங்கத் துடித்திட்ட கோபம் கொந்தளிக்கக் கேட்டான் பாண்டியன்.

அவ்வளவு தான்!

மறுகணம், குமாரி பரிமளத்தின் கண்களில் கண்ணீர், கரைபுரளத் தொடங்கி விட்டது! "அட பாவி!" என்று அலறினள் அவள். "தெய்வமே நீ எங்கே இருக்கிருப?" என்று பைத்தியம் பிடித்தவளைப் போலக் கேட்டுக் கொண்டு மண்டையில் அடித்துக் கொண்டு கேவிக் கேவி அழுதாள் அவள். தரைமீன் துடிக்குமே அப்படித் துடித்தாள் அவள். சுடர் விளக்கு தவிக்குமே அப்படித் தவித்தாள் அவள். அனல் மெழுகு உருகுமே, அப்படி உருகினள் அவள்! அவளது பூங்கரங்கள் மறுபடியும் அதிவீரராம பாண்டியனைக் குறிவைக்கத் துடித்தன!

அப்போது;

"பரிமளம்! அம்மா பரிமளம்! காயே பரிமளம்!" என்ற கூக்குரல்கள் அப்போது நிலவிக் கிடந்த மயான அமைதியைத் துண்டாடின.

திரும்பினள் பரிமளம்.

"அப்பா!"

மங்களத்தின் கைப்பிடிப்பினின்றும் திமிறிக் கொண்டு வந்தார் தொழிலதிபர் வீரபாகு.

தொடர்ந்தாள் மங்களம். அவள் கரங்களில் 'சினிமா நேசன்' இருந்தது. 'தொழிலதிபர் வீரபாகு—அழுதை அழகி குமாரி பரிமளம் காதல் லீலைகள்!" என்ற வாசகங்கள் பளிச்சிட்டன. பரிமளத்தின் புகைப் படமும் காட்சி தந்தது

பின்பற்றி வந்தாள் பங்கஜம்.

"மிஸ்டர் பாண்டியன்!" என்று வீரிட்டலறினர் வீரபாகு அவருடைய கண்கள் சிறு பொழுதுக்குள் மீண்டும செந்நிறம் காட்டத் தொடங்கி விட்டன.

அகம்பாவ உணர்வு கண்களில் மிதிக்க, நெற்றித் திட்டில் சிந்தனைக் கோடுகள் சுழிக்க அமர்த்தலாக

தலையை நிமிர்த்தினன் அதிவீரராமபாண்டியன். அவன் தன்னுடைய கன்னங்களைத் தடவிவிட்டுக் கொண்டான். பரிமளம் கொடுத்த 'அன்புப் பரிசில்' இப்போது தான் உணர்வு காட்டியதோ, என்னவோ? அவன் வீரபாகுவை ஊடுருவி நோக்கினன். "சொல்லுங்க" என்ருன.

"இப்போது சொல்ல வேண்டியது நான் அல்ல. நீங்கதான் சொல்ல வேணும்!"

"என்ன சொல்ல வேணும்?"

"நீங்க மிருகமா? மிருகமேதானு? இந்தக் கேள்விக்கு நீங்கள்தான் பதில் சொல்லணும்!"

பாண்டியன் இதைக் கேட்டதும் தலைக்கனத்தோடு அட்டகாசமாகச் சிரிக்கலானன்.

"உங்க கேள்விக்கு உங்க பரிமளம்தான் பதில் சொல்லணும்!" என்ருன். இப்படிச் சொல்லிவிட்டு, திரும்பவும் அதே அருபாசச் சிரிப்பை உமிழ்ந்தான். விழுங்கிய நெருப்புத் துண்டை மீண்டும் கீழே உமிழுமாம் நெருப்புக் கோழி. அப்படிப்பட்ட நிலையில் உமிழ்ந்த சிரிப்பு அது!

"என் பரிமளம்—ஆமாம், என்னுடைய பரிமளம் ஒன்றும் பதில் சொல்ல வேண்டியதில்லே! நானே சொல்லடுறேன்!"

"பேஷாகச் சொல்லுங்கோ!"

"நீங்கள் மிருகம் மட்டுமல்ல; கோழை, கோழையிலும் பயங்கரக் கோழை! ஷேம்!...வெட்கம!"

மீண்டும் அதே அமர்த்தல் சிரிப்பு சிறுகதை ஆசிரியனிடமிருந்து புறப்பட்டது

குமாரி பரிமளத்துக்குக் கதாசிரியன் மீதிருந்த ஆத்திரம், கோபம், சடனை எதுவும இன்னமும் குறையவில்லைதான்.

சிகரெட் புகையை வெறியுடன் உறிஞ்சி வெளி யிட்டான் பாண்டியன்.

கேட்பாரற்றுக் கிடந்த பாண்டியனின் சிகரெட்டுப் பெட்டியை காலால் எற்றி விட்டுவிட்டு அவனை மேலும் நெருங்கி வந்தார் தொழில் பிரமுகர் வீரபாகு.

இப்போது, பரிமளம் உடுத்தியிருந்த புடவையின் கீழ்முனைப் பகுதி பாண்டியனின் ஜரிகை வேட்டியோடு உரசிக் கொண்டிருக்கவில்லை.

எதிர்பாராத ஒன்று மீண்டும் நடக்கப் போகிறதோ என்று சந்தேகப்பட்ட பாண்டியன் எதற்கும் தயாரான நிலைக்குத் தன்னை ஆட்படுத்திக்கொண்டான். ஆத்திரம் பொங்க வந்து நின்ற வீரபாகுவின் முகத்தோற்றம் அவனை விழிப்படையச் செய்தது. இடுப்பு வேட்டியை எச்சரிக்கையுடன் அழுத்தமாகச் செருகினன்.

"பாண்டியன்! என் மகள் பரிமளத்தை சந்தேகம் கொள்ள, அவள் கற்பின் மீது ஐயப்பாடு வைக்க—அவளைப் பதிவிரதையா இல்லையா என்று கேள்வி தொடுக்கச் செய்தது நீங்க கொடுத்துச் சென்ற இந்த மஞ்சள் பத்திரிகைதானே?..." என்று இரைச்சல் போட்டுக் கேட்டுக் கொண்டே, மங்களம் பற்றின்றிப் பற்றி நின்ற அந்த மஞ்சள் பத்திரிகையைப் பிடுங்கி அதை அவன் முகத்தில் விசிறியடித்தார் வீரபாகு.

சிறுத்தைக்கு ஒரு விசித்திரமான குணம் உண் டாம். சில தருணங்களில் அதையும் மீறிய விதத்திலே அது தன்னுடைய ஆத்திரத்தை வேண்டுமென்றே அடக்கிக் கொள்ளுமாம். ஆனால் சில வேளைகளில், அது விரும்பியபடியே தன்னுடைய கோபத்தை வெளிக்காட்டி விடுமாம்.

முகத்தில் உராய்ந்து விழுந்த மஞ்சள் பத்திரி கையை ஒருமுறைப் பார்த்துவிட்டு, அதே பார்வையால் தொழிலதிபர் வீரபாகுவையும் குமாரி பரிமளத்தையும் அளந்தான். மறு இமைப்பில், "நான் புலி, சிறுத்தைப் புலி. புலியைப் பற்றி உங்களுக்குத் புரியாதது

மாதிரியேதான் என்னைப் பற்றியும் உங்களுக்குத் தெரிந்திருக்க முடியாது!' என்று பெருங் குரலெடுத்து அமர்க்களமாக 'வசனம்' பேசினான் பாண்டியன்.

மொட்டினுள்ளே ஊடாடி நிற்கும் சுகந்தமாக நின்றாள் பரிமளம்.

"வேறென்ன வேண்டும் உன்னைத் தவிர?" என்ற பாடல் ஒலி தேய்ந்து ஒலித்ததைக் கேட்டாள்.

"ஆமாம், நீங்க சிறுத்தைதான்! அதனால்தான் நான் முன்னடியே சொல்லிட்டேன். நீங்க மிருகம்னு!" என்று தம் பங்குக்கும் சேர்த்து, ஓர் அட்டகாசச் சிரிப்பைக் கொட்டினார் தொழிலதிபர். "சிறுத்தை கொண்ட பிடியை விடாது! பார்க்கிறீங்களா?" என்று உக்கிரத்தோடு வினவியவனாக, வீரபாகுவின் முண்டா பனியனை வாரிப் பிடித்து இழுத்தான் பாண்டியன்.

அவ்வளவுதான்!

வீரபாகு தன்னை ஒரு விநாடிக்குள் விடுவித்துக் கொண்டார். "மிஸ்டர் பாண்டியன்! சிங்கத்தின் குகைக்குள் நுழைந்து விட்டு, சிறுநரி வாலை ஆட்டிச்சாம்! அந்த மாதிரிக் கதையாகத்தான் இருக்கு உங்க தைரியம்! பரிமளம் உங்க கன்னங்களைப் பழுக்க வைத்தாளே. அப்போது எங்கே போயிற்று உங்க ஆண்மை, வீரம், தன்மானம், சுய கௌரவம் எல்லாம்? சே...!" என்று எரிச்சலுடன் கேட்டார் அவர். அவனைச் சொற்களால் சாடினார். "பாண்டியன்! நான் என்னென்னவோ கனவுக் கோட்டைகள் கட்டினேனா. என் பரிமளத்தை உங்களிடம் ஒப்படைத்து விடலாம்னு நினைச்சிருந்தேன். எல்லாவற்றையும் மண்ணோடு மண்ணாக்கிட்டீங்களே!" என்று நெஞ்சம் நெக்குருக சிறு பாலகன் மாதிரி விம்மத் தொடங்கினார் வீரபாகு.

"அப்பா!" என்று அழைத்துக் கொண்டே வீரபாகுவை அண்டினாள் குமாரி பரிமளம். அழகிய இளம் மார்பகத்தில் தவழ்ந்த பதக்கம் ஊசலாடியது.

மங்களத்தின் நெஞ்சைத் துயரம் அடைத்தது.

பங்கஜம் செயலிழந்து நின்றாள்.

பாண்டியன் கண்களைத் திருப்பினான். பரிமளத்தையும் வீரபாகுவையும் ஏளனமாகப் பார்த்தான். "அப்பா!—வேடிக்கையான பாச உறவுதான்!" என்று அவனையும் மீறிய வெறுப்புணர்வோடு அவன் கேலியாகச் சிரித்தான்.

தூண்டப்பட்ட பூநாகமானார் வீரபாகு. "ராஸ்கல், அப்படின்னா நீயும் சினிமா கேசன் பேச்சை நம்பிட்டியா?" என்று கோபாவேசத்தோடு கேட்டார்.

"உண்மையை நம்பாமல் வேறென்ன செய்வதாம்?" நிர்த்தாட்சண்யமான தொனியில், மனிதாபிமானம் இழந்த சிரிப்போடு எதிர்க்கேள்வி கேட்டான் பாண்டியன்.

"அப்பா! இப்படியொரு அபவாதத்தைக் கிளப்பிவிட மூலகாரணமானவரே இந்தப் புண்ணியவான் தான்! இந்த மஞ்சள் பத்திரிகையிலே அச்சாகயிருக்கிற என்னோட படத்தை இவரேதான் சினிமா நேசனுக்கு பங்களூருக்கு அனுப்பிச்சிருக்கிறார்! நான் இவர்கிட்டே ஒரு சமயம் கொடுத்த என் போட்டோதான் இப்போ இந்த மஞ்சள் பத்திரிகையிலேயும் பப்ளிஷ் ஆகியிருக்குதுங்க!" என்று தாழ்குரலில் தெரிவித்தாள் பரிமளம் காது வளையங்களிலிருந்த நட்சத்திரப் பூக்கள் மின்னின.

"விதி விளையாடவில்லை அப்பா. மனிதர்கள்தான் விளையாடுகிறார்கள்!" என்றாள்.

"அட துரோகி! இனியும் உன்னைச் சும்மா விட்டு வைக்கக் கூடாது! அது சமூகத் துரோகம்!" என்று வீறு கொண்டு முழங்கினார் தொழிலதிபர் வீரபாகு. மறுகணம் அவரது எலும்பிக்க கைகளிலே 'ரிவால்வர்' ஒன்று விதியாக—வினையாகக் காட்சியளித்தது...!

# 21. தங்க ரதம்

அறிவு பூர்வமான அனுபவமும் அனுபவ பூர்வமான திறனும் கை வரப் பெற்ற திரைப்பட இயக்குநர் அந்தக் காட்சியை உச்சநிலைக்கட்டத்தைச் சித்திரித்துக் காட்டவேண்டும்!

கற்பனை செய்து பாருங்கள்!

கட்டுக்கடங்காமல் சீறிப்புரண்ட வெஞ்சினத்தைத் தன்னுடைய அழகான வெண்முத்துப் பற்களிடையே அடக்கி வைத்துக் கொண்டு நிற்கிறாள் குமாரி பரிமளம்

தொழிலதிபர் வீரபாகுவோ குற்றவாளியை இனம் கண்டு கொண்ட பதட்டத்தோடு, குற்றத்துக்கு உரிய தண்டனையைக் கையும் மெய்யுமாகக் கொடுத்துவிடத் துடித்தவராக, துடிக்கும் கோபம் சூழ துவண்டலைந்த நெஞ்சம் சூழ துடிக்கும் ரிவால்வருடன் நிற்கிறார்

நடக்கக் கூடாத ஏதோ ஒரு பயங்கரம் நடந்து தொலைக்கப் போகிறதே என்ற தவிப்பில் தெய்வத்தையும், மாங்கல்யத்தையும் மானசீகமாகக் கை தொழுத வண்ணம் தவித்துக் கொண்டிருக்கிறாள் மங்களம்

பங்களூர்ச் சீமாட்டி பங்கஜத்தின் விழிகள் அதோ, சிலையாக மலைத்துப் போய்விட்ட சிறுகதை மன்னன் அதிவீரராம பாண்டியனின் முகத்தில் ஆரோகணித்திருக்கின்றன.

அதிவீரராம பாண்டியன் சிலையல்ல. ஆகவே அவன் சுதாரிப்புப் பெறலானான். அவன் சர்வசாதாரணமான இளைஞன் மட்டுமல்ல;—அதாவது, இளம் நெஞ்சத்துக்கே உகந்த குறையும் நிறையும் விகிதாரத்தில் வேறுபட்டு, மாறுபட்டுக் கலவை ஆகிவிட்டிருக்கும் ஒரு மனிதன் மாத்திரம் அல்ல!

அவன் ஓர் எழுத்தாளன். ''அதாவது சிறுகதை ஆசிரியன். இன்னும் சரியாகச் சொல்லவேண்டுமென்றால், அவன் சிறுகதை மன்னன் இந்தப் பட்டம் காற்றில் பறக்கும் பட்டமல்ல!—அவனுக்கு இந்தத் தர்மமிகு தமிழ்ச் சமுதாயம் ஈந்த பெருமை அது! அப்படிப்பட்ட அதிவீரராம பாண்டியனின் எழுத்தாள உள்ளம் சும்மாவா இருக்கும்?—போதும் போதாதற்கு, நாகரிகமான—கம்பீரமான—அழகான மீசையையும் வேறல்லவா வளர்த்து வைத்திருக்கிறான்! அவன் சும்மா இருக்கவில்லை. அவனைப் போலவே, அவனது மீசையும் சும்மென்று இருந்து விடவில்லை. இருக்கையை விட்டு எழுந்தான். மீசை துடித்தது; கைகளும் துடித்தன.

அந்த ஒரு கணப் பொழுது, ஓராயிரம் பேய்க் கணங்களாக உருக் கொண்டது!

சூறைக் காற்று சீறியது,

எரிமலை வெடித்தது.

பூகம்பம் வாய் பிளந்தது.

''நில் அங்கேயே!'' என்று வீரிட்டார் வீரபாகு. பாண்டியனின் இருதயத்தைக் குறி வைத்துத் திரும்பியது கைத்துப்பாக்கி.

பாண்டியன் மரணத்தைச் சாடும் அசாத்தியத் துணிவோடு சற்றே விலகி நின்றான் பிறகு நின்ற இடத்தில் நின்று கொண்டே வீரபாகுவை விழுங்கி விடுபவன் மாதிரி கூர்மையாகப் பார்த்தான்.

''நீ கோழை!'' என்று எரிச்சலுடன் கத்தினார் வீரபாகு

''நானா கோழை! பரிமளத்தின் பூவிரல்களால் என் கன்னத்திலே அறை வாங்கிக்கிட்டு சும்மா இருக்கேனே, அதுக்காகவா என்னைக் கோழை ஆக்கிட்டீங்க, மிஸ்டர் வீரபாகு? எழுத்தாளன்—உண்மையான எழுத்தாளன் கோழையாக இருந்தால், அவன்

பேனாவை எடுக்கக் கூடாது என்கிறது என் அபிப்ராயம்! உங்க ரிவால்வரை விளையாட விட்டுட்டு நான் நின்னுகிட்டு இருக்கேனே, நானா கோழை? சொல்லப் போனால், நீர்தான் கோழை! என்னைச் சுட்டுப் பொசுக்கிவிட துடிதுடித்துக் கொண்டிருந்த நீர் இன்னமும் சுடாமல் நிற்கிறீரே. நீர்தான் கோழை...!" என்று நிதானம் தடம் புரளாத தொனியில் சொற்களைக் கணை தொடுத்தான் பாண்டியன்.

"ஓ! அப்படியா? என்னையே 'ட்விஸ்ட்' செய்திட துணிஞ்சிட்டீங்களா?"

"மரியாதை வேணும். நீ என்று ஏகவசனத்திலேயே பேசுங்க மரியாதை என்கிறது, துண்டு போட்டு ரெடியாக வச்சிருக்கிற பாமபழத் துண்டு இல்லே; தொட்டதும எடுத்துச் சுவைக்கிறதுக்கு" என்று வெகு அமர்த்தலாகப் பேசினான் பாண்டியன்.

"நீங்க இப்போ வெறும் மனிதன் பாண்டியன்! அந்தச் சமுதாயத் துரோகியைத்தான் இப்போ ஷூட்' செய்யப் போகிறேன்! எழுத்தாளன் அதிவீரராம பாண்டியனை என்னால் ஒன்றும் செய்ய முடியாது."

"ஓஹோ! அப்படியா? ஒரு கொலைக்காரனுக்குக் கூட எழுத்தாளன் பேரில் இவ்வளவு பயம் இருக்கே, அந்த மட்டுக்கும் பெருமைப்படத்தான் வேணும்!"

"நான் கொலைகாரன்தான்! சந்தேகமா உனக்கு? இதோ பார்! நீ எனக்குச் சூட்டிய கொலைகாரன் பட்டத்தை உன்னைக் கொண்டே மெய்ப்பிக்கக் காட்டி விடுகிறேன்" என்று வீறு கொண்டு முழங்கினார். மறுபடியும் அவர் கண்கள் சிவக்கத் தொடங்கி விட்டன. கைப்பிடியை வசமாக அமைத்துக் கொண்டு வீரபாகு சுட முனைந்தார்.

"அப்பா!"

பரிமளம் அலறிய அந்த அலறல் ஒலி இரண்டாவதாகத்தான் கேட்டது முதல் ஒலியை எழுப்பியது தரையில் விழுந்த ரிவால்வர்தான்.

மூன்றும் தர தமிழ் சினிமாப்படம் பார்ப்பது போலவே அமைந்தது இக்காட்சி.

'நம்ம தமிழ் படத்தைப் பார்க்கிற மாதிரி இருக்கு எனக்கு" என்று விமர்சனம் செய்து கொண்டே, சுற்றிச் சூழ நின்றவர்களை ஓரக்கண் பதித்துப் பார்வையிடலானான் பாண்டியன்.

அவனுடைய பேச்சில் தலைத் தூக்கியிருந்த கிண்டலை அந்த நாலு பேருக்குப் பிரகடனப்படுத்துகிற அளவுக்கு அவன் குரல் எடுப்பாக இருந்தது

"அப்படியென்றால், இந்த நாலு பேர்தான் சமுதாயப் பிரதிநிதிகளா, இல்லை, அங்கங்களா?"

வீரபாகு எரித்துவிட முயல்பவராக அதிவீரராம பாண்டியனை ஏறிட்டு விழித்தார். அப்படியென்றால் அவர் அவனைச் சுடப்போவதில்லையா?

இந்த க்ளைமாக்ஸ் கட்டத்துக்கு ரிவால்வர் பயன் படவில்லையென்றால்—பயன் தரவில்லையென்றால், அப்புறம் வீரபாகுவின் மீது சுமத்தப்பட்டு விட்ட பழிக்கு— அபலைக் கன்னி குமாரி பரிமளா மீது ஏற்றி வைக்கப் பட்டு விட்ட பாவத்துக்கு விடிமோட்சமே கிடையாதே?

அதோ, ரிவால்வர் விதியாகவும் வினையாகவும் மாறி மாறி அவதாரம் பூண்டு தரையில் 'சிவனே' என்று கிடக்கிறதே!

தனக்கே உரித்தான அட்டகாசச் சிரிப்பை உமிழ்ந்தபடி ரிவால்வரை நோக்கி நடந்தான் அதிவீர ராம பாண்டியன்.

அவனை முந்திவிட முயற்சி செய்தார் வீரபாகு.

வென்றவன் பாண்டியன். ஆகவே அவன் மறு படியும் வெற்றிச் சிரிப்புச் சிரித்தான். மரணத்தை வென்று விட்ட சிரிப்போ அது? கையில் சுழன்ற கைத்துப்பாக்கியை லாவகமாகப் பற்றிக் கொண்டு காற்புறமும் அந்த ரிவால்வரைச் சுழல்விட்டான்

வீரபாகு சலனம் கண்ட முகத்தோடு எச்சரிக்கையுடன் நின்றார்.

குமாரி பரிமளம் இப்போதுதான் தனக்கே உரிய அந்தப் பவழச் சிரிப்பை வெளிப்படுத்தத் துணிந்திருந்தாள்.

"என்னை உங்க கையாலேயே சுட்டு விடுங்கள் மிஸ்டர் பாண்டியன்" என்று வைராக்கியம் சுழிக்க வேண்டினாள்.

"ஓ...யூ ஆர் ப்ரிப்பார்ட் டு எம்ப்ரேஸ் டெத்" என்று கேட்டான் பாண்டியன்.

"எஸ் செர்ட்டன்லி!'—தேவதை சிரித்தால் அழகு சொட்டாதா? பரிமளம் பாங்குறச் சிரித்தாள்.

"நீ மரணத்தைத் தழுவத் தயாராக இருந்தால் நான் இதோ ஒரு மகாமலைகாரனை மாறிவிட தயாராகி விடுகிறேன்" என்று சொல்லி ரிவால்வரின் குண்டுகளை இயக்கும் கைப்பிடியை பரிமளத்தின் உடலுக்கு நேரே இயக்கினான் பாண்டியன்.

"அம்மா பரிமளம்!" என்று கதறிக் கூச்சலிட்ட வண்ணம் குறுக்கே பாய்ந்தார் தொழிலதிபர் வீரபாகு.

மறுகணம் 'டுமீல்' என்ற சத்தம் அந்த வரவேற்புக் -த்தில எதிரொலித்தது.

குமாரி பரிமளம் இப்போது அதிவீரராம பாண்டியனுக்குப் போட்டியாக அட்டகாசச் சிரிப்பை உமிழத் தொடங்கினாள். அச்சிரிப்பில் புயல் சீறியது. எரிமலை கனன்றது. பூகம்பம் வெடித்தது. திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள்கூட இப்படித்தான் சிரித்திருப்பார் போலும்! தோளில் சரிந்து கிடந்த புடவைத் தலைப்பைக் கொய்து போட்டுக் கொண்டாள். சிரிப்பின் அலைகள் பரந்து விரிந்த அழகில், அந்த அழகு மச்சம் மேலும் அழகுடன் ஒளிர்ந்தது திருஷ்டி மச்சத்தில் மூக்குத்திக் கற்களின் பிரகாசம் பிரதிபலித்தது.

அப்போது காது வளையங்களின் நட்சத்திரப் பூக்களும் 'டால்' அடித்தன. மதுமலர் இணையெனத் திகழ்ந் திட்ட மார்பகம் எம்பி எம்பித் தாழ்ந்தது. ஊசலாடிக் கொண்டிருந்த கழுத்துச் சங்கிலியை மார்த்துப் பகுதி யில் நெருடி விட்டவாறு பாண்டியனை நோக்கி நடந்தாள் பரிமளம்.

'எதற்கும் தயார்!' என்ற பாவனையில் நின்றான் பாண்டியன்.

"மிஸ்டர் பாண்டியன்! நீங்க கோழை! என்னைக் கொல்லத் தைரியம் வரவில்லை உங்களுக்கு. ஒரு விநாடிக்கு முன் ஒரு கதையை முடித்திருக்கலாமே!... தவறி விட்டீர்களே? நீங்கள் பற்றியிருந்த ரிவால்வரின் குண்டிலே சொட்டும் ரத்தத் துளிகளினால் உங்களு டைய சிவப்பு டைரியிலே ஒரு சரித்திரத்தின் முடிவைக் குறித்து விட்டிருக்கலாமே!...ஐயோ!...நீங்க கோழை" என்றாள் பரிமளம்.

அடிக்கக் கைகளை ஓங்கிய தாய் அடிக்காமல் மனம் மாறியதைக் கண்டதும் குழந்தை அந்தத் தாயின் காலடியில் சுற்றிக் கிடக்கும் அல்லவா? அப்படிக் கிடந்தது அந்தக் கைத்துப்பாக்கி!

சுவர்க் கடிகாரத்தில் மணி ஏழரை ஆகியிருந்தது.

அதிவீரராம பாண்டியன் தன்னுடைய கண்களை ஷர்ட் முனையால துடைத்துக் கொண்டான்.

பரிமளம் உணர்ச்சி வசப்படலானாள். கண்கள் கசியத் தொடங்கின இப்போது, "பாண்டியன்" என்று தாழ்குரலில விளித்தாள்.

அவளை ஆதரவும் பரிவும் மேலோங்க நோக்கினான் பாண்டியன். மிதிலாபுரியில ஸ்ரீ இராம பிரானும் ஜனக குமாரி சீதையும சந்திக்கிற கட்டத்தில் 'அண்ணலும் நோக்கினான்; அவளும நோக்கினாள்!' என்று கவிச் சக்கரவர்த்தி வருணித்திருந்த கட்டம் அவனுள் கொடி மின்னலாகப் பாய்ந்தது. உள்ளம் சலனம் கண்டது.

நினைவுகள் சட்டை உரித்துச் சிலிர்த்தன. பரிணாமத் தத்துவம் மேனோதத்துவ ரீதியிலும் செல்லுபடியாகத் தக்கதொரு விளைவுதானே?

"பரிமளா!" என்று கூப்பிட்டான் கதாசிரியன் அதிவீரராம பாண்டியன்!

பரிமளம் மெய்ம் மறந்தாள். 'பரிமளா' என்ற அந்த இனிய அன்பழைப்பில் என்னதான் மாயம் இருக்குமோ? மகுடியின் நாதம் நல்ல பாம்பை மயங்க வைக்குமே, அப்படி அவள் மயங்கினாள். தலையை ஒயிலோடு திருப்பினாள். கண்கள் திரும்பின. நீர்த் திரையில் பாண்டியனின் கம்பீர முகம் பிளவு பட்டுத் தெரிந்தது. கண்களைத் துடைத்துக் கொண்டாள். அரை குறையாகத் தொங்கிய கூந்தலிலிருந்து மல்லிகைப் பூக்கள் சில உதிர்ந்தன

பூக்கள் என்றால் பாண்டியனுக்கு எப்போதுமே ஒரு மையல். அதுவும், தையலின் பூ என்றால், பூவை யின் பூ என்றால் அவனுடைய ரசிப்பு கூடி நிற்பது இயல்புதான். எடுத்தான். கொஞ்சப் பொழுதுக்கு முந்தி, அவன் இம்மாதிரி பூவை எடுக்க முனைந்து, எடுத்து, தலையை உயர்த்திய நேரத்தில், அவளுடைய மார்பில் இடித்துக் கொண்ட நிகழ்ச்சியும், அதற்குமுன் அவளது ஸ்பரிசம் பட்ட கைகளுக்கு இதழ்களால முத்தம் கொடுத்த சம்பவமும் அவனுடைய நாட்குறிப் புக்களுக்கு ஏற்றவை; ஏற்றம் தருபவை!

பூவையும் பூவின் மணத்தையும் ரசித்து அனுப வித்து மகிழும் நிலையில் இல்லாததாலோ என்னவோ, பூவுக்கு உடைய பூவையை ஏக்கம் சூழ, வேதனை சூழ ஊடுருவி நோக்கினான் அவன்.

"பரிமளா! நான் இப்போது எழுத்தாளன் பாண்டியன்! என்றென்றுமே இப்படித்தான் இருக்க விரும்புகிறேன் நான்!" என்றான்.

"ஓ!... அப்படியா?"

"ஊம்."

"அப்படியென்றால், நீங்கள் கொலைகாரனாக மாற இனிமேல் சான்ஸ் இல்லையென்று சொல்லுங்கள்."

"ஆமாம்! மிஸ்டர் வீரபாகுவையும் மறுபடி கொலைகாரராக ஆக்கவும் மாட்டேன்!"

"நீங்க தங்கமானவர்!"

"நீ தங்க ரதம் ஆயிற்றே!"

"அந்தத் தங்க ரதம் செத்து விட்டாள்!"

"பொய்!"

"பொய்யா?—பொய்யாய்—புனைக் கதையாய்—பகற்கனவாகி விட்டாளோ அந்த பரிமளம்! தெரியுமே உங்களுக்கு?"

"என் பரிமளா மரணத்தை வென்றவள்; என்னுடைய இலக்கியப் பீடத்திலே அம்பிகையாகக் கொலுவீற்றிருக்கும் பரிமளத்துக்குச் சாவில்லை; சாக்காடு இல்லை!"

"வாழ்வும் இல்லையென்று சொல்லுங்கள், மிஸ்டர் பாண்டியன்!"

"பரிமளம்!"

"ஓகோ!...நோ...நோ!...பரிமளா என்று அழையுங்கள். எனக்குப் பைத்தியம் பிடிப்பதற்குள் பரிமளா என்று கூப்பிடுங்கள். கத்தும் கடலோரத்திலே மௌனம் காத்து மோகனம் தந்து, மோகக் கவர்ச்சியுடன் பொலிந்த நிலவுக் காலத்திலே, 'பரிமளா, பரிமளா' என்று வாய் ஓயாமல், மனமும் ஓயாமல் அன்பு காட்டி, அதரவு காட்டி, பரிவு சேர்த்து, பாசம் சேர்த்து நேசத்தின் ஒருருவாய் என்னை அழைப்பீர்களே, அந்த மன நிலையில்—அந்த மன லயிப்பில் நீங்கள் என்னை இப்போது அழைக்கத் துணியா விட்டாலும், 'பரிமளா' என்று மட்டும் கூப்பிடுங்கள், போதும்! பழைய கனவின் மயக்கத்தில் நான் பைத்தியம் பிடிக்காமல் தப்பி விட முயல்வேன்!"

வேதனையின் நெட்டுயிர்ப்பு சிலிர்க்கக் கெஞ்சினாள் குமாரி பரிமளம்.

"பரிமளா!"

"ஆஹா!...பாவியான எனக்கும்கூட பாக்கியம் என்ற ஒரு பேறு வாய்த்திருக்கிறதே!...மிஸ்டர் பாண்டியன்! இந்தப் புகைப் படத்தைப் பாருங்கள்" என்று சொல்லி, தன் வசம் இருந்த தன்னுடைய அழகான நிழற்படத்தைப் பாண்டியனிடம் நீட்டினாள் பரிமளம்.

பாண்டியன் குறுஞ் சிரிப்புத் தவழ, அவள் படத்தைக் கூர்ந்து நோக்கினான்.

பரிமளத்தையும் பாண்டியனையும் பார்க்கத் தலையைச் சாய்த்தார் வீரபாகு. தரையில் கிடந்த ரிவால்வர் மீது அவரது பார்வை ஊர்ந்த நேரத்தில் அவருக்கு அழுவதா, சிரிப்பதா என்ற சந்தேகம் மூளத் தொடங்கியது. பரிமளம்—பாண்டியன் சூழலில் நிலவியிருந்த புயல் மாறத் தொடங்கியிருப்பதாக அவர் தன் மனத்துக்குள்ளே ஒரு முடிவைக் கற்பித்துக் கொண்டு, அந்த மனநிலையுடன் அவர்கள் இருவரையும் அளந்தார். 'அப்பாவிப் பெண்! நான் நிஜமாகவே பாண்டியனைச் சுட்டுக் கொன்னுடுவேன்னு நினைச்சிருக்கும்!' என்ற எண்ணம் ஓடியது. மறுகணம் அவன் பார்த்துக் கொண்டிருந்த படத்தைப் பார்த்ததும், அவருள் நீறுபூத்த நெருப்பாக அடங்கியிருந்த ஆத்திரம் விசுவரூபம் எடுத்தது. 'சினிமா நேசன் மஞ்சள் பத்திரிகையில் பப்ளிஷ் ஆன இந்த அபவாதச் செய்திக்கெல்லாம் இந்தப் பாவிதான் காரணமா? சே! நீதிக்குத் தூண்டுதலாக இருக்க வேண்டிய எழுத்தாளன் அப்பட்டமான பொய்க்கு—பாவத்துக்கு பழிக்கு ஒரு உருவம் கொடுத்திருக்கிறானே!...சே!'

மங்களமும் பங்கஜமும் ஓரிடத்தில் அமரலானார்கள். மங்களத்தின் கையில் 'சினிமா நேசன்' புறம் மாற்றிக் காணப்பட்டது. பங்கஜம் எதிர்ப்புறத்தில் சிந்தை செலுத்தியிருந்தாள்.

விலக்கப்பட்ட பந்தங்கள் இணைந்து கொள்ளத் துடிப்பது போன்ற ஒரு விசித்திரமான சூழ்நிலை அப்போது உருவாகிக் கொண்டிருந்தது.

பேரழகி குமாரி பரிமளமும் சிறுகதை மன்னன் அதிவீரராமபாண்டியனும் ஒருவரையொருவர் ஆழ்ந்த முறையில் ஊடுருவிப் பார்த்தார்கள்; மௌனமே மொழியாக—பேசாத பாஷையாக இயக்கியும், இயங்கியும் கண்ணாமூச்சி விளையாடிக் கொண்டிருந்தது.

வீரபாகு சற்றே நடந்து தன்னுடைய அன்பு மனையாளிடமிருந்து அந்த மஞ்சள் பத்திரிகையை வாங்கித் தலைப்புப் பகுதியை மீண்டும் புரட்டினார். 'பழி' விளையாகவும் விதியாகவும மாறி, கபடச் சிரிப்பைக் கக்கியது. அவர் நிலை குலைந்தார்.

பரிமளத்துக்கு தன் அலுவலகத்தின் தோழிமார்களின் ஞாபகம வந்தது, "பரிமளா! ஆயிரத்தில் ஒருத்தியாக நீ பேரழகு பெற்றிருக்கிறாய். அத்தோடு இலக்கிய ஆர்வம் கொண்டிருக்கிறாய் நீ. உன் மனத்துக்கு இசைந்த வண்ணம், இலக்கியவாதியான ஒரு சிறந்த கதாசிரியரே உனக்குக் கிடைக்கப் போகிறார்!... நீ பாக்கியவதி!" இந்த ஒரே நல்வாக்கை—அமுதவாக்கை அருபிர்த் தோழிகளான காமாட்சி, லட்சுமி, கங்கா, ரோஸி, ராணி, சாந்தமதி ஆகியோர் திரும்பத் திரும்பத் தெரிவித்த நிகழ்ச்சிகளை எண்ணமிட்டாள். அந்த வாக்கு பலிக்குமா? ஏக்கம் பரவ அவனை நோக்கினாள்.

பாண்டியன் என்னவோ சொல்லத் துடித்தான்.

அப்போது, தொலைபேசி அழைத்தது.

வீரபாகு பேசினார்; "ஓ! ஊர்வசியா?...ஊம்... ஆகட்டும்!...சரி!"

அடுத்த அழைப்பும் அவருக்குத்தான். "இதோ புறப்படுகிறேன் குருக்கள் ஐயாகிட்டே சொல்லிடுங்கோ. பரிமளம் இங்கேதான் இருக்கு. ஆமாம்,

கன்னத்திலே மச்சம் இருக்கே எங்க பரிமளத்துக்கு அப்படியா? அழைச்சிட்டு வர்ரேன்!'' என்றார் அவர்.

“பரிமளம்!'' என்றான் பாண்டியன் “பரிமளம், சினிமா நேசன் மஞ்சள் பத்திரிகைக்கு நான் உன்னுடை போட்டோவை அனுப்பவில்லை, பரிமளம்! இது சத்தியம்!'' என்று உணர்ச்சி வசப்பட்டுக் கூறினேன். ‘சமுதாயத்தை வாழவைப்பதில் எழுத்தாளனுக்கும் முதல் கடமை உண்டு என்று என்னுடைய நண்பர் ‘பூவை' அடிக்கடி சொல்லுவார். நான் அந்த வாக்கை மறப்பேனா?'' என்று தொடர்ந்தான் சிறுகதை மன்னன்.

“அப்படியா?'' என்று அதிசயம் பொங்கக் கேட்ட படி அம்பிகைச் சிலையாகக் காட்சியளித்தாள் குமாரி பரிமளம்!...

# 22. பூ வண்டு

அம்பிகையே சிலையாகவும், சிலையே அம்பிகையாகவும் உருமாறிக் கொண்டிருந்த அதிசயக் காட்சியைத் தோற்றுவித்த வண்ணம் இருந்தாள் குமாரி பரிமளம்.

அந்தக் கண் கொள்ளாக் காட்சியை அனுபவிக்கத் தவறிவிடவில்லை, அதிவீரராம பாண்டியன். கற்பனை அலைகள் அவனது நெஞ்சக்கடலில் ஆர்ப்பரித்தன. அவனையும் அறியாமல் அவனது அழகிய இதழ்களில் இயல்பான புன்னகை நெளிந்தது. மூடிய கண்களிலே தவமாக, கனவாக, களிப்பாக நிழலாடினாள் அம்பிகை பரிமளம். ‘அம்பிகைதானா பரிமளம்?... ஆமாம்; பரிமளம் அம்பிகையேதான்!—தனக்குத் தானே கேள்வியைக் கேட்டுக் கொண்டு, பின்னர் அக் கேள்விக்குத் தனக்குத்தானே விடை சொல்லிக் கொண்டே அந்த ஓர் இமைப் பொழுதிலே, சிறு கதை

மன்னனின் இலக்கிய நெஞ்சத்தில் இனம் புரியாத புல்லரிப்பு கிளர்ந்தெழத் தொடங்கியது. மூடிய விழிகளில், மூடப்படாத அற்புதமெனத் தோன்றிக் கொண்டேயிருந்தாள். 'பரிமளம்' நீ தெய்வப் பெண்ணா? இல்லை, மானிட மங்கையா? இல்லை... மோகினிச் சிலையா?'

கனவு கண்டு விழிப்பவனைப் போன்று பாண்டியன் தடுமாறினான். பரிமளம், சினிமா நேசன் மஞ்சள் பத்திரிகைக்கு உன்னுடைய புகைப்படத்தை நான் அனுப்பவில்லை; இது சத்தியம்! என்று உறுதி மொழிந்த சொற்கள் அவளது இதயத்தில் எதிரொலித்தன. மெய்யாகவே அச்சொற்களை அவனுடைய அந்தரங்கம்தான் வெளியிட்டதா? "அப்படியா?" என்று கேட்டு ஆச்சரியக் குறியாக நின்றுவிட்ட பரிமளத்தை ஏற இறங்கப் பார்த்தான் அவன். அந்தரங்க சுத்தி கொண்ட அந்தப் பார்வையிலே அவள்—குமாரி பரிமளம் அப்பிமையாகவும், சிலையாகவும் உருக் கொண்டு உருமாறத் தொடங்கி விட்டாள் மீண்டும்.

"அப்படின்னா, நீங்க என் போட்டோவை பங்களூர் மஞ்சள் பத்திரிகைக்கு அனுப்பவே இல்லீங்களா?" என்று மறுபடி விசாரித்தாள் அவள். குழந்தைத் தன்மையோடு ஒலி கூட்டிய அக்கேள்வி அவனை என்னவோ செய்தது; ஏதேதோ நினைவுகள் அவனைச் சுட்டெரித்தன "ஊஹூம்!" என்று சொல்லி விட்டு, அதன் தொடர்ச்சியாக மேற்கொண்டு எதையும் சொல்ல வகை புரியாமல், தலையை மாத்திரம பலமாக ஆட்டினான். தப்பும் தவறுமாக பரிமளத்தை ஏசிப் பேசியதற்கு 'பாவக்கூலியாகத் தன் கன்னங்களுக்குக் கிட்டிய பரிசுகளை அவள் நினைவூட்டிக் கொண்டாளோ, என்னவோ?'

சிறுகதை மன்னனை விழுங்கி விடுகிற மாதிரி பார்த்தாள் பரிமளம்.

அந்தச் சிறுகதை மன்னனை அவள் விழுங்கி விட்டால், தமிழ்ச் சிறுகதை உலகம் அப்புறம் என்ன ஆவதாம்?

"என்னை மன்னிச்சிடுங்க மிஸ்டர் பாண்டியன்!" என்று கள்ளங்கபடு அறியாச் சிறுமியைப் போலக் கெஞ்சிக் கொண்டே அவனுடைய கைகளைப் பற்றினாள். குமாரி பரிமளம் அவள் பற்றி நின்ற அவனது கைகளிலே சுடுநீர்ச் சொட்டுககள் சில உதிர்ந்து விழுந்தன.

பாண்டியன் திகைத்தான். "பரிமளா!" என்று நா தழுதழுக்கக் கூவினான்.

'பரிமளா!' என்ற அந்த அழைப்பில், மகுடி வசப்பட்ட நல்லபாம்பானாள் பரிமளம்.

ஓர் அரைக்கணம் தன்னை மறந்தாள். உள்ளம் தொட்ட காதலன் இப்போது காம தொட்டு நின்ற நிதர்சனக் காட்சியை மறந்தாள். தன்னையே இமை மூடாமல் பார்த்து நின்ற தொழிலதிபர் வீரபாதுவை மறந்தாள் அருகில் நின்ற பங்களாத்தையும் பங்கஜத்தையும் கூட அவள் மறந்து விட்டாள்! 'மிஸ்டர் பாண்டியன்!' என்று மீண்டும் குரல் எழுப்பினாள் அவள்.

"பாண்டியன் என்றே அழை, பரிமளா!"

"ஆகட்டுங்க, அப்படியே அழைக்கிறேன். நீங்க என்னை பரிமளா என்றும் நான் உங்களை பாண்டியன் என்றும் அழைக்க வேண்டும் என்ற நம்முடைய பழைய உடன்பாட்டைப் புதுப்பித்துக் கொண்டு, அப்படியே இனி அழைக்கிறேன்!" என்று கூறி, புன்னகைக் கோலம் இழைத்தாள் பூவிதழ்ப் பொன் மலர். சிவப்பு ரோஜாப்பூவின் அடி இதழ் ஓரத்தில் தூங்குமே வெண்பனித் துளிகள் அவ்வாறு அவளது கவர்ச்சிக் கண்களின் விளிம்பில் கண்ணீர் முகந்தங்கள் வரம்பு கட்டித் திகழ்ந்தன "என்னை மன்னிச்சிடுங்க. பாண்டியன்!" என்றாள்.

உணர்ச்சிகளின் ஆளுகைக்குக் கட்டுப்பட்டவன் எழுத்தாளன் இந்தப் பொது விதிக்கு சிறுகதை மன்னன் கூட விலக்காகி விட முடியவில்லைதான்.

பரிமளத்தின் பூங்கரங்களைப் பற்றி நின்றதால் விளைந்து கொண்டிருந்த இன்ப ஸ்பரிசத்தின் உணர்வு களிலே மெய்ம்மறந்து நின்றவன், விழிப்படைந்தான்.

"பரிமளா! தெய்வத்தை இப்படிக் கண்கலங்க வைத்து விட்டேனே! பாவி நான்!' என்று தொண்டை அடைக்கச் செப்பினான் அவன். 'என்னை மன்னிக்க மாட்டியா பரிமளம்?" என்று வேண்டினான். கண்கள் கசிந்தன.

அவள் சிரித்தாள். வேதனை சிதறாமல் விரக்தி மாறாமல் சிரித்தாள். வெளிவானத்தில் பூத்திருந்த முல்லைப் பூக்களைப் பற்களாக்கிக் கொண்டு அழகாகச் சிரித்தாள் பரிமளம். பட்டிதழ்ப் புன்னகையில் படைப் பின் ரகசியம் மொட்டிசைத்தது போதையும் போதமும் சுழித்திட்ட அந்தக் கவர்ச்சியில், கன்னங்கள் குழிந்தன மூக்குத்திக் கற்கள் பளிச்சிட்டன. அந்தப் பிரகாசத்தில இடது கன்னத்தின் திருஷ்டி மசசம் பான்மையோடு பொலியத் தொடங்கியது "பாண்டி யன்! நான் பெண்ணல்ல!" என்று விம்மினாள் குமாரி பரிமளம்.

"நீ பெண் அல்ல; பூலோகத்து மானிடப் பெண் அல்ல!" என்று முறுவல் பூத்தான் பாண்டியன்.

"ஊஹூம்... நான்...?"

ஆரம்பித்த சொற்களுக்கு முடிவு சொல்ல அவளை அனுமதிக்கவில்லை. அவன் அதற்குள் அவள் உதடுகளைத் தன்னுடைய நடுங்கிய கைவிரல்களால் பொத்தி விட்டான்.

இதயத்தைத் திறந்து காட்டத் துடித்தவளாக, சற்றே விலகினாள் குமாரி பரிமளம். இப்போது அவளது செவ்விதழ்களை பாண்டியனின் கைகள் மூடி விட முடியவில்லை. "பாண்டியன்! உங்களை—பிரபல எழுத்தாளரான உங்களை நான் அறைஞ்சு போட்டுட் டேன்! ஐயையோ!..." என்று சுடர் விளக்காகத் துடித்தாள் அக்கன்னி இளமான்.

"பரிமளம்!" என்றான் பாண்டியன்.

அவனை ஏக்கம் சூழ ஊடுருவினாள் அவள். மறந்திட்டீங்களே?" என்று ஜாடை காட்டிக் கெஞ்சினாள்.

"ஓ!...பரிமளா!...நீ அறைந்தது பாண்டியனைத் தான்! அந்த இன்பத்தை அனுபவித்தது எழுத்தாளன் பாண்டியனுக்...ம்!...ஒருதரம் நான் உனக்கிட்டே சொன்னேனே, நினைப்பு இல்லையா? உன் கையாலே என்றாவது ஒருநாளை என் கன்னத்திலே அறைபட வேணும் போலிருக்கிறது என்று என்னுடைய வக்கிரபுத்தி கொண்ட ஆசையை வெளியிட்டேனே, ஞாபகம் வருகிறதா, பரிமளம்?"

பரிமளம் சிந்தனை வசப்படலானாள்.

இந்தப் பதினெட்டு மாதங்களிலே அவனும் அவளும் பரிமளத்தின் பாண்டியனாகவும் பாண்டியனின் பரிமளமாகவும் பழகி நேர்ந்த அந்தக் கனவுலக நாட்களிலே நிகழ்ந்த எந்தச் சம்பவத்தைத்தான் அவள் மறப்பாள்? அப்படியென்றால் அவளைப் போன்ற அவனும் அந் நிகழ்ச்சிகளை மறக்கவே இல்லையா? அப்படியென்றால் நேற்றிரவு பாண்டியன் முன்னே ஏன் நிதிச் சோதனை நடத்தினாள் இந்தக் கண்ணகி?...

ஃ ஃ ஃ

ஒருநாள்;

ரீலக்ஸ் ஹோட்டல் மாடியில் 'ஏர்கண்டிஷன்' செய்யப்பட்ட தனி அறையில் பரிமளமும் அதிவீரராம பாண்டியனும் உட்கார்ந்தார்கள். மெரினாவிலிருந்து கரையோரமாகவே நடந்து வந்த அயர்வை அப்போது தான் அவர்கள் இருவரும் லேசாக உணர்ந்தார்கள். கண்ணகி சிலையினின்றும் தொடங்கிய வழிநடைப் பேச்சு சைனபஜார் நெடுகிலும் கூட வளர்ந்தது. இலக்கியத்தைப் பற்றியும் இலக்கியத்தில் வாழ்க்கை பொருந்தியிருப்பதைக் குறித்தும், வாழ்க்கையில் எவ்வாறு இலக்கியம் இணைந்திருக்கிறது என்பது சம்பந்தமாகவும் அவர்களின் உரையாடல்கள் அமைந்தன.

அப்போது குமாரி பரிமளம் ஒரு செய்தியை நினைவூட்டினாள். பாண்டியனை ஓடும் பஸ்ஸில் சந்தித்து அறிமுகம் பெற்ற மறக்க முடியாத—மறக்கக் கூடாத அந்த ஒரு சுபதினத்தில் அவள் அவனிடம் தெரிவித்திருந்த செய்தி!

"மிஸ்டர் பாண்டியன்! நீங்கள் புகழ்பெற்ற எழுத்தாளர். உங்கள் எழுத்துக்களுக்குக் கிடைத்த எத்தனையோ ரசிகர் கூட்டத்தில் நானும் ஒருத்தி. இவ்வகையில் நாம் இருவருக்கும் இடையே புனிதமான...பவித்திரமான—பவ்வியமான ஒரு பிணைப்பு ஏற்பட்டிருக்கிறது இந்தப் பிணைப்பு நம் இருவரையும் நல்ல பண்பாட்டு முறையில் வாழ்த்தி வளர்க்க வேண்டும், இதுவே என் ஆசை, கனவு! நம் இருவருடைய இந்தப் பிணைப்புக்கு இப்போதைக்கு இந்த உறவு முறையைத் தவிர வேறு எந்த வகையான விபரீதக் கருத்துக்கும் இடம் இல்லை! நட்புக்காகவே நீங்களும் நானும் பழகுவோம், புரிகிறதல்லவா?" என்றாள் குமாரி பரிமளம்.

இந்தப் பிரசங்கத்தைக் கேட்ட அதிவீரராம பாண்டியன் பூமலருவது போலச் சிரித்தான். அவனுடைய இளம் புன்னகையில் ஆயிரம் ஆயிரம் கனவுகள் தெறித்து விழுந்த ரகசியத்தை அவள் அறிந்திருக்கமாட்டாளா? "பரிமளா! உங்கள் இஷ்டப்பிரகாரமே நடப்பேன்!" என்று உத்தரவாதம் கொடுத்தான்.

ஆனால் அந்த ஒப்பந்தம் அவர்கள் இருவருக்கும் இடையே கிழிக்கப்பட்ட இலட்சுமணன் கோட்டைத் தாண்டிவிட நேர்ந்தது. இருவரும் தங்களையும் மீறிய விதத்திலே ஒருவரையொருவர் காதலிக்கத் தொடங்கியிருந்தார்கள். சொல்லித் தெரிவதில்லை அல்லவா மன்மதக்கலை? இலக்கியப் பாதையில் நண்பர்களாகக் கை இணைத்து நடை பயின்ற இவர்களைக் காலம் காதலர்களாக்கி வேடிக்கைப் பார்த்தது: வேடிக்கை காட்டியது!

அத்தகைய கட்டத்தில் ஒரு நாள் தான் அவர்கள் இருவரும் இந்த ரீலக்ஸ் ஹோட்டலுக்கு வந்தார்கள்.

உணவு வகைகள் வந்தன.

குளிர் நீர் வந்தது.

குளிர்ச் சாதனத்தின் ஆரோக்கியம் மிகுந்த சூழலிலே—அவனும் அவளும் மாத்திரமே இருந்த ஏகாந்தச் சூழலிலே மாரன்கணை இயங்கத் தொடங்கியது.

பரிமளமும் அதிவீரராமபாண்டியனும் ஒருவரை யொருவர் மௌனமாகப் பார்த்த வண்ணம் இருந்தார்கள். கண்கள் பேசும்போது, வாய்ச்சொற்கள் எதற்கு! வள்ளுவர் நல்ல அனுபவசாலி தானே?

பூ வண்டு ஆனந்தச் சடலாடியது.

எழில் பூ நாணம் காத்தது!

காதலர்கள் இருவரும் கண்ணாடியில் நிழலாடினார்கள்.

மோகினிச் சிலையாக வீற்றிருந்தாள் பரிமளம். மாரகச் சேலையைக் காற்று விலக்குவதும், அவன் அக் காட்சியை வேடிக்கைப் பார்ப்பதுமாக விநாடிகள் ஊர்ந்தன. முகிற்கூட்டமாகத் திகழ்ந்த குழற் கற்றைகள் சில பிறை நெற்றியில் ஒதுங்கிச் சல்லாபம் செய்தன. ரோஜாப் பூ மேனிக்கும் ரோஜா வண்ண 'ராசி—ரு—டோரா' பட்டுச் சேலை—சோளிக்கும் எத்தனை பொருத்தம்! நாணத்தில பதுமையாகி, சோபாவில் சாய்ந்திருந்த நேரத்தில் அவள் மேனியில் விளைந்த கவர்ச்சியை—அழகை—அற்புதத்தை அவனுடைய ரசிக மனம் எவ்வளவோ ரசித்தது. உதட்டில உதடு பொருந்திய, பொருத்தமான காந்தக் கவர்ச்சி ஊனும் உயிருமாகப் பொலிந்த அந்த சிருஷ்டி மகிமையை அவன் மறக்க முடியாது. ஓரமாகச் சாய்ந்திருந்த

தருணத்தில், அவளுடைய கணைகள், மூக்கு, கன்னங்கள், சித்தரித்துக் காட்டியபடி வானவிற்களை அவன் ஒரு போதும் மறக்கவே மாட்டான்.

திடீரென்று அவன், "பரிமளா, எனக்கு ஒரு ஆசை. உன்னுடைய இந்தப் பூவிரல்களால் என் கன்னங்களிலே நாலு அறைகளாவது வாங்க வேண்டுமென்று ஒரு விசித்திர ஆசை தோன்றுகிறது" என்றான்.

பரிமளம் இதைக் கேட்டதும், மனம் அதிர்ந்தாள். "ஐயையோ! அப்படிப்பட்ட பாவத்தை இந்த ஜன்மத்திலே நான் செய்யவே மாட்டேன்!" என்றாள்.

° 0 °

பாண்டியன் அப்போதும் சிரித்தான். இப்போதும் சிரித்தான்.

தன் கனவு நிறைவேறியது என்று அவன் சிரித்திருப்பானோ?

ஆனால் அவள் இப்போது தேம்பத் தொடங்கினாள். 'அன்று பாண்டியன் விபரீதமாக ஆசைப்பட்டது, இப்போது எவ்வளவு விசித்திரமான வகையிலே நிறைவேடுச்சு!...என் கையாலே அறை வாங்கணும்னு அவர் தன்னோடே ஆசையை வெளிப்படுத்தினதைக் கேட்டபோதே எனக்கு குலை நடுங்கிடுச்சு. ஆனா, இப்போது...? கடவுளே!' என்று மனம் நொந்தாள்.

"பரிமளா! எப்படியோ என்னுடைய அதிசயமான ஆசை நிறைவேறிடுச்சு. என் கன்னங்கள் பாக்கியம் செய்தவைதான்" என்று சொல்லி, எதுவுமே அசம்பாவிதம் நடக்காதது மாதிரி அவன் பாங்குடன் புன்னகை சேர்த்தான்.

பரிமளம் தேம்புவதைக் கண்டதும் அவன் நிலை கொள்ளாமல் தவித்தான். அவளுடைய விழி நீரைத் துடைக்கத் துடித்தன அவனது கைகள். என்றாலும் ஏனோ அவன் தயங்கினான்.

"அறை பட்டது பாண்டியன்! காதசிரியன் அதிவீரராம பாண்டியனை எப்போதுமே யாரும் எதுவுமே செய்ய முடியாது!"

அப்போது:

தொலைபேசி கூப்பிட்டது.

உள்ளம் நடுங்க உடல் நடுங்க நடந்தார் வீரபாகு. ரிஸீவரை எடுத்தார், பேசினார்.

"ஓ! ஐயையோ! அப்படியா?...இதோ புறப்படுகிறேன். ஓ...எங்க பரிமளத்தையும் அழைச்சிட்டு வந்திடுறேன். குருக்கள் ஐயா கையிலே சொல்லுங்க!" என்றார் வீரபாகு. சொற்களும் நடுங்கின.

"மிஸ்டர் பாண்டியன், நானும் எங்க பரிமளமும் இப்போது அவசரமாக ஜெனரல் ஆஸ்பத்திரி வரைக்கும் புறப்படுகிறோம். காலையிலே நானும் என் டாக்டரும் உங்க பங்களாவுக்கு வருவோம்" என்றார் வீரபாகு.

அந்தப் பங்களாவை விட்டுப் புறப்பட்ட இரண்டு பெரிய கார்களும் இருவேறு திசைகளில் பிரிந்து, அதனதன் வழியிலே அசுர வேகத்தில் போய்க் கொண்டேயிருந்தன.

# 23. சுய தரிசனமும் நினைவு அலைகளும்

கீழ்ப்பாக்கம்!—பராக்...பராக்!...

சீழ்ப்பாக்கத்தில் பைத்தியக்கார ஆஸ்பத்திரி மட்டும இல்லை.

சிறுகதை மன்னன் அதிவீரராம பாண்டியனின் பங்களாவும் இருந்தது.

அயல்நாட்டு முத்திரையோடு கூடிய 'ஹெரால்ட்' கார் அந்த அழகிய பங்களாவின் முகப்பில் நுழைந்த போது காக்கி உடுப்புக்கள் அணிந்திருந்த காவலாளி ஒருவன் வணக்கம் தெரிவித்தான். அதிவீரராம பாண்டியன் அமர்த்தலாகத் தலையை அசைத்து அந்த வணக்கத்தை ஏற்றுக் கொண்டவனாக, காரை அதற் குரிய தாழ்வாரப் பகுதியில் நிறுத்தினான். கார்ச்சாவி அவனது கையில் இருந்தது நிமிர்ந்து நடந்தான். அப்போது, அவனது மனச்சாட்சியில் பழைய காட்சி ஒன்று அவனையும் மீறியவாறு, நிழலாடியது.

குமாரி பரிமளத்தின் பூங்கரங்களால் அறைபட் டானே, அந்தப் பழைய காட்சிதான் அவனுள், படம் காட்டியது. ஓர் அரைக்கணம் அக்காட்சி படம் எடுத்தது என்றும் சொல்ல வேண்டும். உடனே மனப்பாம்பு புஸ் என்று சீறியது. மறுகணம்-அவ னுடைய விவேகம் சீற்றத்தை அடக்கியது. எதையோ நினைத்து ஆறுதல் கொண்ட பாவனையாக அவன் தனக்குத்தானே புன்னகை செய்து கொண்டான்.

நின்றவன், நடந்தான்.

'தமிழ் இல்லம்' என்ற எழுமல் போர்டில் நிலவு விளையாடிக் கொண்டிருந்தது.

அந்த எழிலை பாண்டியன் வெகுவாக ரசித்தான். இந்தப் பங்களாவை அவன் விலைக்கு வாங்கிய நேரத் தில் இதற்குப் பெயர் சூட்ட அவன் தன்னுடைய அபார மூளையை அதிக தூரத்திற்கு அலட்டிக்கொள்ள வில்லை. ரொம்பவும் சுலபமாகப் பெயரைத் தேர்ந் தெடுத்து விட்டான்.

தமிழ் என்றால் அவனுக்கு இயல்பாகவே ஒரு நாட்டம். ஆகவே தமிழுக்குடைய வீட்டுக்கு தமிழ் இல்லம் என்று பெயர் வைத்து விட்டான். தமிழ்மீது நாட்டம் இருப்பதாக நாலு பேருக்குத் தெரியப்படுத்திக் கொள்வது இன்றைய நடப்பு நாகரிகம்தான். என்ற லும் அந்த வகையில் இவனது தமிழ்ப் பற்றைச் சேர்த்துக் கொள்ளலாமா?—கூடாது.

பாண்டியன் சிந்தனை வசப்பட்ட நிலையில் அப்படியே நின்றான். எதிரே நீண்டு விரிந்திருந்த பூங்காப் பகுதியின் மையத்தில் இருந்த சிமெண்டுப் பெஞ்சு அவன் நெஞ்சத்தை ஊசலாடச் செய்து விட்டதோ?

எண்ணினான்.

எண்ணிலா இனிய நினைவுகள் சதிராடின.

நினைத்தான்.

நினைக்க நினைக்க இனிக்கும் சுந்தரக் கனவுகள் நிழலாடின.

சிரித்தான்.

அவன் சிரித்த சிரிப்பில் அவனது மானசீகச் சிரிப்பும் இணைந்தது!

"... அமுதூட்டும் வண்ண நிலாவிலே மெல்லிய பூங் காற்று தாலாட்டுப் பாட, பாண்டியனும் பாண்டியனுக் குரியவளாக அன்று இருந்த குமாரி பரிமளமும் மெரினா கடற்கரையிலிருந்த சிமெண்டுப் பெஞ்சியில் உடலோடு உடல் உராய்ந்த வண்ணம் வீற்றிருக்க, கதைகள் பேசி, கனவுகள் பின்னி, காலத்தைப் பொன்னாக மதித்து நிமிஷம் நிமிஷமாக, வினாடி வினாடி யாக அளந்தபடி கழித்தார்களே, அந்தக் கனவுலக நாட்களெல்லாம் கற்பனையல்லவே, கனவல்லவே, கதையும் அல்லவே?

'பரிமளா!'—பெயரை அவன் அந்தரங்கம் அழைத் தது. பரிமளம் என்ற அழைப்பில் மனம் சிணுங்கும் அவள், பரிமளா என்ற அழைப்பில் மனம் குதூகலம் அடையும் விந்தைமிகு மனோபாவத்தை அவன் அன்றும் விசித்திரமாகத்தான் ரசித்தான். இன்றும் அதே மனநிலையில்தான் ரசித்தான்—ரசிக்கிறான்! பரிமளத்தின் பெயரை அவன் தன்னுள் உச்சரித்து நிறுத்தியதுதான் தாமதம், பரிமளத்தின் பெயரில்

இருந்த பரிமளம் அவனுடைய மனச்சான்றின் சூழல் முழுவதையுமே நிறைத்தது. கழிந்த சில நாட்களாக காலியாகிவிட்டிருந்த—காலியாக்கப்பட்டிருந்த இதய பீடத்தின் இருப்பிடங்கள் எல்லாம் பூர்த்தியாகி விட்டது போன்றதொரு நிறைவு பரவத் தொடங்கி விட்டது. அந்நிறைவே அவன் எதிர்பார்த்த ஒரு நல்ல முடிவுக்கு ஆரம்பம் போலத் தோற்றம் தந்தது.

ஃ ஃ ஃ

சிகரெட் புகைந்தது.

முகப்பு மண்டபத்தின் படிகளை எல்லாம் எவ்வளவு லகுவில் அதிவீரராம பாண்டியன் தாண்டிவிட்டான்!

திரும்பிப் பார்த்தான் அவன்.

அத்தனை படிகளும் அவனுக்கு ஏதோ கனவுலகப் படிக்கட்டுக்கள் போலவேதான் தோற்றமளித்தன. அவன் நெடுமூச்செறிந்தான். அப்பெருமூச்சில் அவன் தனது வாழ்க்கைப் பாதையில் கடந்து வந்த பயங் கரங்கள் எல்லாம் விசுவரூபம் எடுத்துக் காட்சி கொடுத்தன போலும்! திரும்பிப் பார்ப்பது என்றால் அந்த பழக்கம் சில தருணங்களிலே சுகானுபவமாகவும் வேறு மன நிலைகளிலே கொடுமை மிக்க தண்டனையாக வும் அமைந்து விடுவது தடுக்க முடியாத—தவிர்க்க முடியாததொரு சுயசோதனைச் செயல்தானே? சுய சோதனையா? இல்லை, சுயதரிசனமேதானே?

சிகரெட்டுப் புகையை வெறிமுட்ட உறிஞ்சினான் பாண்டியன். புகையின் நெடி தொண்டையைப் பின்னிக் கொண்டது. இருமினான். எச்சிலைத் துப்ப விரைந்தான். பேஸினில் ரத்தத் துளிகள் தெறித்து விழுந்தன. மன அதிர்ச்சி கணப் பொழுதிற்குள் மறைந்தது. அல்ல; அவன் அந்த அதிர்ச்சியை மறைத்துக் கொண்டான்.

'பரிமளா! நான் உன்னை விலக்கிய நாள் தொட்டு இப்படித்தான் ரத்தம் சிந்துகிறேன்! ஆமாம் பரிமளா!

நீ அறிய மாட்டாய்! நானும் மனிதனாக—நாலு பேர் நினைப்பது மாதிரி உயர்ந்த எழுத்தாள மனிதனாக இருக்கத்தான் முயற்சி செய்கிறேன்! முடியவில்லையே? அந்தக் குரங்கு மனத்துக்குக்கூட மனச்சாட்சி உண்டா என்ன?''—கண்கள் கசிந்தன. நடை தொடர்ந்தான்.

அவனை வரவேற்பது மாதிரி காசி எதிரே வந்தான். பற்கள் முப்பதும் வெளிப்புறம் தெரிந்தன. முன் பற்கள் இரண்டும் காணுமல் போய்விட்டன. அந்த இரண்டு பற்களும் இருந்திருந்தால் அவனுக்கு இன்னும் ஐந்து பத்து சம்பளம் கூடுதலாகக் கிடைத்திருக்கும் பற்களின் சிரிப்பைக் கொண்டு உலகத்தைக் கட்டி ஆளாவிட்டாலும், அவன் தன் முதலாளியான பாண்டியனை ஆண்டுகொண்டிருந்தான். காசி என்று அவனுக்குப் பெயர். புண்ணியஸ்தலமான காசியையே தன் பங்களாவில் அமைத்து விட்டாற்போல் ஆனந்த மடைந்தான் பாண்டியன். அவன் சமையற்காரன் மட்டுமல்ல. அவன்தான் பாண்டியனுக்கு பி.ஏ.யும் கூட.

காசியின் புன்னகை அதிவீரராம பாண்டியனுக்கு ஆறுதல் தந்தது குழப்பங்களின் மொத்த உருவ மாகத் திகழ்ந்த அவனுக்கு அந்தப் புன்முறுவல் அமை தியைக்கூட அருளியது. அமைதி கனிந்த மனத் து .ன் பாண்டியன் வரவேற்புக் கூடத்தில் தொங்கிய வைலட் திரையை விலக்கினான். கம்மென்று அடித் தது ஒரு புத்தம் புதிய வாசனை! 'ஈவினிங் இன் பாரிஸ்' வாடை அது. வாசனைத் திரவியங்கள் என்றால் இந்தப் புதிய பாண்டியனுக்கு ரொம்பவும் பிடிக்கும். ஒரு காலத்தில் செண்ட் வியாபாரிகளை ஏக்கம் சூழ பார்த்து ஏங்கிக் கொண்டிருந்த பாண்டியனை வசதிகள் வந்து அணைந்ததும், அவனது பழைய ருசிகளும், ரசனைகளும் அவ்வப்போது நிறைவெய்தி வந்தன என்பது இயல்பானதொரு நடவடிக்கையாகவே அமைந்து வந்ததில், வியப்பில்லை அல்லவா?

காசி தன்னுடைய சோடாப்புட்டி விழிகளை உருட்டி விழித்தபடி, கைகளைப் பிசைந்தான். "வந்துங்க...!" என்று இழுத்தான்.

இத்தகைய அவனுடைய சேஷ்டைகள் ஏதோ விசேஷங்கள் இருக்கின்றன என்பதற்கு உரிய சமிக்ஞைகள் என்பதை உணர்த்தின. பாண்டியனின் மனம்—ரசிக மனம் அலை பாயத் தொடங்கியது.

"பிஸ்கட் பிராந்தி ரெடி" என்றான் காசி.

மீண்டும் பாண்டியனின் அழகான நாசிகளில் அந்த வாசனை வீசியது.

"ஊம்...அப்புறம்...?" என்றான்.

தொழிலதிபர் வீரபாகுவின் பங்களாவுக்கு 'சினிமா நேசன்' மஞ்சள் பத்திரிகையைச் சுமந்து கொண்டு, குழப்பம் சூழ்ந்த மனத்தையும் சுமந்து கொண்டு செல்ல முற்பட்ட நேரத்தில், 'குழப்பம் தீரும்' என்ற சபலத்தில் இரண்டு 'பெக்' விஸ்கியைப் பருகிச் சென்றதையும், விஸ்கியின் வாடையைப் புரிந்து கொண்ட பரிமளம் தன்னை ஏசிப்பேசியதையும் அப்புறம் தன்னுடைய மிருதுவான கன்னங்களிலே பலமாக நாலு அறைகளைப் பரிசாகக் கொடுத்த நிகழ்ச்சியையும் அவன் தன்னுடைய டைரியிலே குறித்துக் கொள்ளத் துணிவு பெறவிட்டாலும், அந்நிகழ்ச்சிகளை அவனது மனச்சாட்சி என்றென்றுமே குறித்துக் காட்டத் தவறாதென்ற உண்மையை அவன் அறியாமல் இல்லை. ஆகவே, அந்தத் துயருக்கு—அவமானத்தின் துயரத் துக்கு மாற்றாக மீண்டும் பங்களாவுக்கு வந்ததும் குடிக்க வேண்டும் என்று திட்டமிருந்தன. வேளை கூடி வந்து விட்டது!

"தம்பி, உள்ளே பாருங்க!" என்று குழைந்தான் காசி. ஐம்பத்தைந்து வயது ஆனவன் மாதிரியா காசியின் நடிப்பு இருந்தது? பாண்டியன் எடுக்கத் தொடங்கிய படத்தில் காசியின் பதவிக்கு ஊந்தகம் ஏற்படாத வகையில், அந்தப் படத்திலேயும் சமையற்காரன் வேஷத்தை கொடுத்து விட்டானே பாண்டியன்! படம் முடிந்து விடும் என்று பாண்டியன் சொல்லி,

பரிமளத்தின் நினைவு இன்னமும் மாறவில்லை. கீழ்ப்பாக்கத்துக்குக் குடிவருமுன் மண்ணடிப் பகுதியில் அன்றிரவு வந்து நீதிச்சோதனை நடத்திய பரிமளம் இப்போது அவன்முன் மீண்டும் துர்க்கையாக—காளியாக உருக்காட்டலானாள். 'பரிமளம்! உன்னைத் தேவதையாக என் மனச்சாட்சி காட்டுகிறது. நானோ என்னை மோகினியாகக் காணுகிறேன்!...ஆனால் நீயோ காளியாக நிற்கிறாய்! காளிக்கு ஒரு மானுடன் பால்—என் பால் காதலா?' கன்னங்களைத் தடவி விட்டுக் கொண்டான். வலி மிஞ்சியதோ?

வேர்வை வழிய, உள்ளே நுழைந்தான் பிரபல எழுத்தாளன்.

அங்கே மோகினி அவதாரம் எடுத்த மாதிரி ஓர் அழகி கவர்ச்சி மின்னக் காட்சியளித்தாள்!

பேர் கொண்ட கற்பனையாளன் பாண்டியனின் வக்கிர புத்தி கும்மாளம் போடத் தொடங்கி விட்டது. 'பலே! இன்று என் பாடு வேட்டைதான்!'—பரிதவித்தான. அவன சந்தித்த—அவனைச் சந்தித்த அழகிகள் அந்த மோகினிப் பெண்ணின் உருவிலே நிழலாடினரோ?

"வாங்க!"

"வணக்கம்!"

"வணக்கம், வணக்கம்!"

"நீங்க?"

"நான் மோகினி!"

"ஓ!"

"ஆமாங்க!"

"வாங்க, மேலே போகலாம்!"

கதம்பச் சரத்தின் மணம்—நெடி சுகமாக வீசியது.

# 24. மோகினி அவதாரம்

நான்கு சுவர்களுக்கு நடுவில், ஆண்மையும் பெண்மையும் விதியைப் பார்வையாளனாக ஆக்கி சித்து விளையாடிக் காட்ட மனம் இசைந்த மாதிரி, அழகின் தேவதை மோகினியும் சிறுகதை மன்னன் அதிவீரராமபாண்டியனும் அப்போது மௌனப் பிண்டங்களாகச் சில விநாடிகள் வரை அமர்ந்திருந் தார்கள். அப்பொழுது அங்கு நிலவியிருந்த அந்த மௌனமே ஒரு பாஷையாக விளங்கியதோ என்னவோ?

மாடியில், குஷன் சோபாவில் கம்பீர ஒயிலுடன் தோகை மயிலாக வீற்றிருந்த மோகினியையே இமைக் காமல் பார்த்தான் பாண்டியன்!

திறந்து கிடந்த அறையின் கதவுகளைத் தாழிட்டுத் திரும்பிய பாண்டியனை வியப்புடன் பார்த்தவாறு இருந்த மோகினியின் கண்களிலே சாகசம் ஒளி கக்கியது. எதிர்பார்த்த ஏதோ ஒன்று எதிர்பாராத வகையில் பலித்து விட்ட மகிழ்வு அவளது சிந்தூரக் கன்னங்களிலே ரேகை பதித்தது. சுழன்ற மின்விசிறி யில் சுழன்ற சுருள் இழைகளை ஒழுங்கு படுத்தினாள். பிறை நெற்றியின் மையத்தில் ஒளிர்ந்த பிறைத் திலகத்தைச் சீர்செய்தாள். மார்பகத்தின் தசைப் பகுதிகளைச் சன்னமாகத் திரையிட்டுக் கொண்டு சற்றே நிமிர்ந்து அமர்ந்தபோது, பாயத் துடிக்கும் வேங்கையை அவள் தோற்றம் நினைவூட்டியது. இப்போது மோகினி யின் பார்வை பாண்டியனை நோக்கிப் பாய்ந்தது. தன்னையே விழுங்கி விடத் துடிப்பவனைப் பார்த்துக் கொண்டிருந்த கற்பனையாளனின் நிலை கண்டு, அவள் போதைப் புன்னகையை வெளிப்படுத்த முனைந்தாள். "மிஸ்டர் பாண்டியன், என்ன அப்படிப் பார்க்கிறீங்க?" என்றாள், சாதுரியம் தொனிக்க. மோகப் பருக்கள் அழகு கூட்டின. பூக்காடு மணம் கூட்டியது.

"உங்களைப் பார்க்கிறேன், மோகினி!"

"மெய்யாகவா?"

"எழுத்தாளன் கதை எழுதுபவனுயிற்றே, மெய் பசான் என்று எண்ணி விட்டீர்களோ?"

"நோ நோ! அப்படி நினைக்கத் துணிவேனு என்ன? ழுத்தாளர்கள்தானே உண்மைக்கும் தர்மத்துக்கும் த்தியத்துக்கும் ஏன் சமுதாயத்துக்கும் பாதுகாவ ர்கள்!"

'எழுத்தாளர்க்குப் புதிய விதி அமைத்துக் காடுத்து விட்டீர்கள், மோகினி!" என்முன் ாண்டியன்.

எழுத்தாளனின் பேச்சில் ஆச்சர்யம் அடைந்தவள் பான்று, வில்புருவங்களை உயர்த்தி செம்பவள உதடு ளில் கவர்ச்சியை ஊட்டியவளாக "புது விதியை நான் அமைத்துக் கொடுத்து விட்டேனு? நான் சொன்னது ுது விதியல்லவே; பொதுவிதி அது!" என்று திருத்தம் செய்தாள் மோகினி.

அவள் பார்வையில் மோகினி அவதாரத்துக்கான ாகஸம் நெளிந்ததை அதிவீரராமபாண்டியனின் ற்பனை நெஞ்சம் ஊகம் செய்தது. "பொது விதி ன்கிறீர்கள் நீங்கள்! ஆனுல் பொது விதி எதையுமே ான் அங்கீகரிப்பது இல்லை; நான் என்று சொல்வதைக் ாட்டிலும் என் எழுத்தாள மனம் என்றே சுட்டிச் சொல்வதே சரி" என்று அவன் குறுக்கிட்டுக் கூறினுன்.

"உங்கள் மனத்தை நான் எப்போதும் புரிந்து வைத்திருக்கிறேன்!" என்ருள் மோகினிப் பெண்.

"விந்தையாக இருக்கிறதே!"

"இதில் விந்தைக்கு இடம் இருப்பதாக நான் கருத வில்லை. ஏன் தெரியுமா? உங்களுடைய அக்கினிப் பரீட்சை என்ற கதை உங்களது வக்கிர மனத்தை எனக்கு முன் கூட்டியே அறிவித்து விட்டதல்லவா?

கற்பழிக்கப்பட்ட கன்னிப் பெண்களுக்கு ஒரு செம்பு தண்ணீரைக் கொட்டி விடி மோட்சம் காட்டி விட்டீர்களே? அந்த விபரீதச் செயல் தமிழ் பண்பாட்டுக்குப் புறம்பான காரியம்! உங்களுடைய வக்கிர மனத்துக்குத் தானே சாட்சியமாக அமைந்து விட்டது?'' என்று வேதனை தெரியப் பேசி நிறுத்தினாள். அவள் எடுப்பான நாசி முனையில் முத்தார்த்திருந்த வேர்வை முத்துக்களைத் துடைத்துக் கொண்டாள். காதுகளில் மின்னிய ஸ்டெட்களை நெருடி விட்டாள். கழுத்தில் இழைந்த இரட்டைவடச் சங்கிலியை தளர்த்தி மார்பில் நெளியச் செய்தாள். "ஓ மைகாட்! மணி ஒன்பது ஆகப் போகுதே" கரைப் பகுதியில் எட்டிப் பார்த்த உள் பாவாடையை ஒதுக்கி விட்டாள் அவள்.

அவளுக்குப் பதில் சொல்லத் துடித்தது, சிறுகதை ஆசிரியனின் உள்ளம். ஆனால், அவன் பார்வையில் காந்தமாக இயங்கிய 'பிஸ்கேட் பிராந்தி'யும் அழகின் மோகினியும் அவனைத் திசை திருப்பியது. மூடப்பட்டிருந்த கதவுகளை வெறித்துப் பார்த்தான். மோகக் கிளர்ச்சியில் குருக்ஷேத்திரம் உருவாகத் தலைப்பட்டது. கண்களை மோகினியிடமிருந்து விலக்கினான். இப்போது, குமாரி பரிமளத்தின் உருவப்படம் தென்பட்டது கணநேரத்துக்கு அவன் சிந்தனை வசப்படலானான். மோகினியும், பரிமளமும் அவனுள் தட்டாமாலை சுற்றத் தொடங்கினார்கள். அழகு இருவேறு கிளைகளாகப் பிரிந்து, அழகுப் போட்டி நடத்துவதாகவே அவன் உணர்ந்தான். 'பரிமளா!' என்று அவன் தன்னுள் முணுமுணுத்தான் நெடுமூச்சு பிரிந்தது. இப்போதைக்கு பரிமளத்தை நினைக்கக் கூடாது! இந்த நினைவு அவன் மனச்சாட்சியையும் மீறி வெளிப்பட்ட தருணத்தில், அவன் மனம் சலனம் கண்டது. தொழிலதிபர் வீரபாகுவின் பங்களாவுக்கு 'சினிமா நேசன்' மஞ்சள் பத்திரிகையை வைத்து எடுத்துச் சென்ற தன்னுடைய சிவப்பு டைரியைப் பற்றிய ஞாபகமும், அப்போது கொடி மின்னலெனத் தோன்றியது. யாரோ ஒரு குஷ்டரோகிப் பிச்சைக்காரன் தன் எழுத்துக்களில் மயங்கித் தன்னைக் காண

பல முறை வந்தலைந்த விவரத்தையும் அவன் நினைவு கூறத் தவறவில்லை. யாரையும் மேலே அனுப்பக் கூடாது என்று ஆணை இட்டானே பாண்டியன்?

காலம் நிற்குமா?

கன்னங்களை வருடிக் கொண்டான். அவன். கன்னங்களிலே பரிமளா அறைந்த நிகழ்ச்சி ஊறத் தொடங்கியது. "சினிமா நேசன்" மஞ்சள் பத்திரிகைக்கு நான் உன் போட்டோவை அனுப்பவில்லை!" என்று உறுதி மொழிந்ததையும் எண்ணமிட்டான். அதோ பரிமளம் கொடுத்த அவள் புகைப்படம் சுவரை அலங்கரிக்கிறதே!—அப்படியென்றால், பரிமளத்தின் புகைப்படத்தை சினிமா நேசனுக்கு யார் அனுப்பியிருப்பார்கள்? வீரபாகுவின் படம் யாருக்குக் கிடைத்திருக்கும்? பெங்களூர் பத்திரிகைக்காரனுக்கு பரிமளத்தின் படமும் வீரபாகுவின் படமும் எப்படிக் கிடைத்திருக்கும்? "தொழிலதிபர் வீரபாகு—அழகை அழகி குமாரி பரிமளம் காதல் லீலைகள்" என்ற தலைப்பு வாசகத்திற்கு அடிப்படையான உண்மை என்ன? இச் செய்தியே உண்மையா? குமாரி பரிமளம் தொழிலதிபர் வீரபாகுவின் சொந்த மகளா? எல்லாம் புதிராகத் தோன்றுகிறது! சிகரெட் மீண்டும் புகை பரப்பியது. காலையில் இங்கே வீரபாகுவும் பரிமளமும் வருகிறார்களாம்!'

"காலம் ஒரு புள்ளிமான்...!" என்று மௌனத்தைக் கலைத்தாள் மோகினி.

அவளை ஏறிட்டுப் பார்வையிட்டான் பாண்டியன். சாதுரியம் மிகுந்த சாகஸம் பூண்டு அவள் விளங்கிய கோலத்தை அவனால் உணர முடியாமல் இல்லைதான்.

"காலம் ஒரு புள்ளிமான்! அழகான உவமை, என்னுடைய நண்பர் பூவையின் உவமை இது!"

"நீங்களும் நினைவு வைத்திருக்கிறீர்கள். பேஷ்! சரி...நேரம் ஆக வில்லையா?" என்று தூண்டினாள். அவள் கண்களின் போதை, போதைப் பொருளில் பூரணமாக நெளிந்தது.

"ஆமாம்! இதோ!" என்று சொல்லிப், பிராந்தி சீசாவைத் திறந்தான். இரண்டு கோப்பைகளில் பிராந்தியும் சோடாவும் தயாராயின ஒன்றை எடுத்து மோகினியிடம் சமர்ப்பித்தார்.

"ஊம், குடிங்க, மோகினி!" என்றான்.

அவனும் குடிக்கத் தொடங்கினான்.

அவள் விழிகள் சுழன்றன.

"மிஸ்டர் பாண்டியன்! உங்க நினைவுக்கு அடையாளமாக உங்களுடைய லேட்டஸ்ட் போட்டோ ஒன்றைத் தருவீங்களா?" என்று வேண்டினாள் மோகினி.

"ஓ!" என்றான். தன் படம் ஒன்றையும் அவள் வசம் ஒப்படைத்தான். பிறகு தன்னுடைய புதிய வாழ்வில் அனுபவித்த காதல் விளையாட்டுக்களை ஒப்பு விக்கத் தொடங்கினான்.

"குமாரி பரிமளம் எனக்காக பாவம், தவம் செய்கிறாள்!" என்றும் தெரிவித்தான். பிறகு எதிரில் தெரிந்த கட்டிலைச் சுட்டிக் காட்டி, "அங்கே அமர்ந்து பேசுவோம்!..." என்றான். கண்கள் செருகிக்கொண்டிருந்தன!

"ஓ!" என்று சொல்லி மோகினி எழுந்தாள்.

பாண்டியனின் வெறி மண்டிய விழிகள் துள்ளிக் குதித்தன!

'ஆஹா!...'

பாண்டியன் தள்ளாடி எழுந்தான். அந்த மோகினியை அண்டினான்!

மறுகணம்...

பாவம்!...

மோகினி கதவுகளைத் திறந்து விட்டு மோகினியாகச் சிரிக்கத் தொடங்கினாள்!...

# 25. தமிழச்சி

அவதாரம் எடுத்த மோகினியாக 'கட கட' வென்று சிரித்த மோகினியின் அந்தச் சாகஸச் சிரிப்பு அப்போது அதிவீரராம பாண்டியனின் நெஞ்சிலே புதிய புயலை விளைத்தது. மூடிக் கிடந்த மாடித் தனி அறையின கதவுகளைத் திறந்து விட்டு ஒயில் சேர்த்து எப்படிச் சிரிக்கிருள்!

இவளிடமிருந்து சிரிப்பையா நான் எதிர்பார்த்தேன்! சில்லி திங்!...நான் பார்க்காத சிரிப்பா? நான் அனுபவிக்காத சிரிப்பா? கேவலம் பத்துப் பைசாவுக்கு வழியில்லாமல் தவித்த அந்த நாளையப் பாண்டியனு நான்? குறுவிழி காட்டி அழைத்த இரு மணப் பெண்டிர் என் எழிலில் மயங்கி, என்னைச் செல்வந்தன் என்ற நினைப்பில் என்னைச் சுற்றி வந்தும், நான் அவர்களைச் சுற்றி வரத் தெம்பிழந்து ஏங்கித் தவித்துத் தடுமாறிய காலம் ஒன்றும் இருக்கத்தான் இருந்தது. ஆனால் அந்தக் காலம் மலையேறி விட்டது. அந்தச் சோக நாட்களெல்லாம் என் டைரியை அலங்கரிப்பதுடன் சரியாகி விட்டன. இப்போது, எனக்குப் புதிய வாழ்வு வழி விரித்திருக்கிறது!...என் எழுத்துக்கள் புரட்சியை உண்டு பண்ணி விட்டன. அதே புரட்சியை நான் திரையுலகிலும் செய்து காட்டத்தான் போகிறேன்!...ம்!...இவள் ஏன் இப்படிச் சிரிக்கிருள்? மகாவிஷ்ணு மோகினி அவதாரம் எடுத்தாராமே யாரோ சூரனை அழிக்க? இவள் மோகினி. இந்த மோகினியே மோகினி அவதாரம் எடுத்து விட்டாளே?

கீழே வரவேற்புக் கூடத்தில் இருந்தவள் என் புன்னகைக் குறிப்புகளுக்கெல்லாம் தலையை ஆட்டிச் சம்மதித்து, மாடிக்கு வந்து, நான் உவந்தளித்த ஸ்காட்டிஷ் பிராந்தியையும் சுவைத்து விட்டு, அந்த நன்றியைக் கூற மறந்து விட்டு, இப்போது இப்படிச் சிரிக்கின்ருளே? இதற்குப் பொருள் என்ன?

அதிவீரராம பாண்டியனின் மோக வெறி சூழ்ந்து குடிவெறி ஏறிச் சிவந்த கண்கள் ஏமாற்றம பாதியும் ஏக்கம் பாதியுமாகப் பளிச்சிட்டுக் கொண்டிருந்தன. அவன் கைகள் பரபரததன. மோகினியை அவனால் இனி விழுங்க முடியாது அல்லவா? ஆகவே அவளை வெறித்து நோக்கலுற்றான். நளினம் மண்டிய மோகச் சுழலாகச் சுழன்ற அந்தக் கண்களை—காம வெறியைத் தூண்டிக் கொண்டேயிருந்த அந்த மார்பகத்தை—கவர்ச்சியின் பிறப்பிடம் போலத் தோற்றமளித்த அந்த உதடுகளைப் பார்த்துக் கொண்டேயிருந்தான். ஜாதி முயல் தப்பி விடும் என்று புரிந்து கொண்ட வுடன் மறுகித் தவிப்பானே வேட்டைக்காரன் அந்தப் பாவனையில் அவன் தவித்தான்; திகைத்தான்; தடுமாறவும் செய்தான். மோகினியின் கைகளில் காட்சி யளித்த தன்னுடைய மார்பளவுப் புகைப் படத்தையும் அவன் கவனிக்கத் தவறிவிடவில்லை. உடனே அவ னுக்குச் சினிமா நேசன் இதழில் வெளியான வீரபாகு—பரிமளம் படங்கள் பற்றிய ஞாபகமும் பளிச்சிட்டது! 'ஓ...அப்படியும் இருக்குமோ?'

அதிவீரராம பாண்டியன் எதையும் சமாளிக்கும் உதவேகத்துடன் தலையை நிமிர்த்தினான். இப்போது அவன் மனம் அவள் கொடுத்த அதிர்ச்சி வைத்தியத் தில் தெளிந்து ஒரு நிலைப்பட்டது போலும்! நினைவுகள் சூடு அடங்கின. என் படத்தை இவள் 'மிஸ்யூஸ்' பண்ண முடியும். செய்யட்டுமே?...அவ்வளவுதானே? சமுதாயத்துக்குப் பயந்து சாகும் தொடை நடுங்கி அல்லவே இந்தப் பாண்டியன். சமுதாயத்துக்கு அப்பாற்பட்டவன் இந்தப் பாண்டியன்!...சமுதாயத் துக்காக நானல்லவே!...புவர் கேர்ல் மோகினி!... பொருத்தமான பெயர்தான்! ஒருவேளை, இவள் தன் பெயரையும் திரித்துச் சரடு விட்டிருப்பாளோ? எது எப்படி இருந்தால் என்ன? வாழ்க்கை ஒரு சோதனை!... அந்தச் சோதனையில் வெற்றித்திருமகள் என் பக்கமே எப்போதும் இருப்பாள். பின், இவள் எம்மாத்திரம்? மஞ்சள் பத்திரிகை சினிமா நேசன்தான் எம்மாத்திரம்?

நினைவுகள் 'செஸ்' ஆடின.

சிகரெட் 555 புகைந்தது.

புதிய தெம்பு ஊறியது,

மீண்டும் ஒரு 'பெக்' பிராந்தி உள்ளே சென்றது.

மோகினி நீலநிறப் பாதரச ஒளியில் மோகினிச் சிலையானாள்!

"மோகினி!" என்று இனிய குரலில் அழைத்தான் பாண்டியன்.

"சொல்லுங்க" என்றாள் மோகினி. குரலில் பழைய இனிமையைக் காணோம்! காதுகளில் மின்னியது 'ஸ்டெட்'கள். கழுத்துப் பூச்சரம் இப்போது மார்பை அலங்கரித்துத் திகழ்ந்தது. மாராகச் சேலையை எடுத்து ஒழுங்குப் படுத்திக் கொண்டு மீண்டும் இடது தோளில் சரிய விட்டாள்.

அந்த அழகுக் கவர்ச்சியில் சிந்திய இனக் கவர்ச்சியை பாண்டியனின் ரசிக மனம் அனுபவித்தது.

"நீங்க மோகினிதானா?"

"சந்தேகம் வந்து விட்டதா பாண்டியன் ஸார்?"

"சந்தேகம் கிடக்கட்டும். நீங்க நவீன யுகத்தின் மோகினியா? அதாவது யுக சந்திப் பாவையா? இல்லை புராண காலத்து மோகினியா?"

"எப்படித் தோணுது உங்களுக்கு?"

"எனக்குத் தோன்றுவது இருக்கட்டும், கேள்வி கேட்கிறேன்!"

"பதில் சொல்ல வேண்டும், அவ்வளவுதானே?" ப்ளவுஸின் வலது புறப் பகுதியில் தெளித்திருந்த மல்லிகை மொட்டுக்கள் பளிச்சிட்டன. இளங்காற்றில் மல்லிகைப் பூ வாசனை மிதந்தது.

மேஜை மீதிருந்த 'ஈவினிங் இன் பாரிஸ்' சென்ட் சீசாவைத் திறந்தான் அவன்.

"ஆமாம்!..." என்றான்.

"நான் இந்தக் காலத்துப் பெண்ணேதான்! உங்களைப் பிடிச்சாம்பலாக்கி விடுவேனே என்னவோ என்று பயம வேண்டாம்!" என்று மறுபடியும விநய மாகச் சிரிக்கலானாள் மோகினி.

"சரி. உங்கள் இயற் பெயர் என்ன?"

"மோகினி தான்!"

"ஆல் ரைட்! நம்புகிறேன். மோகினி என்பது உங்களது புனைப் பெயராக இருந்தாலும் அதைப்பற்றி அக்கறை இல்லை" என்றான்.

"அப்படியென்றால் நீங்கள் இதைப் பற்றிக் கேட்கா மல் இருந்திருக்கலாமே!"

"அது என் சொந்த விஷயம்!"

"ஓஹோ!"

"ம்—சினிமா நேசன் என்ற பத்திரிகைக்கும் உங்க ளுக்கும் தொடர்பு இருக்குமென்று கருதுகிறேன், சரிதானே?"

"அந்தத் தொடர்பு என்னுடைய சொந்த விஷயம். தயவு செய்து மன்னிக்க வேண்டும்!" பட்டுக் கத்தறித்த மாதிரி செப்பினாள் மோகினி.

அசட்டுச் சிரிப்பை வெளியிடாமல் இருக்க முடிய வில்லை பாண்டியனால். "ஓ கே! விஷயத்துக்கு வரு வோம், மிஸ் மோகினி ' என்று விளித்தான்.

விளித்துக் கொண்டே அவள் கழுத்தை ஆராய்ந் தான் அவன். எதிர் பார்த்தபடியே அங்கே தாலிச் சின்னம் எதுவும் தரிசனம் காட்டவில்லை.

"மோகினி ஏன் கதவருகிலேயே நின்றுகிட்டு இருக்கீங்க? அதோ கட்டில் உங்களை அழைக்கிறதே!" என்றான். புரட்சி செய்து மீளவும் அவனை அலைக் கழிக்கத் தொடங்கியிருந்த இன்பக் கிளர்ச்சியின்

நினைவுகள் அவன் பேச்சைத் தாழ்ந்தொலிக்கச்

அவள் அஞ்சனம் தீட்டிய கயல் விழிகளைப் பட படத்தபடி, அந்தக் கட்டிலை நிதானமாக நோக்கினாள். குடிக்கத் தொடங்கியது முதல் இந்தப் பத்துப் பதினைந்து நிமிஷங்களாக அவளால் மாத்திரம் எங்ஙனம் இத்துணை நிதானமாக இருக்க முடிந்தது? இரண்டு பேருக்குரிய கட்டில் என்னை மட்டும் அழைக் கிறதா?'' என்று கேட்டாள்.

அக்கேள்வி அவனுக்கு இதயத்தில் பால்வார்த் திருக்க வேண்டும்! வெரிகுட்! ஷி இஸ் ரெடி! என் வழிக்கு இணங்க அவள் தயார்! மூஞ்சியைப் பார்த் ததும் தான் புரிஞ்சிட்டுதே! ஓகே!—ஓ கே!'—இளம் மீசையை நெருடி விட்டான். சுருட்டைக் கிராப்பைக் கோதிவிட்டான். மேற்குப் புறத்தில் இருந்த படத் தயாரிப்பாளர் சச்சிதானந்தத்தின் படத்தை நினைத்துக் கொண்டான். அந்தப் புண்ணியவான் வாழ வேண்டும்! அது மட்டும் போதாது. அரை குறையாக நிறுத்தியுள்ள, 'காணாமல் போன காதல்' படத்தை முடித்து வெளியிட்டு எனக்கு இன்னும் ஒரு படி கூடுத லான சுக போக வாழ்வுக்கு வழி செய்யவும் வேணும்!' மீண்டும் எண்ணங்களை மனப்பாம்பு சட்டை உரிக்கத் தொடங்கி விட்டது. மைனர் சங்கிலியை நெருடிய வாறு, மார்பு ரோமங்களோடு விளையாடியவாறு அவன் ஸ்டைலாக நெஞ்சை நிமிர்த்தி நடந்தான். கோதாவில் அடியெடுத்து வைக்கும் பயில்வான் கதைதானோ?

செம்மை அடைந்த மோகினியின் எடுப்பான நாசித் துவாரங்கள் புடைத்தன. ஒயில் சேர்த்தாள்.

அந்தப் பார்வை அவனை மயக்கியது, மேலும். ''இரு நபர் மெத்தை உங்களை மட்டும்தானா அழைக் கும்?'' என்று கேட்டுக் கொண்டே தேன் குடிக்கத் துடிக்கும் நரியாக மயங்கினான் பாண்டியன். ''உங்களை எனக்கு நிரம்பவும் பிடிச்சிட்டது'' என்றான்.

புதிய காந்தித் தலை நாணயங்களைக் குலுக்கிவிட்ட பாவனையில் மோகினி சிரித்தாள். உயிரை ஆட்டிப் படைக்கும சிரிப்பு அது!

"எனக்கு உங்கள் படத்தை ரொம்பவும் பிடித்து விட்டது ஆசிரியர் ஸார்!" என்றாள்.

"ஓஹோ, அப்படியா? பரிமளம்கூட அப்படித் தான் ஆதியில் சொன்னாள்!" என்றான் அவன்.

"யார் அந்தப் பரிமளம்?"

"தெரியாதா உங்களுக்கு ?"

"சொன்னால்தானே தெரியும்?"

"சொல்லித் தெரிவதில்லையே மன்மதக் கலை!" திசை திரும்பி விட்டது அவன் பேச்சு. போதை மயக்கம் அவனை அவ்வாறு செய்து விட்டது கோப்பையில் பிராந்தியை ஊற்றி அவளிடம் நீட்டினான்.

அவள் மறுக்க விலலை

அவன் மகிழ்வு இரட்டித்தது.

"டைம் என்ன? ' என்று கேட்டான். தன் கையில் காலம் ஓடிக் கொண்டிருந்ததை அவன் மறந்து விட்டான்!

"நைன் ட்வல்வ்!"

"எக்ஸாக்டிலி!"

"எஸ்!" பதில் மொழிந்தாள் மோகினி. "பரிமளத்தைப் பற்றிக் கேட்டேன்" என்று நினைவூட்டினாள்.

பட்டுத் தலையணையில் சாய்ந்தான் பாண்டியன்— ஆமாம், சிறுகதை மன்னன் அதிவீரராம பாண்டியன்!

மோகினி மெல்ல நடந்தாள். ரேடியோக்ராம் இயந்திரத்தை அடுத்திருந்த அலமாரியைத் துழாவினாள். 'லூஸம்பக்' என்ற ருஷ்யக் கதைப் புத்தகம் கிடைத்தது.

இவருடைய 'திருமண அழைப்பு' என்ற கதைக்குக் கரு கொடுத்த கதை நூல் இது! ம்!...மேலும் துழாவினாள். பசசை நிற நாட்குறிப்பு ஒன்று கிடைத்தது. அதை எடுத்து அதில் பாண்டியனின் படத்தைச் சொருகி, அதைத் தன்னுடைய டம்பப் பையில் திணித்தாள். திரும்பினாள் ரேடியோ கிராமைத் திருகினாள். "ஒரு ராஜா ஒரு ராணியிடம்!..." என்ற பாட்டு ஒலித்தது.

பாவம். பாண்டியனின் பரபரத்த கரங்கள் எதையோ தேடிக் கொண்டிருந்தன. எழுந்தான். கண்களைத் துடைத்துக் கொண்டான். மோகினியை நோக்கித் தாவிய நேரத்தில் தொலைபேசி அலறியது.

"யார்...தேவமனோஹரியா...என்ன...ஓ... பரிமளா? என்ன?...நீங்க இன்னமும் ஜெனரல் ஆஸ்பத்திரியிலே தான் இருக்கீங்களா?...என்ன விஷயம்?...ஓ...காலையில் தானே?...வாங்க பேசலாம்!" என்று பேச்சை முடித்து மறுபடியும் மோகினியின் மேனியைக் குறி வைத்துப் பாய்ந்தான் பாண்டியன்!

மோகினி நிதானம் இழக்கவில்லை. "மிஸ்டர் பாண்டியன், நான் மோகினி!" என்றாள் தடம் கணித்து விலகினாள் வளையல்கள் குலுங்கின. ஆர்பர்ட்டோ மொரேவியா, மேரி கொரில்லேயின் நாவல்கள் மிதிபட்டன.

"தெரியுமே!"

"தெரிந்துமா என்னை விரும்புகிறீர்கள்?"

"ஆஹா!"

"உங்களுக்கு என்ன வேண்டும், இப்போது?" நெற்றிப் பொட்டு பளிச்சிட்டது.

"நீ!"

"நானா? பேஷ்!...எனக்கு இப்போது என்ன வேண்டும் தெரியுமா?"

"சொல்லுங்கள்!"

"சொல்லித் தெரிவதில்லையே!"

"பேஷ்!...பேஷ்!"

அவன் வாய் மூடியிருக்க மாட்டான். மறு விநாடியில் அவனுடைய அழகான கன்னங்களில் அறைகள் விழத் தொடங்கின.

காட்டு வேங்கையானான் பாண்டியன்.

ஆனால் மோகினியோ, "நான் தமிழ்ச் சாதிப்பெண்" என்று கூவியபடி விதியாக வந்தவள், விதியாக ஓடத் தலைப்பட்டாள்.

வேங்கை, ஏமாற்றம், அவமானம், வேதனை, ஏக்கம் ஆகிய மனித உணர்வுகளால் அலைக்கழிக்கப் பட்டு விம்மி வெடித்துக் கொண்டே யிருக்கிறது!

## 26. கன்னி நிலா!

கன்னி நிலா, இளைய கன்னிகை குமாரி பரிமளத்துக்கு வழிநடைத் துணை ஆனது!

மேற்கு மாமபலம் 'கேட்'டைத் தாண்டி, ஜானகிராம் பிள்ளைத் தெருவை நோக்கி நடந்த அவள், நேர் எதிர் வசத்தில் இருந்த குப்பத்தை அடைந்தபோது, கூப்பிடு தூரத்தில் இருந்த புதுப் பணக்காரரான சிவசிதம்பரம் வீட்டிலிருந்த புதிய கடிகாரம் பத்து முறை அடித்து ஓய்ந்த சத்தத்தைத் தெளிவாக அவளால் கேட்க முடிந்தது. காலத்தை உணர்ந்ததும், அவள் தன் நிலைமையையும் உணரலானாள். நேற்றிரவு இங்கிருந்து புறப்பட்டவள், இன்றிரவு திரும்பிக் கொண்டிருக்கின்றாள்! எண்ணிப் பார்க்கவும் முடியவில்லை; எண்ணிப் பார்க்காமலும் இருக்க முடியவில்லை. எதை எண்ணினாள்?

இந்தப் பல மணி நேரத்தின் இடை நடுவிலே விதியாக-வினையாக நிகழ்ந்துவிட்ட சம்பவங்களையா? வேதனையில் நெகிழ்ந்த மனம் ஜெனரல் ஆஸ்பத்திரியில் போய் நின்றது. மனத்தையும் தொற்று நோய் பீடிக்குமோ?

'இம்பாலா' அந்தப் பொது மருத்துவமனையின் பிரதான வாசல் வழியே செல்லப் பிள்ளையாகத் தவழ்ந்து சென்றது. வீரபாகுவுக்கு எத்தனை பேர் மரியாதை தெரிவித்தார்கள்:—தொழில் அதிபர் ஆயிற்றே!

படகுக் கார் நின்றது. டிரைவர் முன் கதவைத் திறந்து விட்டான்.

வீரபாகு தமக்கே உரிய மிடுக்குடன் உண்மைக்குத் தலைவணங்குவது போன்று குனிந்து சத்தியத்தை வாழ்த்தக் கடமைப் பட்டவர் மாதிரி தலையைக் கம்பீரமாக உயர்த்தி நின்றார். "மெதுவா இறங்கம்மா, பரிமளா!" என்றார்.

"பரிமளா" என்ற அச்சொல் உடனே பரிமளத்துக்கு அதிவீரராமபாண்டியனை நினைவூட்டியது. சிறு பொழுதுக்கு அவள் சலனம் அடைந்து தெளிவும் பெற்றாள். 'ஆகட்டுங்க," என்று சொல்லியவளாக இடது தோள் பட்டையில் சரிந்து கிடந்த 'தாவண் கெரே' வாயில் புடவையைப் பற்றியவாறு மெல்ல இறங்கினாள். மரியாதைக்கு அடையாளமாக வீரபாகு சற்றே விலகி நின்றார்.

வீரபாகு இளநகை புரிந்தபடி "அம்மா, சகஜமாக இரம்மா. நான் உனக்கு ஒன்றும் அன்னியர் அல்லவே!" என்றார். உதட்டில் இருந்த சிரிப்புக்கும் இதழ்கள் உதிர்த்த நெகிழ்ச்சிக்கும் எட்டாத தூரம்.

"நீங்க என் அப்பா!" என்றாள் பரிமளம். நா தழுதழுத்தது. கண்கள் பொடித்தன.

வீரபாகு பிஸ்கட் நிற சிலாக் ஜிப்பாவின் கரைப் பகுதியை எடுத்து விழிகளைத் துடைத்துக் கொண்டார். "இந்தப் பாக்கியத்தை நான் பெற எவ்வளவோ

கொடுத்து வைத்திருக்க வேணும்!" என்ருர். "என் தவம்—எங்கள் தவம் பலித்தது. மங்களம் இப்போது புதிய மங்களமாக ஆகிவிட்டாள். பெங்களூர் பங்கஜத் தின் வரவுக்கு வாழ்த்துச் சொல்ல வேணும்" என்று தொடர்ந்தார்.

"என்னைப் பெற்ற தந்தையின் அன்பை நான் அடையக் கொடுத்து வைக்கவில்லையானலும் ஒரு தந்தைக்கும் மேலாக என் மீது பாசம் வைத்திருக்கிற உங்களோட தூய அன்பைப் பெற நான் பூர்வ ஜென் மத்தில் எவ்வளவோ கொடுத்து வச்சிருக்கத்தான் வேணுமுங்க!..." என்று உணர்ச்சிப் பெருக்குடன் கூறிஞள் பரிமளம்.

பரிமளம் தன் தாயை வஞ்சித்த தன் தந்தையை—முகமறியாத அந்தத் தந்தையைக் குறித்து முன்னம் ஒரு நாள் தெரிவித்த கதையை வீரபாகு நினைவு கூர்ந் திருக்க வேண்டும்.

"அம்மா, உன் அன்னையை வஞ்சித்த உன் அப்பா வின் படத்தைக் கூட உன் தாய் உனக்குக் காட்ட வில்லையே! எப்படி அந்தத் துரோகியை நீ இனம் கண்டு, எப்படி அம்மா நீ அவனைப் பழிவாங்கப் போகிருய்?" என்று கேட்டார் வீரபாகு.

பரிமளம் மௌனமாகக் கண்ணீர்த்திரை விரித் தாள்.

"என்னோட அம்மாவுக்கு நான் கொடுத்த அந்த வாக்குறுதியை நான் நம்புற தெய்வம் கட்டாயம் நிறைவேற்ற எனக்குத் துணை செய்யும்! என்னோட உள்ளுணர்வு அப்படித்தான் அடிக்கடி சொல்லிக்கிட்டு இருக்குதுங்க! ஆமாங்க, அப்பா!" என்ருள். காது வளையங்கள் குலுங்கின.

"ஆமாம்மா! குற்றவாளி தன் குற்றத்தை உணரப் பக்குவம் அடைஞ்திடுறபோதுதான், அவன் தெய்வ சக்தியை முதன் முதலிலே புரிஞ்சுக்கிடவும் ஆரம்பிக் கிருன். உன் தந்தையை நீ அறியாமல் இருக்கலாம்.

ஆனால், உன் முகத்தை உன் தந்தையால் மறந்திருக்க முடியாது. ஆகவே என்றாவது ஒருநாள், அந்த நபர்—அந்தத் துரோகி உன்னிடம் வந்து மன்னிப்புக் கேட்கவே செய்வான்! ஆனால் அந்தப் பாவி இதுவரை உயிரோடு இருக்க வேணும்!" என்றார் தொழிலதிபர்.

குமாரி பரிமளம் வெய்துயிர்ப்பை உதிர்த்தாள். "குருக்கள் ஐயாவை நாம் பார்க்க வேணும்." என்று நினைவுக் குறிப்புக் கொடுத்தாள். கன்னி அவளுடைய திருஷ்டி மச்சம் இயற்கையும், செயற்கையும் தெளித்திருந்த அந்தக் கலப்பு ஒளியில் வெகு கவர்ச்சியோடு பொலிந்தது.

"ஓ! ஆமாம்!" நடந்தார் அவர். "அம்மா பரிமளம்! உன்னுடை கன்னத்து மச்சத்தை அடையாளம் சொல்லி உன்னையும் அழைச்சிட்டு வரச் சொன்னாரம்மா புண்ணியகோடி குருக்கள்!" என்று நிறுத்தினார்.

"ஆச்சரியமாகத்தான் இருக்குதுங்க. ஆமாங்க!... காலம்பற தம்புச் செட்டித் தெரு முருகன் சந்நிதியிலே தான் முதன்முதலாகச் சந்திச்சேன். அப்புறம் பாண்டி பஜாரிலே இரண்டாந்தரமாகவும் பார்த்தேன். முன்பின் தெரியாத அவர் என்னோடே பலகாலம் பழகியவராட்டம் அன்பு பாராட்டிப் பேசினார். ஆனால், எடுத்த எடுப்பிலே அவரைப் பார்த்ததும், ஏனோ தெரியலே எனக்கு ஒரு பயம் வந்திச்சு! அவர் பார்த்த அந்தப் பார்வை என்னை அப்படிப் பயம் கொள்ளச் செஞ்சிருக்கணுமுங்க!" என்றாள் கன்னி நிலா.

"ஓ! அப்படியா!" என்றதோடு வீரபாகு நிறுத்திக் கொண்டார்

'ஸ்பெஷல் வார்டு' வந்தது.

அங்கு அவளை வரவேற்ற அந்த உரையாடலை அவளால் மறக்க முடியாதுதான்!

"அந்தக் குருக்கள் பெரிய பேர்வழியாம்! பக்தி வேஷம் போட்டுக்கினு ஆட்டம் போட்டவராம்! கொஞ்சமுந்தி வந்து போன ஊர்வசிகூட அவரோடு

நாயகியாய் இருந்தவளாம்!...இப்போ அவர் கார் விபத்திலே அகப்பட்டுக்கிணு உசிருக்கு மன்றாடிறார்! யாரோ ஒரு பொண்ணும்!...கன்னத்திலே அழகு மச்சம் இருக்குமாம்! அந்தப் பொண்ணைப் பார்த்துப்பிட துடிக்கிறாராம்!...ஆமாடி, பாலா! யாருமே செஞ்ச தப்புக்கு கூலி வாங்காமல் தப்பிக்கவே விடமாட்டான் பகவான்!...அடேயப்பா, உலகம் சுத்த மோசம்!...சே!... நம் தமிழ்ச் சமுதாயத்திலே பெரிய மனிதர்களாட்டம் சிலபேர் உலாவுறாங்க!...பொய்யான இந்தப் போலி ஆட்களுக்கு என்னமோ ஒரு கிராக்கிதான்! எல்லாம் சாசுவதமா, என்ன?..."

குமாரி பரிமளம் தவித்தாள். 'சமுதாயத்தைப் நான் எண்ணமிட்டுத் தவிப்பது போலவே இந்தப் பெண்ணும் ஸ்டடி பண்ணியிருக்கிறாளே!'—

ஆண்டியாக அருணகிரி மடங்கினார்!

ஃ ஃ ஃ

அதோ, அவள் வீடும் வந்து விட்டது!

வீடா அது?

குடில்! முனிபுங்கவர்கள் அமைதியைத் தேடி தனிமையில் உள்ளம உறவாட அமைத்துக் கொண்ட மாதிரி அமைந்த சின்னஞ்சிறு மனை வஞ்சிக்கப்பட்ட தலைமகளாக சமுதாயத்துக்கு அஞ்சி ஒடுங்கி ஒதுங்கிய நிலையில் ஒதுக்கப்பட்ட நிலையில் பரிமளத்தை ஈன்றவளான சாரதாம்பாளுக்கு இப்படிப்பட்ட இடம்தான் சாந்தியை ஈந்தது போலும்! சுற்றிலும் வேலி அடைக்கப்பட்டு வேப்பங்கன்றுகள் வளர்க்கப்பட்டிருந்தன. 'க்ரோட்டன்சும்' எழிலூட்டின. சாரதாம்பாளின் ஜீவனைக் கட்டிக்காத்து, அவளது கருவில் வளர்ந்து பிறந்த ஜீவனையும் காப்பாற்றிய புண்ணியம் அந்தக் கிழவி மங்காத்தாளுக்குத்தான் உரியது. பல் போனாலும், சொல் போகாத கிழவி படுகோபக்காரி. சிடுமூஞ்சி என்றும் அவள் குணத்தை வரம்பு கட்டி உருவாக்க வேண்டும். அப்படிப்பட்டவள் தான் இப்போது

பரிமளத்துக்குக் காவல். 'ஸ்காலர்ஷிப்'பில் சாரதாவில் படித்த நாளிலும் கூட, மாலை வேளைகளில் அச்சகம் ஒன்றில் அச்சுக் கோக்கும் பணி செய்து முப்பது நாப்பது பணம் ஈட்டினாள் பரிமளம். ஆப்பம், இட்டிலி என்று சிறிய பலக்காரக்கடை நடத்தி வந்தாள் கிழவி. 5வரும் காலத்தை ஓட்டினார்கள்.

ஆயா என்னோட செல்வப் பெண்ணை வழிதப்பி இந்தப் பாவி வயித்திலே கொண்டுவந்து போட்டுப் பிட்டான ஆண்டவன். எம் மகளை மாலையும் கழுத்து மாகக் காணக் கொடுத்து வைக்காத பாவி ஆகிட்டேன். என்னை ஏமாற்றிய அந்தப் பாவியை என மகளைக் கொண்டு பழி வாங்கக்கூட முடியும்னு தோணலை! நான் எப்போ கண்ணை மூடுவேன்னு தெரியாது. ஆகச்சே, இப்பவே சொல்லிட்டேன். என் கண்மணியை நீதான் ஆத்தா கட்டிக் காக்க வேணும்! வயசுப் பொண்ணு! சமூகத்துக்குப் பயந்துதான் வாழ வேண்டும்! அதுக்கு நீதான் பொறுப்பு ஏற்றுக்கிட வேண்டும்! பரிமளத்தோட ஆசைப்படி, அது ஆசைப் படுகிற பிள்ளைக்கே அதைக் கல்யாணம் கட்டி வச்சிப்பிடு" என்பாள் சாரதாம்பாள்.

கிழவி மங்காத்தா காலடி ஓசை அறிந்து வாரிச் சுருட்டிக்கொண்டு எழுந்தாள், அவளுக்கு நல்ல தூக்கம்! அறைதைப் பள்ளியில் பரிமளத்தின் மன ஈரம் அவ ளுக்கு நிழல் அளிக்கிறது. இப்போது கை நிறையச் சம்பாதிக்கிறாள், பரிமளம்! பாவம் கவலையில்லை தான்!

"ஆயா" என்று கூப்பிட்டாள் பரிமளம்.

"யாரது?" என்று கோபமாக வினவியபடி எழுந் தாள் கிழவி. ஹரிக்கேன் விளக்கைத் தூண்டினாள். பரிமளதனதைக் கண்டதும் இழந்திருந்த நிம்மதியைத் திரும்பப் பெற்ற ஓர் அமைதி அவளிடம் தென் பட்டது. என்றாலும் சினம் அடங்கினதாகத் தென் படவில்லை.

"ஏம்மா, உன் தயவிலே நான் வயிறு வளர்க்கிறவள் என்கிறதாலேதானே நேற்று ராத்திரி வீட்டை விட்டுப் புறப்பட்ட ஒரு வயசுப் பொண்ணு இன்னிக்கு ராத்திரி வீட்டை மிதிக்கிறே?" என்று கேட்டாள்.

அவ்வளவுதான்!

பரிமளம் தூண்டில் புழுவானாள். "ஆயா" என்று விளித்து நிறுத்திவிட்டு, வாய் பேசாமல் நின்றாள்

கிழவியின் கோபம் எங்குதான் ஓடியதோ? பரிமளத்தின் கண்ணீரைத் துடைத்து விட்டாள்

"என்னம்மா ஆச்சு, நீ போன காரியம்?...வீரபாகு ஐயாவோட காரிலே நீ போனியாமே?" என்று கேட்டாள் மங்கத்தா.

எதைச் சொலவாள் பரிமளம்? பாவம்! 'கதை எழுதுற அந்தப் பிள்ளை மனம் ஒப்பிட்டால் உன் இஷ்டப்படியே அந்தப் பாண்டியன் கையிலேயே உன்னை ஒப்படைச்சிடுவேன். அப்புறம் எனக்குக் கவலையில்லை. கடமை முடிஞ்சிடும்' என்றாளே கிழவி? இப்போது நடந்தது என்ன? நேற்றிரவு அதிவீரராம பாண்டியன் முன்னே நடத்திய புரட்சிச் சோதனையை சத்தியத்தின் சோதனையாக்கி, தோல்வி கண்ட மனத்துடன் இரவோடு இரவாக பாண்டியனின் அறையை விட்டு வெளியேறி வழியில் சந்தித்த அவளது பள்ளித் தோழி தமிழ்செல்வியின் வேண்டுகோள்படி அவள் வீட்டுக்குச் சென்று காலையில் அங்கிருந்து திரும்பிய நேரத்தில் முருகன் கோயிலின் முன்னே புண்ணியக் கோடிக் குருக்களைச் சந்திக்க நேர்ந்த கதையைச் சொல்ல வேண்டும். அப்புறம் சங்கிலித் தொடர்ச் சம்பவங்களையும் தெரிவிக்க வேண்டும். அப்பால், புண்ணிய கோடிக் குருக்களை ஜெனரல் ஆஸ்பத்திரியில் சந்தித்ததும் விளைந்த அந்த அதிசயத்தையும் விவரிக்க வேண்டும். அதிசயமா அது? ஐயோ...!

பரிமளத்தின் குழம்பிய மனத்தின் சிந்தனை கலையவில்லை. அதற்குள் மங்காத்தா கிழவி குறுக்கிட்டாள்.

"அம்மா! சோறு துண்ணுட்டுத் தூங்கு! ஞாயிற்றுக்கிழமை துளிப் பொழுதுகூட படுத்து எந்திருச்சிருக்க மாட்டே நீ! ரோஜாப் பூ முகம் என்ன மாய் வாடிப் போயிருக்கு! நாளைக்கு விடிஞ்சால் ஆபீசுக்குப் போகணுமே நீ?" என்றாள். "எல்லாத்தை யும் காலம்பறப் பேசிக்கிடலாம்' என்றும் முடித்தாள்.

காலையில் அவள் வீரபாகுவோடு சிறுகதை மன்னனைச் சந்திக்க வேண்டும் அல்லவா?

பரிமளம் தனக்குப் பசியில்லை என்று மறுத்தாள். கிழவி கெஞ்சியும் கூத்தாடியும்கூட, அவள் பிடி சோறு உண்ணவில்லை. தொழிலதிபர் வீரபாகு கெஞ்சியும் சாப்பிட ஒப்பாத பரிமளம், கிழவியின் பேச்சுக்கு மட்டும் இசைந்து விடுவாளா, என்ன?

'உன் சோத்தை நீ துண்ணக் கூடாதா?" என்று மீண்டும் தொல்லை கொடுத்தாள் கிழவி.

பரிமளத்துக்குக் கோபம் வந்து விட்டது. "என் சோறு என்கிற ரகசியம்தான் இந்தக் குப்பத்துக்கும் தெரியும். எனக்கும் தெரியுமே? நீ போய்ப் படுத்துத் தூங்கு" என்று ஆணையிட்டாள் அவள்.

கிழவி அதற்கு மேல் வாய் திறக்கவில்லை.

மௌனமாக நின்ற பரிமளம் தன்னுடைய பள்ளி அறையை அடைந்தாள். ஜமுக்காள விரிப்பை உதறினாள். விரித்தாள். தன் கையால் பூ வேலை செய்த தலையணை உறை அவள் பார்வைக்கு இலக்கானது. 'இன்பம் வளர்க!' என்ற வாசகம் அவளைக் கண்டு சிரித்ததோ? ஆனால் அவளோ உள்ளுக்குள் மனத்திற்குள் விம்மி வெடித்து அழுதாள். புண்ணிய கோடிக் குருக்களின் முகம் அவளது மனக் கண்ணில் நிழலாடியது. "அட பாவி!" என்று வீரிட்டாள்.

## 27. சதுரங்கம் ஆடுகிறது!

மேனி நெடுகிலும் படர்ந்து பரவிய வலியின் பிறப்பாம் நெஞ்சம் என்ற உண்மையை குமாரி பரிமளம் தீர்க்கமாக உணர்ந்து கொண்டுதான் பாயையும், தலையணையையும் தஞ்சம் அடைந்தாள். நினைவுகள் விதியின் நிழல்களாக ஓடிப் பிடித்து விளையாட, இதயம் அவவேதனையின் நமைச்சலில் குமைந்து சுழல, இத்தகைய அவல நிலைமையில் அவளுக்கு உறக்கம் பிடிக்கும் என்ற எண்ணம் கிடையாது. என்றாலும், படுக்கை கொண்டாள். சபலம் என்ற விசித்திரம் யாரைத்தான் விட்டது? படுத்தவள், நிலை தடுமாறித் தளும்பியது சுடுவெள்ளம். தறிகெட்டுச் சுற்றியது மனம். எண்ணங்களின் விட்ட குறை—தொட்ட குறையாக புண்ணியகோடி குருக்களைப் பற்றிய ஞாபகம் தீக்கங்காகப் பற்றியது. "அட, பாவி!" என்று வீரிட்டலறிய அவள் குரல் அவளை மட்டும்தானா குலை நடுக்க வைத்தது?—பாவம், கிழவி மங்காத்தாளையும் அல்லவா திகைப்படையச் செய்து விட்டது!

"அம்மா...பரிமளம்!" என்று பதறித் துடித்தவளாக ஓடி வந்தாள் கிழவி. எட்டடிக்குச்சுக்குள் ஒண்டிக்கிடந்தவள், ராமையாவைத் தாண்டிக் கொண்டு ஓடி வந்தாள். "ஏம்மா அலறினே? பாவின்னு சொன்னியே யாரம்மா? அந்தப் பாவியைப் பத்திச் சொல்லு இப்பவே ஓடிப்போய், அவனைச் சாறு பிழிஞ்சு அவன் ரத்தத்தைக் குடிச்சுப்பிடுறேன். அப்பததான் அம்மா நான் உன் அம்மாவுக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்றினவளாக ஆக முடியும்!" என்று வீரம் பொங்க—வெஞ்சினம் பறக்கச் செப்பினாள்.

எழுந்து உட்கார்ந்து பரிமளம் ஹரிக்கேன் வெளிச்சத்தில் கிழவியின் சோர்ந்து தளர்ந்த முகத்தை ஊடுருவிப் பார்த்துவிட்டு விரயமான சோகம் மூள

புன்னகை செய்தாள். மார்பகத்தில் தவழ்ந்து விளையாடும் செல்வ மழலையாகப் பதிந்திருந்த சங்கிலியின் டாலரை நெருடிவிட்டவளாக, "ஆயா, அந்தப் பாவியை நான் பழிவாங்கிட்டேன்! நீ கம்மின்னு குந்திக்கோ!" என்றாள்.

"அப்படியா?"

"ஊம்!"

"உன்னைக் கல்யாணம் செஞ்சுக்கிடுறதாகச் சொன்னவன் நேற்று உன்னை ஏமாற்றிப் போட்டானா?"

"ஊஹூம்!"

"பின்னை, யார் அந்தப் பாவி?

எதைச் சொல்வாள்?

எதைச் சொல்லாமல் இருப்பாள்?

சேட் வீட்டிலும் தமிழ்ப் பாட்டை ரசித்துக் கொண்டிருந்திருக்க வேண்டும். "வேறென்ன வேண்டும், உன்னைத் தவிர?" என்ற பாட்டை இலங்கை வானொலி ஒலி பரப்பிக் கொண்டிருந்தது.

பரிமளம் மெய்ம்மறந்தாள். ஆனால், மெய்யை மறக்கவில்லை அவள். எனவே, மெய்வரலானது நடந்த கதை.

அன்றொரு நாள், அவள் சிறுகதை எழுத்தாளன் அதிவீரராம பாண்டியனோடு அவனுடைய அறையில் உரையாடிக் கொண்டிருந்தாள்.

அவன் ரேடியோ கிராமை இயக்கி விட்டான்.

"வேறென்ன வேண்டும் உன்னைத் தவிர?" என்ற திரைப்பாடல் ஒலித்தது.

அவன் அப்போது புதிதாக வளர்த்திருந்த இள மீசையைத் திருகிவிட்டபடி "பாட்டைக் கேட்டாயா, பரிமளா?" என்று கேட்டான்.

"ஓ! கேட்டேனே!"

"வேறென்ன வேண்டும், உன்னைத் தவிர!... ஊஹும், உங்களைத் தவிர!" என்று பாங்கு கூட்டி நகை செய்தாள் கன்னிப் பெண் பரிமளம்.

"ஆமாம், வேறென்ன வேண்டும். உன்னைத் தவிர?" என்று தன் போக்கில் பாடிக்கொண்டே இளமைக் கனவின் கம்பீரம் குலுங்கச் சிரித்தான் பாண்டியன்.

அவளுக்கு வெட்கம் வந்து விட்டது, வெட்கம்!

கற்பனையாளனுக்கு வெட்கத்தை ரசிக்கக் கசக்குமா, என்ன? ரசித்தான், ரசித்தான் அப்படி ரசித்தான்! "நான் கொடுத்து வைத்தவன்!" என்றான்.

"அதனால்தான் எடுத்துக் கொள்ளப் போகின்றீர்களா, பாண்டியன்!" என்றாள். பரிமளம் நயமான வாசகத்தை வெளியிட்டு விட்டு, அவனது மறு மொழிக்காகக் காத்திருந்தாள் ஆவலுடன்.

ஆனால், அவனோ மௌனமாகி விட்டான்.

அவளுக்குப் பகீரென்றது.

இப்போது கிழவி வாய் திறந்தாள்.

"சொல்லம்மா நடந்ததை! யாரைப் பழி வாங்கினே?" என்று நினைவூட்டினாள்.

"என் தாயை வஞ்சித்த பாவியைப் பழிவாங்கி விட்டேன், ஆயா!" என்றாள் பரிமளம். அவளது பேச்சின் நிதர்சன சாட்சியம் போன்று, அவளது சிவந்த முகம் மேலும் சிவப்படைந்தது.

"அப்படியா?"

"ஆமாம்?"

"கண்டு பிடிச்சிட்டியாம்மா அந்தப் பாதகனை?"

"நான் கண்டு பிடிக்கல்லே, ஆயா. நான் நம்பிக் கிட்டிருந்த தெய்வம் அந்தத் துரோகியை காட்டிக் கொடுத்திடுச்சு! ஊஹூம், அப்படிக்கூட சொல்லப் படாது. அந்தப் பாவியே தன்னை இனம் காட்டி என் காலடியியே சரணுகதி அடைஞ்சிட்டான்!"

"எங்கே?"

"ஜெனரல் ஆஸ்பத்திரியிலே."

"அப்படியானால், அந்தப் பாவி செத்துத் தொலைஞ் சிட்டானு?"

"சாகவிடல்லே நான்?"

"ஏம்மா?"

"சாகாமல் இருந்தால்தானே தான் செஞ்ச பாவத்தை நினைச்சு நினைச்சு இன்னமும் வெந்து நொந்துக்கிட்டு இருக்கலாம்!"

"அம்மா பரிமளம், நான் அந்த எமனைப் பார்க்கணுமே."

"நீ பார்க்க முடியாது ஆயா! அது ஒரு கதை. அப்புறம் தான் சொல்ல வேண்டும்' என்று அந்தப் பேச்சுக்கு முற்றுப்புள்ளி இடலானுள் பரிமளம்.

பரிமளத்தின் கண்டிப்பை உணர்ந்தவள் மாதிரி கிழவி நகர்ந்தாள்.

கன்னி நிலா அழகி படுக்கையை சரண் அடைந்தாள்.

வீரபாகு எவ்வளவு தூரம் கெஞ்சினர் அவளிடம் அந்தப் பாவியை மனனித்து விடும்படி.

"நான் உங்கள் மகளாக ஆகி விட்டேன் என்றுலும் ஒரு விஷயத்திலே தயவு செய்து என்னை மன்னிக்கத் தான் வேண்டும் அப்பா. குற்றம் செய்வது மனித இயல்பு என்பார்கள். குற்றத்தை மன்னிப்பது தெய் வீகம்' என்பார்கள். இந்த இரண்டு வாசகங்களை

அனுபவ பூர்வமாக உணர்ந்தறியாத எவனோ ஒருவன் உளறிவிட்டுப் போயிருக்கிறான் நான் அந்தத் துரோகியை மன்னிக்க முடியாது. மன்னிக்கத் தயாராகவும் இல்லை. என்று வெட்டு ஒன்று துண்டு இரண்டாகத் தீர்ப்பு வழங்கி விட்டாள் பரிமளம்.

நாளைக்கு திங்கட்கிழமை அலுவலகம் செல்ல வேண்டும்.

அலுவலகச் சூழ்நிலையைத் தன்னுடன் உருவகம் செய்து கொண்டாள் பரிமளம். தோழி மார்களின் நினைவு முகங்களை நெஞ்சில் நிறுத்தினாள் அவள். 'உன் அம்மாவை வஞ்சித்தவரை நீ எப்படியும் கண்டே தீருவாய் பரிமளம்!' என்றார்களே காமாட்சியும் ரோஸியும்!—அவர்களின் வாய்களுக்குச் சர்க்கரைப் போட வேண்டும் அ...ப்...ப...ா...!

பேசப் பழகும் குழந்தை போல தன்னுள் இந்தப் பாசச் சொல்லை உச்சரித்தாள் பரிமளம். முருகக் கோவில் குருக்கள் புண்ணியகோடியின் முகம் அவளுள் விதியின் நிழலாகத் தோன்றியது.

கனு கண்டு விழிப்பவள் மாதிரி எழுந்தாள். கோல விழிகளைக் கசக்கிக் கொண்டாள். செருமல் நிற்கவில்லை. "அப்பா!" என்று மீண்டும் அழைத்தாள். அவள் எதிர்பார்த்தபடியே தொழிலதிபர் வீரபாகுவின் அன்பு முகம் அன்று நிழலாகத் தோன்றியது. 'எனக்குக் கிட்ட முடியாத அப்பா என் விதியாகி விட்டார் எனக்குக் கிட்டிய அன்பர் தெய்வமாக இருக்கின்றார்'—கண்ணீரைத் துடைத்தாள் பரிமளம். தன்னுடைய மானத்தைக் காப்பாற்றத் தெய்வமாகத் தோன்றிய வீரபாகுவையும் அவரைச் சந்திக்க வாய்ப்பு ஏற்படுத்தித் தந்த விதியின் அன்பையும் அவள் நினைவு கூர்ந்த நேரத்தில், காலையில்தான் வீரபாகுவுடன் அதிவீரராம பாண்டியனின் பங்களாவுக்குச் சென்று அவனைச் சந்திக்க வேண்டிய நிகழ்ச்சிப் பற்றி ஞாபகமூட்டியது இடைச் செருகலாக அவள் மன அந்தரங்கத்தில் தோன்றியது. அவள் மேனி அல்லாடத் தொடங்கி விட்டது.

'மிஸ்டர் பாண்டியன்! என்னுடைய அலுவலகத் தோழிமார்கள் நல்வாக்குக் கொடுத்த மாதிரி, நான் உங்களை அடையக் கொடுத்து வைத்திருப்பேனு? நாளை விடியும் பொழுது நல்லப் பொழுதாக விடியுமா? நல்ல வாக்குத் தருவீர்களா, மிஸ்டர் பாண்டியன்?'

'நீங்கள் நஞ்சு! என்றாலும் நஞ்சுக்கு மத்தியில் தானே அமுதமும் பிறந்தது?...உங்களைத் திருத்தி, உங்களை என் ஒருத்தியின் பாண்டியனாக ஆக்கக் கொள்வேன்!...'

சபலம்; சலனம், ஆசை, வைராக்கியம், ஏமாற்றம், நம்பிக்கை போன்ற உணர்வுகள் பரிமளத்தின் நெஞ்சத்தை ஆட்டிப் படைத்துக் கொண்டிருந்தன. இப்போதும், அவள் தான் நம்பும அந்தத் தெய்வததை தான் நம்பிக்கொண்டிருக்கிருள்!... ஆம்!...விதி சதுரங்கம் ஆடுகிறது இல்லையா?

# 28. டப்பு பை!

பொழுது விடிந்தது. குமாரி பரிமளம் படுக்கையை விட்டு எழுந்தாள். ஞாயிற்றுக் கிழமைப் பொழுது எத்தகைய பயங்கரப் பாதையில் சென்று திரும்பி ஓடி விட்டது என்ற சிந்தனையில் இரவு பூராவும் உறக்கம் பிடிக்காமல் புரண்டு புரண்டு படுத்து, எப்படியோ கழித்து விட்டாள்.

திங்கட் கிழமை விடிந்து விட்டது அலுவலகச் சுழலை நெஞ்சில் எண்ணிப் பார்த்த நேரத்தில், இனம் புரியாத புதிய தெம்பு அவள் மனத்தில் ஊறத் தொடங்கியது. ஒரு புதிய மாற்றுக் கிடைத்த மாதிரி கிடைக்கப் போவது மாதிரி, அவளுள் உணர்வு பிறந்தது. அவ்வுணர்வுதான் அவளுக்குப் புதிய தெம்பை அருளியதோ?

திங்கட் கிழமையைப் பற்றி நினைத்துக் கொண்ட பரிமளத்திற்கு, அன்று சிறுகதை மன்னன் அதிவீர ராம பாண்டியனைச் சந்தித்தாக வேண்டிய திட்டம் பற்றிய ஞாபகம்தான் முதன் முதலாக எழத் தொடங்கியது. முன்பெல்லாம் மிஸ்டர் பாண்டியனைச் சந்திப்பதென்றால், மனத்துக்கு எவ்வளவு இதமாக இருக்கும்! இப்போது ஏன் என் மனம் இனம் விளங்காமல் தவிக்கிறது? மலரும் தென்றலுமாக இணைந்து பிணைந்து இருந்த எங்கள் காதல் எப்படி எப்படியெல்லாம் திசை திரும்பிப் போய்விட்டது?' என்ற நினைவுகள் எழுந்தன.

அவள் விழிகள் கசியத் தொடங்கின. நெஞ்சின் அழுகை கண்களில் வழிந்தது. பெருமூச்செறிந்தாள். அழகான இளம் மார்பகத்தில் செல்லப் பிள்ளையாகத் தவழ்ந்து கிடந்த தங்கச் சங்கிலி மார்பின மையத்தில் எம்பி அடங்கிவிட்டது. புடவையைச் செம்மைப்படுத்தியவளாக எழுந்தாள்.

கிழவி மங்கத்தா குறிப்புணர்ந்து வெந்நீர் வைத்து இறக்கி வைத்திருந்தாள்.

"அம்மா குளிச்சிடு!" என்று நினைவு படுத்தினாள். கிழவிக்கு பரிமளம்—பாண்டியன் புதிய சந்திப்புத் திட்டம் பற்றிய விவரம் தெரியாது பரிமளம் இது வரை சொல்லவில்லை. இந்தச் சந்திப்பு கிழவியிடம் சொல்லத் தக்க வகையில் அப்படி ஒன்றும் முக்கியமானதல்ல என்ற கருத்துக் கொண்டிருந்தாள் பரிமளம். ஆகவேதான் சொல்லவில்லை போலும்!

குளிக்கச் செல்லும் முன், உடுத்துக் கொள்ள வேண்டிய புடவையை எடுக்க டிரங்குப் பெட்டியைத் திறந்தாள் பரிமளம். இளங்காலைப் பொழுதின் மஞ்சள் கிரணங்கள் திறந்து கிடந்த பெட்டிக்குள் விளையாடத் தலைப்பட்டன. மேல் வசமாக இருந்த டெர்லின் நைலக்ஸ் சேலையை எடுத்தாள். வெளிர் ரோஸ் நிறம் எடுப்பாக இருந்தது. அதே நிறத்தில் இருந்த சோளியையும் எடுத்தாள்.

அந்தப் புடவையையே இமை மூடாமல் சிந்தனை வசப்பட்ட நிலையில் பார்த்துக் கொண்டு இருந்தாள் பரிமளம். 'இந்தப் புடவைதான் அன்று என் மானத்தைக் காப்பாற்றியது. அல்ல, என் மானத்தைக் காப்பாற்றியவர் தொழிலதிபர் வீரபாகு. அவர்கள்!...என் அப்பா!...ஆம்; அப்பா!—'அப்பா' என்ற பாசச் சொல்லின் உச்சரிப்பில் அவள் ஓர் அரைக் கணம் தன்னை மறந்தாள். நினைவுகள் முன்னும் பின்னுமாக ஆலவட்டம் சுற்றின. எதை நினைப்பாள்? எதைத்தான் மறப்பாள்?

மாம்பலம் ரயில்வே கேட் வரை தம்முடைய படகுக் காரில் கொண்டு வந்து விட்டுச் சென்றார் வீரபாகு. வீடு வரை வருவதாகச் சொன்னார் அவர். ஆனால் பரிமளம்தான் வழியிலேயே இறங்கி விட்டாள். பங்களா வாசியான அந்தப் பெரும் பணக்காரர் தன்னுடைய ஏழ்மைக் குடிலைத் தரிசிப்பானேன் என்ற நினைப்பு ஒரு புறம்; அவர் வந்தால், அவரை எங்கே உட்கார வைப்பது. எப்படி வரவேற்பது என்ற தவிப்பு மறுபுறம்; இத்தகைய காரணங்களின் நிமித்தம்தான் அதிவீரராம பாண்டியனைக்கூட அவள் இங்கு அழைத்து வர ஒப்பாமல் இருந்தாள் சூழ்நிலை தன் பக்கம் சாதகமாக அமைந்து விட்டால், ஒரு நாளைக்கு அவள் பாண்டியனை இங்கு அழைத்து வந்து உபசரிக்கத்தான் போகிறாள்! அதே மாதிரி வீரபாகுவையும் அழைக்கத்தான் போகிறாள்!

கீற்றுத் தடுப்புக்குள் நுழைந்தாள் பரிமளம். பிரஷை எடுத்தாள். மனதிற்குள் சிரிப்பு மூண்டது. தன் நிலையை எண்ணித்தான் அந்தச் சிரிப்பு பீரிட்டது. வீரபாகுவின் பங்களாவில் தங்கிக் கழித்த பொழுதுகளில் கிடைத்த வசதிகள் நினைவில் குமிழ் பறித்தன. அங்கு பொத்தானை அழுத்தினால் சுடுநீர் கொட்டும், இங்கோ?—பின், சிரிப்பு வராமல் இருக்குமா?

நீராடி நீர் சொட்டும் குழற்கற்றையை அள்ளிச் செருகிய வண்ணம் குழலின் உட்பகுதியை அடைந்தாள்.

அந்தப் புடவையை உடுத்துக் கொண்டபோது அவள் மனக்கண்ணில் வீரபாகு தோன்றினர். அவர் அவளது மானத்தைக் காப்பாற்றிய தெய்வம். அடுத்ததாக, இன்னொரு முகமும் அவளுள் தோன்றத் தொடங்கியது. அது அவள் தோழியின் முகம். 'சரளா!' என்று முணுமுணுத்துக் கொண்டாள். மோகினி போன்ற வனப்பும் வடிவமும் பூண்ட சரளாவின் முகம் அது!

"சரளா! உன் பெயரை மோகினி என்றே வைத்துக் கொண்டிருக்கலாம்! பெண்ணுக்குப் பெண் மயங்கும் அழகு கொண்டவள் நீ!" என்பாள் பரிமளம். ஆனால் சரளாவோ, "உன்னுடைய அழகுக்கு என் அழகு எம்மாத்திரம்" என்பாள்.

ஒரு நாள்:

சரளா தன்னுடைய உப தொழிலுக்காக தண்டையார் பேட்டைப் பகுதியில் நிகழ்ந்த இரட்டைக் கொலை பற்றிய விவரங்களைச் சேகரிக்க மோட்டார் சைக்கிளில் சென்றாள். வழியில் சைனுபஜார் பகுதியில் சந்தித்த பரிமளாவையும் துணைக்கு அழைத்தாள். பரிமளமும் ஒப்பினள். மோட்டார் சைக்கிளின் பின் சீட்டில் அமர்ந்து கொண்டாள் அவள். சைக்கிள் ஓடியது. வழியில் மோட்டார் சைக்கிள் சக்கரத்தில் பரிமளத்தின் நைலான் புடவையின் தலைப்பு சிக்கிக் கொண்டது. சுழன்ற பின் சக்கரத்தில் சுற்றிக் கொண்ட புடவைத் தலைப்பு விதியாகச் சிரித்தது. சேலைப் பகுதி சிக்கியதை அறிந்த பரிமளம் தவித்தாள். தோழியிடம் செய்தியைச் சொல்லி, மோட்டார் சைக்கிளை நிறுத்தச் சொன்னாள் ஆனால் சைக்கிளில் ஏற்பட்ட பழுதின் காரணமாக, சைக்கிள் நிற்கவில்லை. ஓடிக்கொண்டேயிருந்தது, பரிமளம் புரண்டு தரையில் சாய்ந்து விட்டாள். உள்பாவாடை மட்டுமே எஞ்சி நின்றது. அந்த நேரத்தில் தெய்வம் போல வந்தது வீரபாகுவின் இம்பாலா படகுக்கார். மல்லாந்துகிடந்த அழகுத் தேவதை பரிமளத்தைக் கண்டதும் காரை நிறுத்தினர். நடந்த நிலையைப் புரிந்து கொண்டார்.

மனைவிக்காக வாங்கிச் சென்ற இந்த டெர்லின் நைலக்ஸ் புடவையைப் பிரித்து பரிமளத்திடம் நீட்டினார். பரிமளமும் அதை வாங்கி உடுத்திக் கொண்டாள். உடனே கைகூப்பி வீரபாகுவை வணங்கி நன்றி சொன்னாள். "உங்களை என் தந்தையாகவே மதித்து வணக்கம் செய்தேன்," என்று தெரிவித்தாள். அழகிகளைக் கண்ட சடுதியிலேயே 'கெட்ட நோக்கம்' கொண்டு பழகி வந்த வீரபாகுவிற்கு பரிமளத்தின் இப் பேச்சு ஒரு புத்தம் புதிய பாசத்தை வழங்கி விட்டிருக்க வேண்டும். "நானும் ஒரு மகளுக்குச் செய்ய வேண்டிய கடமையாகவே தான் அம்மா இந்த உதவியை—அல்ல, என் கடமைச் செய்தேன்!" என்றார். கண்ணீரைத் துடைத்துக் கொண்டார்.

அந்தத் தோழி சரளாவைச் பரிமளம் சந்தித்து பத்துத் தினங்களுக்கு மேல் இருக்கும் அல்லவா?...

முகம் பார்க்கும் கண்ணாடியில் பரிமளம் அழகு பார்த்தாள். தன்னுடைய இடது கன்னத்து மச்சம் அவளை மீண்டும் சிந்தனை வயப்படச் செய்தது. தெய்வம் எனக்கு இந்த திருஷ்டி மச்சத்தை காரணத்தோடுதான் வைத்திருக்கிறது; ம்... இல்லாவிட்டால், புண்ணியகோடி குருக்கள் என்னை இனம் கண்டு கொண்டிருக்க முடியாதல்லவா! என்று நினைத்துப் பார்த்தபோது விழி நீர் மின்னியது.

நெற்றிக்குத் திலகம் இட்டுக் கொண்டு திரும்பினாள் குமாரி பரிமளம்.

"அம்மா பரிமளம், பலகாரம் வச்சிருக்கேன். துண்ணம்மா—உன்னை கதை எழுதுற பாண்டியன் கல்யாணம் பண்ணிக்கிடுற காட்சியைக் கண்குளிரப் பார்த்திட்டால், நான் போயிடுவேன் அம்மா உனக்கு ஒரு காப்பு கிடைத்துட்டால்தானே அம்மா நான் உன் தாய்க்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்றினதாக ஆகும்" என்றாள். அவள் கண்கள் கலங்கின. தொண்டை அடைத்தது.

கிழவியை ஏக்கம் சூழ நோக்கினுள் பரிமளம். உணர்ச்சி வசப்பட்டு அப்படியே நின்ருள். பெருமூச்சு புறப்பட்டது. பதில் ஏதும் சொல்லாமல் பலகாரத் தட்டின் முன்னே அமரலாஞள்.

அப்போது, "பரிமளம்!" என்ற அழைப்பொலி கேட்டது.

எழுந்து வந்தாள் பரிமளம்.

"ஓ சரளாவா? வா, வா!" என்ருள் பரிமளம்.

சரளா மோகினி அவதாரம் கொண்டவளாக அழகு குலுங்க வந்து நின்ருள். அவள் கையில் இருந்த டம்பப்பையில் பச்சைவண்ண நாட்குறிப்பொன்று தலை நீட்டியது.

"சௌக்கியமா?"

"உன் பாண்டியன்?"

"என் பாண்டியன்?..."

"அவரும் நலம் தானே?"

"ஓ!"

"எப்போது கல்யாணம்."

"நடக்கும்போது!"

"எப்போது நடக்கும்?"

"யாருக்குத் தெரியும்?" என்ருள் பரிமளம்.

சரளா சிரித்து விட்டாள். அந்தச் சிரிப்பின் தன்மையை பரிமளம் அவ்வளவாக விரும்பவில்லை என்பதை அவளது முகக்குறிகள் துல்லிதமாக எடுத்துக் காட்டின.

உட்காரப் போனுள் சரளா. வழியில் இருந்த பானை ஒன்று தடுக்கவே, சமாளித்துக் கொண்டாள். ஆனுல்

கையில் மண் தரையில் விழுந்தது, டம்பப்பை. அந்த டம்பப் பையினின்றும் பிரிந்து விழுந்தது ஒரு புகைப் படம்!

அந்தப் படம் எழுத்துலக மன்னன் என்ற பட்டம் சூட்டிக் கொண்ட அதிவீரராம பாண்டியனின் நிழற் படம்!...

# 29. 'மெய்தானோ?'...

அதிவீரராம பாண்டியனின் புகைப்படத்தைக் கண்டதும் குமாரி பரிமளம் பதை பதைத்தாள். உள்ளத்தில் ஏற்பட்ட சலனம் உடலின் ரத்த நாளங் களிலே கொதிப்பை உண்டாக்கியது. முகத்தில் திரை யிட்டிருந்த வேர்வை மணிகளைத் துடைக்கக் கூட சிந்தையிழந்து சிந்தனை வசப்பட்ட கோலத்துடனேயே ஆருயிர்த் தோழி சரளாவை ஏறிட்டுப் பார்த்தாள். அவள் பார்வை சரளாவின் போக்கைத் துப்பறியத் துடிக்கின்ற பாவனையில் ஊடுருவியது.

"என்ன அப்படிப் பார்க்கிறாய் பரிமளம்?" என்று சிநேகிதியை விசாரிக்கலானாள் சரளா.

மோகினி அவதாரம் கொண்ட பாங்கில் மோகக் கிளர்ச்சியின் மேலுணர்வுகள் சிந்தி நின்ற சரளாவின் கவர்ச்சி மிக்க உதடுகளிலே நளினமும் சாகசமும் மண்டிய விஷமப் புன்னகை நெளிந்தது.

"இந்தப் படம் நீ காதலிக்கும் மிஸ்டர் பாண்டிய னின் போட்டோ, எப்படி என்னுடைய டம்பப்பைக்கு வந்தது என்று யோசிக்கிறாயா?" என்று வினவினாள் அவள். 'ஸ்டெட்' தோடுகள் மின்னிச் சிரித்தன.

பரிமளம் வாய் மூடி மௌனம் காத்தாள். விற் புருவங்கள் துடித்தன. விரிந்தது, அழகின் பிறப்பிட மாகத் திகழ்ந்து பொலிந்த மார்பகம். அழகு கூட்டி—

அந்தம் காட்டி எம்பியது; தாழ்ந்தது. சரளாவின் கைக்குச் சிக்கிய இந்தப் புகைப்படத்தின் நினைவு அவளுள் நடந்த நிகழ்ச்சி ஒன்றையும் நடத்திக் காட்டியது தேவமனோஹரி காண்பித்த அதிவீரராம பாண்டியனின் கடிதம் பற்றிய நிகழ்ச்சிதான் அது. தேவமனோஹரிக்கு பாண்டியன் ஏன் கடிதம் எழுதினார்? இப்போது, சரளாவிடம் பாண்டியனின் போட்டோ சிக்கியிருக்கிறதே? காரணம் என்ன? நினைவுகள் தட்டா மாலை சுற்றின.

"பரிமளா!"

"ஏன்?"

"உன் காதலுக்குப் போட்டியாக முளைத்து விட்டேனோ நான் என்று தவிக்கிறாயா, பரிமளம்?"

வேதனையுடன் சிரிக்க மட்டுமே பரிமளத்தால் முடிந்தது. நெடுமூச்செறிந்தாள்

"காதல் கதையில் போட்டியும் பூசலும்தான் சஸ்பென்ஸ்!—எனக்குப் புரியாமல் இல்லை, சரளா?" என்றாள்.

"அப்படியென்றால், நீ என்னைச் சந்தேகப்படுகிறாயா?"

"உன் பேரில் சந்தேகப்பட நான் யார்?"

"நீ என் தோழி!" என்று தெரிவித்தாள் பரிமளம்.

அவளது பேச்சு சரளாவின் மனச் சாட்சியின் உணர்வுகளைச் சாடி விட்டதோ? அவள்—சரளா ஓர் அரைக்கணம் பேசாமடைந்தையானாள். உண்மையைச் செப்பிவிட வேண்டும் என்றுதான் துடித்தாள். ஆனால் மறுகணம் அவள் மனம் மாறிவிட்டது

"பரிமளம்! மிஸ்டர் அதிவீரராம பாண்டியனின் எழுத்துக்கள் உன்னைப்போல் என்னையும் வெகுவாக கவர்ந்து விட்டன. பிரபல எழுத்தாளரின் புகைப் படத்தைப் பெற்று என் வீட்டில் வைக்க வேண்டும்

என்ற ஆசை நேற்று கை கூடியது. அவரே விரும்பிக் கொடுத்த படம்! நான் புகைப்படங்களைச் சேகரம் செய்யும பழக்கம் கொண்டவள் என்கிற உண்மைதான் உனக்குத் தெரியுமே, பரிமளம்" என்றாள் சரளா.

அந்தப் பேச்சு பரிமளத்தின் ஞாபக மறதியைப் போக்கடித்தது. இப்போது, புதிய நினைவொன்று பளிச்சிடத் தொடங்கியது. ஒரு சமயம்—அதாவது சரளாவின் பழக்கம் கனிந்த தொடக்கத்தில், பரிமளத்தின் நிழற்'படத்தை வேண்டி—விரும்பிப் பெற்றுக் கொண்டாளே இந்தச் சரளா? பிறிதொரு சமயத்தில் தொழிலதிபர் வீரபாகு மாம்பலம் பள்ளி விழா ஒன்றில் தலைமை உரை ஆற்றிய சம்பவத்தை தான் பணி புரியும் ராணி இதழுக்கு அனுப்பும்போது, அவரது படத்தைக் 'கேட்டு வாங்கிச் சென்றதாகக் கூறியதை யும் அவள்—பரிமளம் நினைவுபடுத்திக் கொண்டாள். இவ்விரு நிகழ்வுகளின் கதையும் பரியளத்தின் நெஞ்சத் திலே ஒரு புதிய நினைவை—நினைவின் நிழலைக் கோடு கிழித்துக் காட்ட ஆரம்பித்து விட்டது. அந்தச் சூழலிலே, அவளது மனத்திரையில் பெங்களூர் மஞ்சள் பத்திரிகையான, 'சினிமா நேசன்' இதழும் விசுவரூபம் எடுத்தது.

"தொழிலதிபர் வீரபாகு—அனுதை அழகி குமாரி பரிமளம காதல் லீலைகள்!" என்ற அவதூறுத் தலைப்புச் செய்தியும், விதியின் ரேகையாக ஓடியது. சாளாவின் புகைப்படச் சேகரிப்புப் பொழுது போக்கும், பத்திரிகை நிருபர் பணியும், சினிமா நேசனின் அபவாதச் செய்தி யும் இணைந்து கலந்து பரிமளத்தின் உள் மனத்தில் ஒரு புதிய ஐயப்பாட்டை நிலை கொள்ளச் செய்ததில் வியப்பில்லை அல்லவா? இந்தச் சந்தேகம் இப்போது விஸ்வரூபம் எடுக்க கை கொடுத்தது, பாண்டியனின் படம்! அதாவது சரளாவின் உடமையாக்கப்பட்டு விட்ட அந்தப் புகைப்படம்! இந்த சரளாதான் ஒரு வேளை, சினிமா நேசனுக்குத் தவருன செய்தியைக் கொடுத்திருப்பாளோ? சரளா அவ்வாறு செய்திருப் பாளா? என்மீது கொள்ளை அன்பு கொண்டவள்

ஆயிற்றே அவள்? ஒருகால், பாண்டியனை அவளும் நேசிப்பாளோ? மோகினி போன்ற அழகு கொண்ட சரளாவை எந்த ஆண்பிள்ளை தான் விரும்ப மறுப்பான்? மேலும் பாண்டியன் தான் அழகிகளைச் சுற்றித் திரியத் தலைப்பட்டு விட்டாரே? பரிமளத்தின் தலை கிறு கிறுத்தது.

° ° °

"பரிமளம்!" என்று விளித்தாள் சரளா. வாசலிலேயே இளம் வெய்யிலில்தான் இன்னமும் நின்று கொண்டிருக்கின்றாள்.

"சொல், சரளா, சொல்!"

"ஒரே சிந்தனையில் மூழ்கி விட்டாயே, தோழி!"

"ஆமாம், மூழ்கித்தான் விட்டேன்!"

"என்ன சொல்கிறாய்?"

"என்னைப் பற்றின சிந்தனையில் மூழ்கித்தான் விட்டேன்!"

சரளா நளினமாகச் சிரித்தாள் "உன்னைப் பற்றிய சிந்தனையில் மூழ்கி விட்டாயா? நான் நம்பமாட்டேன், ஏன் தெரியுமா? உன்னைப் பற்றிச் சிந்திக்கத்தான் மிஸ்டர் பாண்டியனும் தொழிலதிபர் வீரபாகுவும் இருக்கிறார்களே, இந்தச் சென்னை மாநகரத்திலே?"

சரளாவை ஏற இறங்க நோக்கினாள் பரிமளம். அவள் பேச்சே இயல்பானதாக எடுத்துக் கொள்ள மனம் கொள்ளவில்லை அவள். உள் அர்த்தம் எதையோ வைத்து ஒப்பனைக்குப் பேசுவதாகவே அவளுக்குப் பட்டது.

"நீ என்ன சொல்கிறாய், சரளா?" என்றாள்.

"உனக்குப் புரியவில்லையா, என்ன?"

"ஊம்!"

"உன் காதலுக்குப் பாத்திரமாகியிருக்கிறார் பாண்டியன். உன் பாசத்துக்கு உரியவராக இருக்கிறார் வீரபாகு. உன்னைத் திருமணம் செய்துகொள்ளப் போகிறார் பாண்டியன்! இப்போதாகிலும் புரிகிறது அல்லவா, பரிமளம்?"

'பரிமளா' என்ற விளிச் சொல், பாண்டியனை நினைவூட்டியது போலும்! ஒரு விநாடி அவள்—பரிமளம் மெய்ம் மறந்தாள். பாண்டியனை இன்று காலை சந்திக்கப் போகும் திட்டம் அவளுள் புல்லரிப்பை உண்டாக்கியது. சரளாவை நோக்கி புன்முறுவல் காட்டினாள். இடது கன்னத்து மச்சம் பளிச்சிட்டது.

"பரிமளம், உன்னுடைய திருஷ்டி மச்சம் ரொம்ப ஜோர்!"

"ஓ, அப்படியா?"

"ஊம்!"

"ப்ளீஸ், எக்ஸ்யூஸ் மீ!...நின்னுக்கிட்டே இருக்கியே; உட்கார்"

"எனக்கு ஜோலி இருக்கு!"

"அப்படியா? என்னைப் பார்க்க வந்ததிலே விசேஷம் ஏதேனும் இருக்கா?"

"தோழிகள் சந்திப்பதில்—சந்தித்துக் கொள்வதிலே விசேஷம் என்ன வேண்டிக் கிடக்கு? நான் இப்போது பத்திரிகை நிருபராகவா உன்னைப் பார்க்க வந்தேன்?"

"ஓ!...ஆல்ரைட்!"

"ஒரு விஷயம் சொல்ல வேண்டும்!"

"சொல்லேன்!"

"என் மோட்டார் சைக்கிளை விற்று விட்டேன். ஸ்கூட்டர் வாங்கப் போகிறேன்,"

"என்னையும் துணைக்கழைத்து விடாதே தாயே?"

"ஓ! பழைய நிகழ்ச்சியை வைத்து இப்படி வேண்டுதல் விடுக்கிருயா? ஆனால், ஒன்றை நீ வாழ்த்த வேண்டும்! என் மோட்டார் சைக்கிளை நீ மறந்துவிட முடியாது. அதுதானே உனக்கு வீரபாகுவின் பரிச்யத்தை ஏற்படுத்திக் கொடுத்தது?"

"வாஸ்தவம்தான்!"

"ஆனால், வீரபாகுவின் ஸ்திரீலோலப் போக்குத்தான் இன்னமும் மாறவில்லை. உன்மீது அவர் உண்மையான பாசம் வைத்திருக்கலாம். ஆனால் அந்தப் பாசத்தை உலகம் பாசமாக ஏற்றுக் கொள்ள மறுக்கிறது" என்ருள் சரளா.

அவள் பேச்சு பரிமளத்தைச் சுட்டெரித்தது. கண்கள் கசிந்தன. 'சரளா சொல்வது உண்மை தானே—?'

ரேடியோவில் திரைப்படப் பாடல் ஒன்று கேட்டது.

பாண்டியனைச் சந்திக்க எட்டு மணிக்கெல்லாம் புறப்பட்டு விடவேண்டுமென்ருர் வீரபாகு. அவரே வந்து அவளை—பரிமளத்தை அழைத்துச் செல்வதாகக் கூறிஞர். ஆனால் பரிமளமோ, தானே வீரபாகுவின் பங்களாவுக்கு வந்து விடுவதாகச் சொல்லி விட்டாள்.

அப்போது:

தொழிலதிபர் வீரபாகுவின் படகுக் கார் அந்தக் குடிலின் வாசலில் வந்து நின்றது.

# 30. உயிர்ச் சரண்!...

ஸ்ரீதேவி வீடு தேடி வருவதாகச் சொல்வார்கள் அல்லவா?

ஆனால் யாரும் அந்தக் காட்சியைப் பார்த்தது கிடையாது.

இப்போது வலிய வந்த சீதேவியாக வாசலில் சின்னஞ்சிறு குடிசையின் வாசலில் வந்து நின்ற அந்தப் படகுக் காரைக் கண்டதும் பரிமளத்தின் நெஞ்சிலே இனம் புரிந்த பதட்டம் பல்வேறு உணர்வுகளை உள்ளடக்கிக் கிளர்ந்தெழுந்தது.

"வாங்க!...வாங்க அப்பா" என்று இன்முகம் ஏந்தி முகமன் மொழிந்தாள், அவள். இடது கன்னத்தின் திருஷ்டி மச்சம் பாங்குடன் ஒளிர்ந்தது.

வாசல் வெய்யிலில் நின்று கொண்டிருந்தார், தொழிலதிபர் வீரபாகு. "ஆகட்டும் வர்றேன்" என்று சொல்லிய வண்ணம் செருப்புகள் சரசரக்க வாசலில் தெளித்திருந்த சாணத்தினால் மெருகும் பொலிவும் கண்ட மண் தரையில் மயில்கண் ஜரிகை வேஷ்டி சலசலக்க நடந்தார், அவர். அவருடைய பார்வையில் சரளா தென்பட்டாள். 'யார் இந்தக் குட்டி? எங்கே எப்பொழுதோ பார்த்தாற்போலிருக்கே படா ஷோக்காய் இருக்காளே மோகினியாட்டம்?' என்று யோசிக்கலானார். அவளை அவர் ஊடுருவி காமக் குறியீட்டுடன் நோக்கிய போது சரளாவின் பார்வையும் அவர் மீது ஆரோகணித்திருந்தது.

"வணக்கம் ஐயா?" என்றாள் சரளா.

"வணக்கம். வணக்கம்" என்று குழைந்தார் வீரபாகு.

"உங்களுக்குத் தெரிந்த பெண் தான். சரளா என்று பேர்" என்று நினைவூட்டினாள். குமாரி பரிமளம். விழா நிகழ்ச்சி ஒன்றிற்காக வீரபாகுவின் போட்டோவை வாங்கிச் சென்ற விவரத்தையும் அவள் நினை வூட்டினாள்.

"ஓ!" என்றார் வீரபாகு. பரிமளம் கூறிய குறிப்பின் விவரம் அவருக்கு ஞாபகத்திற்கு வந்து விட்டது. சமீபத்தில் திரைப்பட நிலையம் ஒன்றில் எடுக்கப்பட்ட புகைப்படப் பிரதியை சரளாவிடம் கொடுத்ததையும் அப்போதே அவள் முகம அவர் இதயத்தில் இடம் பெற்றதையும் அவர் நினைவு கூர்ந்த நேரத்தில மஞ்சள் பத்திரிகையான சினிமா நேசனில் வெளிப்படுத்தப் பெற்ற தன் படத்தையும் அவர் எண்ணிப் பார்த்தார். இரண்டும் ஒரே அச்சு என்ற உண்மையும் பளிச்சிட்டது. சிந்தனைக் கயிறு முறுக்கேறத் தொடங்கியது. ஸி. ஐ. டி. யின் குறுக்கு வழி மனப்பாங்கு அவருள் வேலை செய்ய ஆரம்பித்தது. சரளாவிடம் கொடுத்த படப்பிரதிதான் சினிமா நேசனில் பப்ளிஷ் ஆகியிருக்கிறது. எப்படி பங்களூர் பத்திரிகைக்காரனுக்கு அதே படம் கிட்டியது? அது மாதிரிப் படத்தை நான் வேறு யார்க்கிட்டவும் கொடுக்கலையா? என்று யோசனை பண்ணினார். 'ஏதோ சூதுமதி விளையாடியிருக்குது!' என்றும் முடிவு கட்டலானார்.

"உட்காருங்க" என்று கூறிய பரிமளம் பாய் ஒன்றை எடுத்து வந்து கூடத்துப் பகுதியில் விரித்தாள். சரளா தன்னிடம் வீரபாகுவின் குணக்கணிப்பு பற்றி ஸ்திரிலோலனாகத் திரியும் அவரது தவறுபட்ட போக்குப் பற்றிச் சொன்ன விபரத்தையும் உண்மையாக இருக்குமோ அவள் சொல்வது என்று குழம்பிய விதத்தையும் அவள் நினைத்தாள்.

"உட்கார நேரமில்லை அம்மா. மிஸ்டர் பாண்டியனைச் சந்திக்க வேண்டிய நேரம் 8 மணி. அந்தக்கால எல்லை தாண்டி விட்டது. சீக்கிரம் புறப்படம்மா. நீ வராததைக் கண்டுதான் உன் பேச்சையும் மீறி, நானே

உன்னை அழைத்துப் போக வரவேண்டியதாயிற்று!'' என்றார் வீரபாகு.

''என்றால் உங்களுக்கு அனாவசியமான தொல்லைகள்!'' என்று வருந்தினாள், பரிமளம் வீரபாகுவைக் கண்டு போகவும், கண்டு பேசவும் வந்து போகும் பிரமுகர்களின் எண்ணிக்கையை அவள் அறிய மாட்டாளா? ''புறப்படலாம் அப்பா!'' என்று சொல்லி வீரபாகுவின் அருகில் வந்து நின்றாள் பரிமளம். ஒரு தந்தையின் அருகில் நிற்கின்ற பாசப் பரவசத்தின் உணர்வுகளிலே அவள் மெய்மறந்து நின்றாள். நெஞ்சம் ஏறித் தாழ்ந்தது; விழிகள் ஈரமாயின.

வீரபாகு புறப்பட்டார்.

''சரளா நீங்கள்?'' என்று வினவினாள் பரிமளம்.

''எனக்கு ரிப்போர்ட்டிங் அலுவல் இருக்கு. நான் பஸ்ஸில் போய்க் கொள்கிறேன், பரிமளா!'' என்று தெரிவித்தாள் குமாரி சரளா.

சரளா வைத்திருந்த டம்பப் பையிலிருந்து சிந்தி விழுந்த அதிவீரராம பாண்டியனின் புகைப்படம் தன் காலடியில் சரணடைந்து கிடந்த விந்தையைக் கண்ட பரிமளம சில விநாடிகள் தவித்தாள். 'நான் மிஸ்டர் பாண்டியனின் காதலுக்காக அவர் காலடியில் தவம் கிடக்கிறேன். ஆனால் மிஸ்டர் பாண்டியனின் போட்டோவோ இப்போது என் காலடியில் சரணடைந்திருக்கிறது! என் தவம் உயிர்ச் சரண்! ஆனால பாண்டியனின் சரண்?...தெய்வமே! நீ என்ன முடிவு காட்டப் போகிறாய்? என் பாண்டியன் என்ன முடிவு சொல்லப் போகிறாரோ?...நினைவுகள் தவம் புரிந்தன. உயிர்த் தவம் அல்லவா அது!...

'புறப்படலாமா பரிமளா?''

''ஓ!'' என்றாள் பரிமளம். பரிமளா என்ற விளிப்பு பாண்டியனின் அன்பழைப்பை ஞாபகப்படுத்தியிருக்கும்!

புறப்படப் போனுள் சரளா. டம்பப்பை பச்சை டயரி கைக்குள் முடங்கியிருந்தது.

" உங்கள் புகைப்படத்தை மறந்துவிட்டுப் போறீங்களே, சரளா?"

"என் புகைப்படமா?"

''மன்னியுங்கள். உங்க புகைப்படமல்ல!—மிஸ்டர் பாண்டியனின் படம்!"

குறுக்கிட்டார் வீரபாகு. "மிஸ்டர் பாண்டியன் படம்! ஓ!...இது சரளாகிட்டே எப்படி வந்திச்சு! ஏன் வந்திச்சு?" என்று கேள்வி கேட்டார் அவர்.

"சரளா பத்திரிகை நிருபர் மட்டுமில்லீங்க, அப்பா! அவங்க பெரிய இலக்கிய ரசிகை. அது மட்டுமல்ல. புகைப்படங்களைச் சேகரிப்பது அவங்களோட 'ஹாபி' யாகும்!" என்று விளக்கினுள் பரிமளம்.

"இஸ் இட் ஸோ?...ஓ!..." என்று பொய்யாகச் சிரித்தார் வீரபாகு.

அச் சிரிப்பின் தன்மையை பரிமளம் மாதிரி சரளாவால் 'இனம்' கண்டு கொள்ளக் கூடவில்லை தான்!

"சரளா; உங்களுக்கும் சினிமா நேசன் என்கிற எல்லோ மாகஸினுக்கும் பரிச்சயம் உண்டா?" என்று குரலை இயல்பாக்கிக் கொண்டு விசாரித்தார், செல்வந்தர் வீரபாகு.

இக்கேள்வி சரளாவின் அழகிய முகத்தை ஏன் இப்படி களையிழக்கச் செய்து விட்டது?

"வந்து...இல்லைங்க...நோ...நோ! உண்டுங்க, என் தொழிலே பத்திரிகைகளுக்கு செய்திகள் சேகரம் செய்து கொடுப்பதுதானுங்களே, ஐயா?" என்று தடுமாறினுள் சரளா.

"வாஸ்தவம்தான், செய்திகளோடு படங்களையும் சேகரம் செய்து கொடுப்பீங்க!"

"எஸ்!"

"செய்திகளை எப்படி எப்படிச் சேகரம் செய்கிறீர்கள்? அச்செய்திகள் உண்மை அல்லது பொய் என்று எப்படிக் கணிப்பீர்கள்?" என்று கேட்டார் வீரபாகு.

எல்லாவற்றையும் ஒருநாள் விளக்கமாக உங்க கையிலே சொல்றேனுங்க, ஸார்!"

"ஆல் ரைட்? தயவு செஞ்சு உங்க முகவரிதாங்க!"

குமாரி சரளா தன் முகவரி சீட்டை வீரபாகுவிடம் சமர்ப்பித்தாள்.

ஏனோ பரிமளத்தின் முகம் சிந்தனை வசப்படத் தொடங்கியது

"அப்புறம் மீட் பண்ணலாம்!" என்று கூறியபடி பரிமளம் படகுக் காரில் ஏறிக் கொண்டாள்.

சரளா கரங்குவித்தாள்.

இளம் வெய்யில் ஏறுமுகம் காட்டியது.

புகைச்சுருள்களை தொழிலதிபர் வீரபாகு வாரி வழங்கத் தொடங்கினார்.

இம்பாலா புறப்பட்டது.

# 31. சுந்தரக் கனவுகள்

எழுத்தாளர் அதிவீரராம பாண்டியனின் நாகரீக மான பங்களாவின் தலைவாசலில் வந்து நின்றது, தொழிலதிபர் வீரபாகுவின் நாகரீகமான இம்பாலா கார். ஹார்ன் ஒலி நயமாக அடங்கியது.

"மெள்ள இறங்கம்மா, பரிமளம்!" என்று சொல்லிக் கொண்டே டிரைவர் ஆசனத்தை விட்டு இறங்கிய வீரபாகு, காரின் பின்புற ஆசனத்தின் கதவுப் பொத்தானை அழுத்தித் திறந்து விட்டார்.

படைப்பின் நளினம் மண்டிய வரப்பிரசாதம் போன்று அமைந்திட்ட திருஷ்டி மச்சம் பாங்குடன் பொலிந்து விளங்க தோள்புறச் சேலைப் பகுதியைப் பற்றியவாறு குனிந்த வண்ணம் இறங்கினாள் குமாரி பரிமளம்.

'இது என்னுடைய பாண்டியனின் மண்' என்ற உரிமையின் பேரில் விளைந்த பாசம் அவளது அழகான உதடுகளிலே கவர்ச்சி மிகுந்த இளநகை இழையச் செய்யத் தொடங்கியது. முறை நின்று பயின்ற நாட்டிய ராணி பாவனைகளை ஜதிக் குறிப்புக் களுடன் மாற்றுவது போல அவளது முகக் குறிப்பு மலர்ச்சியின் வழி மாறி சோகத்தின் சுருக்குத் தடத்தில் மடங்கத் தலைப்பட்டது. தொடக்கத்தில் பாண்டிய னின் அறிமுகம் கனிந்த அடி நாட்களின் தொடக்கத் தில் எத்துணை ஆவலோடு—உரிமையோடு—நம்பிக்கை யோடு அவள் இந்தப் பெருமனையை மிதித்திருக் கின்றாள்!

ஆனால் இன்றோ, தேர்வின் முடிவை எதிர்நோக்கும் மாணவியின் நிலையிலே அவள் தவித்தது, நம்பிக்கை ஒரு பகுதியிலும், ஆசை நினைவு மறு பகுதியிலும்

மாறி மாறி அவளைச் சிந்தனைப் பதுமையாக்கிய நிலையிலே அவள் இனம் புரிந்த ஒரு தவிப்பின் உணர்வுடன் தலையைக் கம்பீரமாக நிமிர்த்தி நின்றாள். காது வளையங்கள் ஆடி அடங்கின. எழிலார்ந்த மார்பகத்தின் தங்கப் பதக்கம் ஆடாமல் அடங்கியது. நேற்று முன் இரவில் தமிழச்சியாக இயங்கி அதிவீரராம பாண்டியன் முன்னே நீதிச் சோதனையை—உரிமைச் சோதனையை நடத்திய அக்காட்சியை அவளது மனக் கண் படம் போட்டுக் காட்டியது. படம் போட்டு மாட்டிய பாவனையில் அந்நினைவு அவளுடைய உள்ளக் கிழியில் ஆழப் பதிந்தது.

எண்ணினாள்.

எண்ணங்கள் விளைந்தன.

நெடுமூச்செறிந்தாள்.

கனவுகள் பொடித்தன.

பாண்டியனின் கடிதத்தைப் பெறப் பாக்கியம் செய்த தேவமனோஹரியை அவள் எங்ஙனம் மறப்பாள்? தோழி சரளா சாகஸம் காட்டி, மோகினி அவதாரம் பூண்டு, பாண்டியனிடமிருந்து நயமாக அவன் புகைப்படத்தினைப் பெற்று வந்த நிகழ்ச்சியைத் தான் அவள் நினைக்காமல் இருத்தல் சாத்தியமா? மறக்கக் கூடாத நிகழ்ச்சியாயிற்றே, அது...?

காதல் என்றால், அது குறுக்கீடுகளின் புள்ளி விவரப் பட்டியல்தானா?

பங்களாவின் 'ஓமேஹா' சுவர்க்கடிகாரம் ஒன்பது முறை அடித்த சப்தம் பரிமளத்திற்குச் சுயப்பிரக்ஞையை வழங்கியது. சுற்றிச் சூழ நோக்கினாள். உயர்ந்திருந்த பங்களாவைப் பார்க்கப் பார்க்க, அவளுக்குப் பெருமை இரட்டித்தது. தமிழ் மண்ணில் பிறந்த ஓர் எழுத்தாளர் இத்துணை உயர்ந்து வாழ்கின்ற அந்த மகிழ்வு அருளிய பெருமை அவளுக்குத் தன் கவலைகளை—சலனங்களை மறக்கத் தூண்டியது போலும்!

"இன்று புதிதாய்ப் பிறந்தேன்!" என்ற பெருந் தன்மையான நினைவின் உணர்வு வழங்கிய புதிய துடிப்புடன் அவள் வீரபாகுவைப் பார்த்தாள். இள நகையை இதழ்களிலே வரவழைத்து ஏந்தினாள், ஏந்திழையாள். 'டெர்ன் நைலக்ஸ்' புடவையைச் சீர் செய்து கொண்டாள். வீரபாகுவின் தந்தைப் பாசம் வழங்கிய சீரல்லவா அது? சீருடை!

"அம்மா!" என்றார் வீரபாகு. பரிமளத்தின் சிந்தனைத் தவத்தைக் கலைக்க அவர் அழைத்திருக்கலாம். நியாயம்தான். பிரபல எழுத்தாளர் குறித்த எங்கேஜ்மெண்ட் கால எல்லைப்படி நடக்க வேண்டுமல்லவா?

"வாங்க அப்பா!" என்றாள் பரிமளம்.

வீரபாகு சிரித்தார். "நம்மை வரவேற்க மிஸ்டர் பாண்டியன் வரவில்லை. இறங்கி வரக் காணோம். அவர் சார்பில் நீ என்னை வரவேற்கிறாய்? தமிழ்ப் பண்பாடு முறைப்படி நடக்க வேண்டுமென்று நீ நடக்கிறாய்! உன் அன்புக்கு என் பாராட்டுக்கள் பரிமளம். மிஸ்டர் பாண்டியனுக்கு உன் ஆசைப்படி நீ வாழ்க்கைப் பட்டு நீ என்னை இப்படி வரவேற்கும் அந்த நாள் தான் அம்மா எனக்கு உண்மையிலேயே சுப தினமாகும்!" என்றார். உணர்ச்சிக் கருத்துடன் அவர் பேச்சு அமைந்திருந்தது

பரிமளத்தின் காதல வோடிய கயல் விழிகள் கசிந்தன. "உங்கள் கனவு பலித்திட மிஸ்டர் பாண்டியன் கருணை செய்ய வேண்டும்!" என்றாள்.

மறுபடியும் சிரித்தார் திருவாளர் வீரபாகு. "என் கனவு பலித்திட ஆண்டவன்தான் அம்மா கருணை புரிய வேணும்!" என்றார்.

வீரபாகுவின் மறுமொழியைக் கேட்ட பரிமளம் பிரமைப் பிடித்தமாதிரி நின்று விட்டாள். அவள் மேனி புல்லரித்தது. வினயமாகச் சிரித்தாள். வெளிப்பூச்சாகச் சிரித்த சிரிப்பு அது.

"நீங்க சொல்லறதுதான் உண்மைங்க, அப்பா! ஒரு கன்னிப் பெண் தன்னுடைய காதல் வெற்றி பெறுவதில் தெய்வத்தைக் காட்டிலும் காதலனையே உயர்வாகக் கருதுவாள். இந்தச் சிந்தனையை 'பூவை' தம்முடைய நாவலில் ஓரிடத்திலே சொல்லியிருக்கிறார். நான் கூட இந்த வாசகம் அவ்வளவு இயல்பானதாக இருக்காதே என்று சந்தேகப்பட்டேன். ஆனால் கடைசியில் என் விஷயத்திலேயே அது மெய்யாகிடுச்சுங்க. நீங்க சொல்லறது வாஸ்தவம்தான். தெய்வம்தான் என் காதலை வெற்றியடையச் செய்ய வேணும். நேற்று முன் தினம் இரவில் மிஸ்டர் பாண்டியனைச் சந்தித்து, வாதாடி, வம்புக்கிழுத்து என்னைச் சூறையாடத் துடித்த அவரை துர்க்கையாகிச் சாடி அவரிடம் சூள் உரைத்துத் திரும்பினேன். தவறுப்பட பேசிய— நீங்கள் என்பேரில் கொண்டிருக்கிற பாசத்தை உணர்ந்தறியாமல் தவறாக ஏசிப் பேசிய பாண்டியனை அறைந்த பரிமளம் எங்கோ ஓடி ஒளிந்து விட்டாள். இந்த விசித்திரம் எனக்கே வேடிக்கையாகத்தான் இருக்குதுங்க அப்பா!..."

வீரபாகுவின் முகம் சுருங்கியது. கண்கள் கலங்கத் தொடங்கின. நெற்றியைத் தடவியவண்ணம், "அம்மா பரிமளம்! தெய்வ சங்கற்பம்னு ஒண்ணு இருக்கு. அந்தச் சக்திதான் படைப்பின் ரகசியம். அதே சக்திதான் உனக்கு நல்ல விடிவைக் காட்ட வேணும். பாண்டியனை மனமாரக் காதலிக்கும் உன்னுடைய சுந்தரக் கனவைப் பலிக்கச் செய்யும் சக்தி அந்தத் தெய்வ சக்திக்குத்தான் உண்டு. நேர்மையான ஆசைகளும் நேர்மையான கனவுகளும் கட்டாயம் வெற்றி பெறவே செய்யும் அம்மா! பாண்டியனின் நல்ல முடிவு கிடைத்து விட்டால், நாள் கணித்து விடலாம், முகூர்த்தத் தேதிக்கு முன்னதாக ஒரு சுபதினத்தில் உன்னை என் மகளாகச் சட்டப்படி ஆக்கிக் கொண்டு விடவும் தீர்மானித்திருக்கிறேன், அம்மா!" என்றார் அவர்.

கனி இதழ்களின் கரையில் குறுஞ்சிரிப்பு ஒதுங்கியது. ஒதுங்கிய மாரகச் சேலையைச் சரி செய்து கொண்டாள். நீள் மூச்சு வெளிப்பட்டது.

"பாண்டியனை நான் மனமாரக் காதலிக்கிறேன். உண்மைதான் அப்பா! வக்கிரபுத்திகள் பல கொண்டவர் மிஸ்டர் பாண்டியன்! என்றாலும் அவரது எழுத்துக்கள் உருவாக்கிக் காட்டிக் கொண்டிருக்கின்றனவே சிறுகதை மன்னன் பாண்டியன், அந்தப் பாண்டியனைத்தான் நான் நெஞ்சுணர்ந்து காதலிக்கிறேன். அந்தக் காதல் என் வரை உன்னதம் பொருந்தியது; நேர்மையானது; நியாயம் மிக்கது இல்லையா அப்பா?" என்று கேட்டாள் குமாரி பரிமளம்.

"செட்டர்ன்லி!...நிச்சயமாக!" என்றார் வீரபாகு. "வா உள்ளே போகலாம். பாண்டியன் நாம் வந்ததை அறிந்திருக்க மாட்டார் என்றே தோணுது!" என்றார்.

"ஆகட்டுங்க!" என்று சொல்லி நடந்தாள் பரிமளம். அன்னப் பேடை நடை பயில்வதற்கு நிகராக நடந்தாள்.

"மணி எவ்வளவு இருக்கும்?"

"ஒன்பது ஆகியிருந்தது சற்றுமுன்!"

"ஓஹோ!" என்று சொல்லி தம்முடைய ஸில்க் ஜிப்பாவின் இடது புறப் பைக்குள் கையை நுழைத்து எடுத்தார். அழகான சதுரக் கடிகாரம் பளபளத்தது.

"என் மகள் காலத்தைச் சரிப்பார்க்க வேண்டாமா? இந்தாம்மா கட்டிக் கொள்" என்றார்.

பரிமளம் உணர்ச்சி வசப்பட்ட நிலையில் வீரபாகுவிடமிருந்து லேடீஸ் ரிஸ்ட் வாட்சைப் பெற்றுக் கட்டிக் கொண்டாள்.

"அப்பா!" என்றாள்.

வீரபாகு காரை அடைந்து மீண்டார். "அம்மா இதையும் அணிந்து கொள்!" என்று கெஞ்சியவராக விலையுயர்ந்த வைர நெக்லஸ் ஒன்றையும் கொடுத்தார்.

பரிமளம் தயங்கினாள். சரளா சற்றுமுன் வீரபாகுவின் கெட்ட சகவாசத் தன்மையைப் பற்றிக் குறை கூறிய சொற்கள் அவள் நெஞ்சில் சூறைக் காற்றாக வீசினவோ? சரளா சொன்னது மெய்தானா? வீரபாகு கண்ட கண்ட பெண்களோடு சுற்றி அலைபவர். அவர் என் பேரில் கொண்டுள்ள தூய்மை மிக்க பாசத்தை உணர இந்த உலகம் தவறி விடுமோ?...அவரது பொதுவான கெட்ட புத்தியைக் கொண்டு என்பால் கொண்ட பாசத்தையும் உலகம் தன் இயல்புப் பிரகாரமே தப்பாகத்தான் எடை போடுமோ? அதன் விளைவாகத்தான், சினிமா நேசன் மஞ்சள் பத்திரிகை எங்களைப் பற்றித் தப்பும் தவறுமாக அபவாதச் செய்திகளை வெளியிட்டதோ? சிந்தனைகள் படம் எடுத்தன.

"என்னம்மா யோசிக்கிறாய்?...பல தீய குணங்களுக்கும் ஈடாக என்னுள்ளே இயங்கும் தூய்மை பாசம்தான் உனக்கு இந்த நெக்லஸைக் கொடுக்கிறது. நீ என் வரை தெய்வம் அம்மா, உன் அப்பாவின் அன்புப் பரிசம்மா இது" என்றார், கண்களைத் துடைத்துக் கொண்டே.

பரிமளத்தின் பார்வையில் அவளது தங்கச் சங்கிலி ஊசலாடியது. இதுவும் வீரபாகு கொடுத்த பரிசில் தானே? புன்னகையுடன் வாங்கி அணிந்து கொண்டாள். "என்னுள் ஊற்றெடுக்கும் பாசத்தின் தெய்வம் நீங்கதான் அப்பா" என்றாள்.

"நான் பாக்கியசாலி என்பதை மறுபடியும் நீ நினைவூட்டுகிறாய் தானே, சரி வா" என்று கூறி முன்னே நடக்கலானார் வீரபாகு.

பங்களாவுக்குக் காவற்காரன் வேண்டாமோ?

கேவலம் ஒரு ராஜபாளையமாவது வேண்டாமா?

அதுவும் இல்லை.

முகப்புச் சுவரில் இருந்த பெயர்ப் பலகையைப் பார்வையிட்டார்.

"தொழில் அதிபர் எழுத்தாளர்—வெளியே" என்ற அறிவிப்பு இருந்தது.

கருக்கென்று பரிமளத்துக்கு ஏதேதோ பயங்கர நினைவுகள் அவளை அலைக்கழித்தன.

சமையற்காரர் காசி வந்தார். பரிமளத்தைக் கண்டதும். "வாங்கம்மா" என்றார். "நீங்க இந்த வீட்டிலே எப்போதம்மா விளக்கேற்றி வைக்கப் போறீங்க?" என்றார்.

பரிமளம் வெட்கத்துடன் நகை பூத்தாள். "தெய்வ சங்கற்பம்தான் எனக்கு அந்தப் பாக்கியத்தை சீக்கிரத்தில் அருள வேண்டும் ஐயா!" என்றாள்.

"சீக்கிரமே அந்தப் பாக்கியம் கிட்டும் அம்மா" என்று குறுக்கிட்டார் வீரபாகு.

வீரபாகுவைப் பார்த்தான் காசி.

"இவங்கதான் என் அப்பா!" என்றாள் பரிமளம் காசி கைகூப்பினான்.

"இவங்களா உங்க அப்பா? முருகன் கோயில் குருக்கள் புண்ணியகோடி ஐயா உங்க அப்பான்னு பாண்டியன் ஐயா சொன்னாரே?" என்று எதிர்கேள்வி விடுத்தார் காசி.

மலைத்து நின்று விட்டாள், பரிமளம். அவளது இடது கன்னத்துத் திருஷ்டி மச்சத்தில் ஒரு கண்ணீர்த் துளி ஊசலாடித் தேங்கியது.

"அம்மா இந்த லெட்டரை உங்க கையிலே கொடுக்கச் சொன்னாருங்க, பாண்டியன் ஐயா!" என்று தெரிவித்து, கடிதம் ஒன்றை நீட்டினார் காசி.

அந்தக் கடிதத்தை வாங்கிய பரிமளம் அதைக் கண்களில் ஒற்றிக் கொண்டு, பிரித்துப் படிக்கத் தொடங்கினாள்;

# 32. புதிதாகப் பிறந்திருக்கின்றாள்!...

அதிவீரராமபாண்டியனுக்குச் சொந்தமான அந்தப் பங்களாவின் முகப்பு மண்டபத்தில் இழைந்து கொண்டிருந்த மெல்லிய காற்றை அனுபவிக்கக் கூட மனமிழந்து சமையற்காரர் காசி நீட்டிய பாண்டியனின் கடிதத்தைப் பிரித்தாள் பரிமளம். பல புறப்பட்ட நினைவுகளின் சுழலில் சிக்கி அலைபாய்ந்தவாறு இருந்த அவளுடைய கன்னி நெஞ்சம் கடைசிப் புகலாக முருகனின் அன்புக் கருணையைப் பிரார்த்தித்து, வலுவில் அழைத்துக் கொண்ட அமைதியோடு அருகே பார்வையைச் செலுத்தியபோது தொழிலதிபர் வீரபாகு தீவிரமான சிந்தனையோடு சிகரெட்டைப் புகைத்துக் கொண்டிருந்ததைக் கண்டாள் அவள். 'எங்கேஜ்மெண்ட் நிர்ணயித்தும் மிஸ்டர் பாண்டியன் கடிதத்தைக் கொடுக்கச் சொல்லிவிட்டு, எங்கே போனார்? ஒருவேளை, அவர் என்னை...?' மேற்கொண்டு அச் சிந்தனையைப் பெருக்கிப் பார்க்கும் துணிவு அவளுக்குக் கிட்டினால்தானே?

'எங்காவது அவசரமாகப் போய் விட்டாரா? அல்லது, மாடியிலேயே ஒளிந்திருக்கிறாரா?'

"ஐயா, உட்காருங்களேன்," என்று சொல்லிய காசி, ஓரத்தில் கிடந்த கூடை நாற்காலியைச் சுட்டினார்.

"பரவாயில்லே," என்ருர் வீரபாகு. பிறகு பரிமளத்தைப் பார்த்து, "அம்மா, மிஸ்டர் பாண்டிய ஞேட தபாலே படிச்சிட்டியா அம்மா?" என்று அவர் குரல் சுருதி தப்பி ஒலித்தது.

படிக்கிறேனுங்க," என்ருள் குமாரி பரிமளம். வைர நெக்சலஸ் காலே இளம்பரிதியின் அற்புதத்தில் எழிலாகப் பளபளத்தது. இளம் மார்பகம் எம்பி எம்பித் தணிந்தது. மீண்டும் ஏனே தயங்கிஞள் அவள்.

அவளது தயக்கத்தை அவர் உணர்ந்து கொள்ளாமல் இருக்க முடியாது. இவர் சொன்னுர்! "உன்னேட அசாத்தியத் துணிச்சலேயும் அபாரமான தன்னம்பிக்கையையும் நான் எத்தனேயோ வாட்டி மனசுக்குள் நினேச்சுப் பார்த்துப் பாராட்டியிருக்கேன். அப்படிப் பட்ட பெண் இப்படிக் கோழை மாதிரி ஆயிட்டியே அம்மா?...காதல் சோதனே உன்னே இப்படி ஆக்கி விடுது என்கிற யதார்த்த நடப்பையும் நான் புரிஞ்சுக்காமல் இல்லே!..." என்று இன்னும் பேச எண்ணியவர், ஒதுங்கி நின்ற காசி இப்பேச்சைக் கேட்பதை அறிந்து, அத்துடன் நிறுத்திக் கொண்டார்.

வேதனேயோடு விநயமாகச் சிரித்தாள், பரிமளம். சனிக்கிழமை இரவு சிறுகதை மன்னன் அதிவீரராம பாண்டியனிடம் சூள் உரைத்துத் திரும்பிய காட்சி அவள் மனத்திலே நிழலாடியது.

பாண்டியனின் கடிதம் எனக்கு என் ஆசைக் கனவுக்குச் சாதகமாக இருக்காது என்பது விளங்குகிறது. ஆமாம், அப்பா நினேக்கிற மாதிரி இப்போதைக்கு என்னேயும் மீறிய வகையில் என்னுடைய நடத்தை என்னேக் கோழையாகத்தான படம் பிடித்துக் காட்டுகிறது. ஆனுலும் நான் கோழையல்ல, என் சபதத்தை நான் அன்றிரவு பாண்டியனிடம் போட்ட சபதத்தை எப்படியும் நான் நிறைவேற்றிக் கொண்டே தீருவேன்! அப்போது என்னேப் புரிஞ்சுக் கொள்ளுவார் அப்பா!...என்னுடைய சோதனேகளுக்கு எத்தகைய

குறுக்கீடுகள் வந்தாலும் சரி, எத்தனை இடர்பாடுகள் ஏற்பட்டாலும் சரி; நான் என் கனவை—என் முதற் காதலை வெற்றி பெறச் செய்யாமல் இருந்தால் நான் பரிமளம் அல்ல!...சமுதாயம் ஏசும் பேசும்! ஏசட்டுமே பேசட்டுமே!...பார்க்க அழகாகத் தோன்றும் சைனா பஜாரிலே பார்க்க முடியாத—பார்க்கக் கூடாத—பார்க்கப் பயங்கரமான ஆபத்தும், சோதனையும் மூடி மறைந்து இருக்கிறதல்லவா? அது மாதிரிதான் இந்த தமிழ் சமுதாயமும்!...ஆமாம். சமுதாயம் ஒரு சைனா பஜார்!...அதுதான் உண்மையின் நிலவரம்!...இந்தச் சமுதாயத்தைச் சாடவல்லவள் இந்தப் பரிமளம்—இவள் மகா துர்க்கை!...இந்த உண்மையை இதே தமிழ்ச் சமுதாயம் உணரும் காலம் வெகு தூரத்தில் இல்லை. என்னைப் பாண்டியனும், வீரபாகு அப்பாவும் புரிந்து கொள்ளக்கூடிய காலம் வெகு சீக்கிரம் வரத் தான் போகிறது!...'

புதிய உணர்வும் நூதனமான உள்ளமும் விந்தையான விழிப்பும் பெற்றவளாகத் தலைநிமிர்ந்தாள் பரிமளம். வீரபாகு இரண்டாவது சிகரெட்டையும் வீசி விட்டதை அறிந்தாள் அவள். டெர்ரிலின் நைலக்ஸ் புடவையின் முகதலைப்புறத்தை எடுத்து, கழுத்தின் புறப்பகுதியிலும் நெற்றித் திட்டிலும் சிவந்த கன்னங் களிலும் முத்தார்த்திருந்த வேர்வையைத் துடைத்துக் கொண்டாள். இப்போது அந்தத் திருஷ்டி மச்சம் முன்னைக் காட்டிலும் கூடுதலான அந்தம் பெற்று விளங்கியது. ஓடிக்கொண்டிருந்த நினைவுகளினின்றும் ஒதுக்கி அல்லது ஒதுக்கப்பட்ட நிலையில் மோகினி மாதிரி காந்த எழில் படைத்த குமாரி சரளாவின் ஞாபகம் அதையொட்டி சினிமா நேசன் மஞ்சள் பத்திரிகையின் விளையாட்டமும் தோன்றியது. மண்ணிடைப் பிறந்துவிட்ட கடமைப் பாக்கியத்தின் நன்றியை மறந்து விடாமல் அதே சமயத்தில் வாழும் வாழ்க்கை விளையாட்டில் எந்தச் சோதனையையும் எதிர்த்துச் சாடும் தீரத்தின் உள்ளம் கொண்டு அவள் அதிவீரராமபாண்டியனின் அந்தக் கடிதத்தைப் படிக்கலானாள்.

கடிதம் பேசுகிறது!

"குமாரி பரிமளம்,

நான் நல்லவன் அல்ல, இது உண்மை. இதை நீ புரிந்து கொள்ளாமல் இருந்திருந்தால் அது என் தவருக ஆக முடியாது!

இன்னென்று:

என்னைப் போல் நீயும் நல்லவள் அல்ல! இதைப் புரிந்து கொண்டவன் நான். ஆகவே என்பங்கில் தவற்றுக்கு வாய்ப்புக் கொடுக்க வில்லை.

நான்

'சினிமா நேசன்' செய்தியை நான் அவ்வளவு லேசாக எடுத்துக் கொள்ள மாட்டேன். ஏனென்ருல், நானும் ஒரு மனிதன்!—எழுத்தாளன், அதிவீரராமபாண்டியனைக் கடந்த ஒரு மனிதன!

ஆனல்...

நீ ஒரு அழகி—பேரழகி.

நீ புதிர்!

உன் கதை அற்புதமானது! அழகான நாவலாக எழுதி விடலாம்!

நீ என்னை மறந்து விடு!

ஏன் தெரிமா?

நான் பரிமளாவை மறந்து விட்டேன்!

இப்படிக்கு

அதிவீரராமபாண்டியன்."

இடுக்கண் வரும்போது சிரிப்பதென்பது கம்ப சூத்திரம் அல்ல என்பதை'உணர்ந்தவளாக, சலனமற்ற ரீதியில் சிரித்தாள் குமாரி பரிமளம்!

அச்சிரிப்பைக் கேட்ட தொழிலதிபர் வீரபாகு பரிமளத்தை நோக்கி நெருங்கி வந்தார். அவளது அழகான சிரிப்பு அவருக்கு அமைதியை ஈர்ந்தது போலும்! 'நல்ல முடிவைத தானே மிஸ்டர் பாண்டியன் சொல்லியிருக்கார்?' என்று அவளிடம் கேட்டபோது, அவர் பார்வையில் உறையின் மீது எழுதப்பட்டிருந்த 'நேர் பார்வைக்கு' என்ற எச்சரிக்கை பட்டது.

"ஆமாங்க, அப்பா!" என்ருள் பரிமளம், இயல் பான சிரிப்பு மாருமல்.

"பேஷ்! அப்படின்னு, இந்த ஐப்பசியிலேயே முகூர்த்தத்தை வச்சுக்கிடலாம்!"

"உங்க விருப்பம் போலச் செய்யுங்க!"

"வட்டக் கருவிழிகள் பாங்குற விரிந்தன. எடுப் பான நாசி எடுப்பான ஏற்றம் கொண்டு விரிந்தது. உதடுகள் கவர்சசியோடு பிரிந்தன. மலர்ச்சிரிப்பு விளைந்தது.

"உன் விருப்பம்தான் அம்மா என் லட்சியம்!" கல்யாணத்தை ஜாம் ஜாம் என்று ஆபட்ஸ்பரியிலேயே நடத்திடலாமனு முடிவு பசெஞ்சிட்டேன்; அன்றைக்கே சுவீகார ஏற்பாட்டையும் நிறைவேற்றிக்கிட்டாகணும்.

பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த சமயற்காரர் காசி ஓடிப்போய் இரண்டு கோபபைகளில் காப்பி கொணாந்து நீட்டினர்.

இது சம்பந்தி காப்பியாக்கும் என்று விமர்சனம் செய்தவாறு அவராகவே வலியக் கைநீட்டி கோப் பையைப் பெற்று அருந்தினுர்.

அவளும் அவ்வாறே செய்ய முயன்ற நேரத்தில் கசங்கிய பத்திரிகை ஒன்று பறந்து அவளது

காலடியில் கிடந்தது. குனிந்தாள், 'குமாரி பரிமளம்— தொழிலதிபர் வீரபாகு லீலைகள்!' போன்ற வார்த்தைகள் மட்டுமே தெரிந்தன. வீரபாகுவின் புகைப்படமும் காட்சி தந்தது எதையும பொருட்படுத்தாமல் காப்பியைச் சுவைத்தாள் பரிமளம்.

"புறப்படலாமா, பரிமளம்?"

அடுத்த சிகரெட் எரிந்தது.

"நீங்க புறப்படுங்க."

"ஏனம்மா?"

"அவர் என்னை வெயிட்பண்ணச் சொல்லி யிருக்கார்!"

"ஆல்ரைட்!..."

"மிஸ்டர் பாண்டியனைப் பார்த்து விட்டு, ஆபீஸ் போயிட்டு சாயந்திரம் வந்திடுறேனு, அம்மாகிட்டே சொல்லுங்க பெங்களூர்க்காரங்க கையிலேயும் சொல் லுங்க!"

"ஆகட்டும், இனிமேல் பாரேன் உங்க அம்மாவை! நோய் நொடியெல்லாம் இருந்த இடம் தெரியாமல் போயிடும்...நான்கூட இனிமேல் புதுப்பிறவி எடுத் திடுவேனுக்கும் ஏன் தெரியுமா! நான் இனிமேல் பரிமளத்தின் தந்தையாக்கும்!"

"சந்தோஷமுங்க அப்பா!" என்றாள் குமாரி பரிமளம். அவள் கண்கள் கசிந்தன.

அவளை ஏறிட்டுப் பார்த்த வீரபாகு திடுக்கிட்டார். "அழுரயாம்மா?" எனறார் பதட்டத்துடன்.

ஆனந்தக் கண்ணீர், அப்பா!"

"நான் போய் வரவா?"

"நல்லதுங்க!"

இம்பாலா கார் ஓசைப்படாமல் நழுவியது!

சிலையாக மலைத்து நிற்க, விநாடிப் பொழுது போதாதா, என்ன?

குமாரி பரிமளம் புதிதாகப் பிறந்திருக்கின்ற கோபத்துடன் அருகிலிருந்த கூடை நாற்காலியைக் குறி வைத்தாள்.

காசி தூசு தட்டினார்.

"உட்காருங்கம்மா!" என்று அன்புடன் உபசரித்தார்.

பரிமளம் உட்கார்ந்தாள். காலடியில் கிடந்த அந்தப் பழைய மஞ்சள் இதழைப் புரட்டிப் படிக்கலானாள். அவளுள் பூகம்பம் வெடித்தது. புயல் அடித்தது. எல்லாவற்றையும் மறந்தாள். எதுவுமே நடக்காத மாதிரி நினைத்து அந்தப் பத்திரிகையை மடித்து வைத்துக் கொண்டு பெருமூச்செறிந்தாள். ரகசியமாகக் கண்களைச் சுத்தம் செய்து கொண்டாள். நழுவிக் கிடந்த மாரகச் சேலையைச் சரிப்படுத்தினாள்.

குமாரி பரிமளத்தின் தார்மீக மனம் விழிப்புப் பெற்றது. 'சமுதாயம் என்பது வெறும் நாலு பேர் மட்டுந்தானா? அப்படியென்றால், நான் இந்தச் சமுதாயத்தைச் சாடத் துணிந்தது நியாயம்தான்! சமுதாயத்தின் நீதியை இதே சமுதாயத்தின் முன்னே நிலைநாட்ட சமுதாயத்தின் அங்கமாக எனக்கும் பொறுப்பு உண்டுதான்! இந்த உண்மையை—நியதியை—தர்மத்தை இந்தச் சமுதாயம்—இந்தச் சமுதாயத்தின் விரோதிகளாக இருக்கும் சிலர் உணரத் தக்க காலம் வராமலா போய்விடும்?... நான் உருவாகக் காரணமாக இருந்தவர் புண்ணியகோடி குருக்கள். அவர் என்னை ஈன்றவளை வஞ்சித்தார் அந்தப் பாவத்துக்கு என்னிடம் பாவமன்னிப்புக் கோரினார். என் கண்ணீர் வற்றி விட்டதா அவர் கேட்ட மன்னிப்பிலே? அது போகட்டும்! இந்த அதிவீரராமபாண்டியன் இப்போது என்னை உருக்குலைத்து விட்டார், தன்னுடைய இந்தக் கடைசிக் கடிதத்தின் மூலம்.... சமுதாயத்தைக் கட்டிக் காப்பதாக ஜம்பம் பேசும் பாண்டியனின்

சமுதாயப் பார்வையும் ஆன்மீகப் பார்வையும் வெறும் வாய்ப்பந்தல்தானே? இவ்வுண்மையை என் மாதிரி இந்தச் சமுதாயமும் உணர வேண்டாமா? உணர முடியாதா?'—தலை கனத்தது.

அப்போது தோழி தேவமனோஹரி அங்கு வந்தாள். "சௌக்கியமா?" என்று கேட்டாள்!

"நல்ல சௌக்கியம்!'

மறு ஐந்தாவது நிமிஷத்தில், அங்கே போலீஸ் ஜீப் ஒன்று வந்து நின்றது. குமாரி பரிமளத்தின் விழிகள் விரிந்தன!

# 33 மிஸ்டர் ஜகதலப் பிரதாபன்

சிறு கதை மன்னனுகப் பட்டம் சூட்டிக்கொண்ட அதிவீரராம பாண்டியனின் அழகான பங்களாவின் வாசலில் வந்து நின்ற ஜீப்பிலிருந்து சட்டத்தின் காவலர்கள் பின் தொடர எஸ். ஐ. சாந்தலிங்கம் கம்பீரமான மிடுக்குடன் இறங்கி நடந்தார். ஏறுமுகக் கதிரவனின் சூடு பரவிய செங்கதிர்கள் சட்டத்தின் பிரதிநிதிகளின் மேனிகளில் பரவின.

அதிவீரராம பாண்டியன் வெளியே போயிருப்பதாகச் சமையல்காரர் காசி சொல்லி விட்டுக் கொடுத்த அந்தக் கடிதத்தைப் படித்து முடித்த குமாரி பரிமளம் அருகில் நின்ற தொழிலதிபர் வீரபாகுவின் மனதை புண்பட வேண்டாம் என்று கருதி, கற்பிக்கப்பட்ட ஒரு பொய்யை நெஞ்சறிந்து கூறி அவரை அனுப்பிவிட்டு அங்கே காத்திருந்த அவள், போலீஸ் ஜீப்பைக் கண்டதும் அதிர்ச்சியடையாமல் தப்ப முடியவில்லை. 'இன்று புதியதாகப் பிறந்திருக்கிறேன்!' என்ற தன் னம்பிக்கைப் பிடியில்—மனத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு நெஞ்சில் புயலை—எரிமலையை—பூகம்பத்தை

எல்லாம் உள்ளுக்குள்ளேயே விளையாட விட்டு, மனத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு அமர்ந்திருந்த வள் இருப்புக் கொள்ளாமல் எழுந்தாள். நீதியைப் பரிபாலிப்பவர்களுக்கு இடமும் வேண்டும் அல்லவா?

தோழியை அனுசரித்து, தேவமனோஹரியும் எழுந்து ஒதுங்கி நின்றாள்.

அவளை ஓரக்கண் கொண்டு பார்வையிட்டாள் குமாரி பரிமளம். நேற்றுக் காலையில் அவளைப் பஸ்ஸில் பார்த்துப் பழக வாய்த்த அந்தச் சம்பவத்தை நெஞ்சில் நினைத்தாள். தன் வீட்டுக்கு அழைத்த அவளது வேண்டுகோளைப் பூர்த்திச் செய்ய முடியாத படி அப்போது குறுக்கிட்ட வீரபாதுவையும் அவள் மறக்கவில்லை. பாண்டியன் தேவமனோஹரிக்கு எழுதிய கடிதத்தை கடைசி வரை பரிமளத்தினுல் படிக்க முடியவில்லையே!

சப்-இன்ஸ்பெக்டர் அமர்ந்தார்.

காசி உடல் பதற்றத்தைக் காட்டாமல், பற்களை மட்டும் காட்டி, "ஐயாவுக்குக் காப்பி பிடிக்குங்களா? இல்லே, ஓவல் வேணுங்களா?" என்று விசாரித்தார்.

சாந்தலிங்கம் சிந்தனை வயப்பட்ட நிலையோடு நீண்ட விழிகளைத் திருப்பி சமையற்காரரை நோக்கி வெறுப்புத் துவங்கப் பார்த்து விட்டு மௌனமாக இருந்தார்.

"ஐயாவுக்கு ட்ரிங்க் கொண்டாரட்டுங்களா?"

"ட்ரிங்கா? அதுதான் இங்கு நிரம்ப இருக்குமே? பெர்மிட் பெற்ற பங்களாக்களிலே இதுவும் ஒண்ணாச்சே?"

கைகளைப் பிசைந்தார் காசி. "வேற என்ன வேணு முங்க?" என்று மீண்டும் கேட்டார்.

"மிஸ்டர் பாண்டியன் வேணும்!"

புகழ் பெற்ற எழுத்தாளரின் எழுத்துக்களைப் புகழ வந்திருப்பாரா எஸ். ஐ.?

"ஐயா இல்லீங்களே?" என்றார் காசி.

எஸ். ஐ. கோபமாகச் சிரித்தார். "பாண்டியன் இல்லையா? சந்தோஷம். நீ இங்கேயே நில். நான் மேலே போய்ப் பார்க்கிறேன்!" என்று எழுந்தார்.

தவித்தார் காசி.

அப்போது பரிமளத்தின் மனத்திலும் அவளையும் அறியாத வகையில் ஒரு தவிப்பு மேலிட்டது.

எழுந்த சப் இன்ஸ்பெக்டர் பூந்திரையை விலக்கிக் கொண்டு மாடிப்படிகளில் ஏறினார்.

அங்கே:

பிரபல எழுத்தாளர் பாண்டியன் கண்கள் சிவக்க, கன்னங்கள் வீங்க, விரிந்துக் கலைந்த கிராப்புத் தலையுடன் வந்து நின்றான்.

"வாங்க ஸார்!" என்றான்.

"இதோ வந்து விட்டேன். மேலே போகலாமா?"

"ஏன், கீழேயே உட்கார்ந்து பேசலாமே?...என்னுடைய எழுத்துக்களிலே உங்களது குற்றச்சாட்டுக்களுக்குத் தப்பி ஏதாவது மிஞ்சி விட்டதா, என்ன?"

"இப்போது நான் உங்களது ரசிகனாக—அல்லது விமர்சகனாக இங்கு வரவில்லை. நான் இப்போது எஸ் ஐ. சாந்தலிங்கம்!"

"ஆல்ரைட்! வாங்க, வரவேற்புக் கூடத்திலே உட்காருவோம்" என்று சொல்லி விட்டு மாடிப்படிக் கட்டுகளின் அடிப்பகுதியை விட்டு நகர்ந்தான் பாண்டியன். 'ஃபின்ட்லே' வேட்டி கால்களில் பின்னியது.

"கம்ப்ளெயின்ட் வந்திருக்கு, ஆகவே நான் எதற்கும் மாடி அறைகளைச் சோதித்துப் பார்க்க வேண்டும். என்னைத் தடுக்க மாட்டீங்கண்ணு நம்புறேன்!'

"ஆஹா! தாராளமாகப் போய்ப் பாருங்களேன்!" என்றான்.

"நீங்களும் வரவேணும்!"

"பேஷாக வருகிறேன்!" என்று சொல்லி, தள்ளாடித் தள்ளாடி வழி காட்டி கூட்டி நடந்தான், பாண்டியன்.

'ஏன் இப்படித் தள்ளாடுகிறீர்கள் பாண்டியன் ஸார்?"

"குடித்தால் தள்ளாடாமல் உங்களால் இருக்க முடியுமா? என்றால் முடியவில்லையே?" என்று சிரித்தான் பாண்டியன்.

சாந்தலிங்கத்தின் மனதில் முள் ஒன்று சுருக்கென்று தைத்தது.

"மிஸ்டர் பாண்டியன், உளறுகிறீர்கள்!" என்று எச்சரித்தவராக, தொடர்ந்தார் அவர்.

திறந்து கிடந்த அந்த நீண்ட அழகிய அறையில் மௌனமாக விதியைப் போல வந்து நின்றான் அதிவீர ராம பாண்டியன்!

சாந்தலிங்கம் அந்த அறையைப் பார்த்த போது, அவர் எதிர்பார்த்த அதிசயத்தைக் கண்டார்.

"மிஸ்டர் பாண்டியன்! அழகான ஜகதலப் பிரதாபன் ஸீன்!" என்று எரிச்சலுடன் சொன்னார்.

'ஸ்பிரிங்' கட்டிலைச் சுற்றிப் போடப்பட்டிருந்த நாற்காலிகளில் அமர்ந்திருந்த பஞ்ச கன்னியர்கள் பாங்குடன்—பதட்டத்துடன் எழுந்து நின்றார்கள்.

பாண்டியன் மேலும் ஒரு 'பெக்' பிராந்தியை அருந்தினான்.

"பை தி பை!...இப்பத்தான் எனக்குச் சுறுசுறுப்பு வருது—இன்றைக்குச் சாயந்திரம் ஒரு ஸீன் எழுத வேணும். கொஞ்ச காலம் நிறுத்தி வைக்கப்பட்டு

இருந்த என்னுடைய கதை வசனப் படத்துக்கு நானே டைரக்டராகவும் ஆகியிருக்கேன். அதிலே ஒரு ஸீன். கதாநாயகன் இப்படி ஒரு லவ் ஸீனிலே குஷாலாகப் பொழுதைக் கழிக்கிறான். அந்தக் காட்சியை எப்படித் தத்ரூபமாக அமைப்பது என்பதைப் பற்றிச் சிந்தித்தேன். இந்தப் பெண்கள் என் ரசிகைகள். தற்செயலாக வந்து சேர்ந்தார்கள். பழம் நழுவிப் பாலில் விழுந்த மாதிரி ஆயிடுச்சு. நீங்களும் நல்ல நேரம் பார்த்துத் தான் வந்திருக்கீங்க."

"ஓஹோ!" முகம் கடுகடுத்தது.

"அதுக்குள்ளே கேட்க வேண்டியதை மறந்துட்டேன். என் பேரிலே ஏதோ கம்ப்ளெயிண்ட்னு சொன்னீங்களே, எஸ். ஐ. ஸார்?"

"ஆமாம்; நேற்றிரவு நீங்கள் சரளா என்கிற ஒரு பெண்ணைப் பலாத்காரம் செய்ததாகக் கம்ளெயிண்ட் வந்திருக்கு!"

"ஓஹோ! மோகினி அவதாரம் கொண்ட மாதிரி இருந்த அந்தப் பெண்ணே? அதெல்லாம் பொய் ஸார்! நிருபிக்க முடியாத ஒரு பொய்யாக்கும் அது! அவள் என் ரசிகையாக வந்து, அவள் தான் என்கிட்டே கெட்ட நோக்கம் கொண்டு நுழைந்தாள். வாலைக் குழைக்கும் நாய்களை நான் அறியாதவனா? அறியாமல் இருந்தால், நான் சிறுகதை மன்னனாக இருக்க முடியுங்களா? வாழ்க்கையை ஜீவிதத்துக்குள்ளாகப் பூராவும் சகலத் துறையிலேயும் அனுபவிக்க வேணுமென்கிறது என் லட்சியம்தான், மறுக்க முடியாது. ஏன்னா அந்த அளவுக்குக் கீழ்மட்டத்திலேயிருந்து நான் ஏங்கிக் கஷ்டப்பட்டவன்! அதற்காக என் கவுரவத்தை நானே பாழ்படுத்திக்கிடுவேனா?"

"ஓஹோ!" சட்டம் நிருபணத்துக்கு சாட்சியின்றித் தவித்த மாதிரியாக, அப்போது போலீஸ் அதிகாரியும் தவித்தார்.

'கீழே இரண்டு பேர் இருக்காங்களே? அவர்கள் யார்?'' என்று விசாரித்தார்.

"அவர்கள் யாரென்று சொல்வது? படத்திலே சான்ஸ் கேட்டு வந்த எக்ஸ்ட்ராக்களாக இருக்கலாம், அல்லது இந்த அழகிகள் மாதிரி அவர்கள் என்னை, ஊஹூம், என் எழுத்துக்களை ரசிக்க வந்த ரசிகை களாக இருக்கலாம் வாங்க, போய்ப் பார்த்து விட்டுச் சொல்கிறேன். ஏன்னு, உங்களை மாதிரி இவங்களும் இலக்கிய ரசிகைகள்!''

அவனது விரசமான புன்னகையை நல்ல விதமாக எடுத்துக் கொள்ள முடியாமல் சிணுங்கிய காவல் அதிகாரி சாந்தலிங்கம்; கூறினார்:

''மிஸ்டர் பாண்டியன்! நீங்கள் இனியாவது ஜாக்கிரதையாகவும், கண்ணியமாகவும் நடந்துக் கிட்டாகணும் நண்பர் 'என்ற முறையில் நான் இந்த எச்சரிக்கையைச் செய்கிறேன். நீதியை நிலை நாட்ட வேண்டியது எங்கள் கடமை. அதே நீதியைக் காப் பாற்ற சமுதாயத்தின் பிரதிநிதியான உங்களுக்கும் கடமை உண்டு; பொறுப்பு உண்டு. இன்னொன்று, மிஸ் சரளா கொடுத்த கம்ப்ளெயிண்டை எங்கள் சட்டம் அங்கீகரித்து விட்டது. கேஸ் தொடரும்!'' என்று சொல்லி விட்டுக் கீழே இறங்கினார்.

அந்தப் பயங்கர எச்சரிக்கையை பொருட்படுத்த வில்லை பாண்டியன். "ஓ!'' என்று மட்டும் சொன்னான்.

காத்திருந்த குமாரி பரிமளம் காலடியோசைகள் கேட்டுச் சுயப்பிரக்ஞை கொள்ளலானாள். காலடியில் வந்து கிடந்தது, தூர வீசி எறிந்த அந்த மஞ்சள் பத்திரிகை. பாண்டியன் தனக்கு எழுதிய கடிதம் அவளது டம்பப் பைக்குள் இருந்தது. அதைப் பற்றி நினைத்துக் கொண்டாள்.

"நான் நல்லவன் அல்ல; இவ்வுண்மையை நீ அறிந்திருக்காமல் இருக்க முடியாது! அதே போல, நீயும் நல்லவள் அல்லள்; இவ்வுண்மையை நான் புரிந்து

கொள்ளத் தவறவில்லை!''—இக் கருத்துக் கொண்ட பாண்டியனின் வாசகங்களுக்குச் சொல்லாமல் சொல் லும் ஒரு மௌனச் சாட்சி போல, அந்தப் பத்திரிகை யார் பார்வைக்கும் இலக்காகும் வண்ணம், பிரிந்து கிடந்தது. வீரபாகுவிடம் சொன்ன பொய்—தன்னை பாண்டியன் கல்யாணம் செய்து கொள்ள சம்மதம் தெரிவித்து விட்டதாகச் சொன்ன பொய் என்ன விபரீதத்தில் முடியப போகிறதோ?' என்று உள்ளூற ஒரு தவிப்புக் கொடி மின்னலாகப் பாய்ந்தது. எப்படி யும் இந்த விவகாரத்தில் நான் வெற்றி பெற்றே தீருவேன். நான் அவரிடம் உரைத்த அந்தச் சூளுரையை—அந்தச் சபதத்தை நிறைவேற்றியே தீருவேன் என்று திடமான வைராக்கியம் விதியை வெல்லும் சாகசம் பூண்டு பரவத் தொடங்கி விட்டது!

° ° °

வெளி முகப்பில் வந்து நின்றார் சப் இன்ஸ்பெக்டர் சாந்தலிங்கம். புறப்படுவதற்கான குறிப்பைக் காட்டி விட்டு நகர எத்தனித்தார்.

அப்போது அவர் பார்வைக்கும் அந்த மஞ்சள் பத்திரிகை 'சினிமா நேசன்' இலக்குக்குள்ளானது. முதற் பக்கத்தில் கண் பார்வையைப் பதித்தார் 'ஓ!... வீரபாகு!' என்று முணு முணுத்த அவர், கலவரத் துடன் பரிமளத்தின் புகைப்படத்தைப் பார்த்தார். பிறகு அங்கு காட்சி அளித்த அந்தப் புகைப்படத்தின் உருவத்தையும் நேருக்கு நேர் பார்த்தார்.

''யார் இந்தப் பெண்?'' என்றார்.

பரிமளத்துக்குத் தவிப்பு மேலிட்டது. மனம் கூனிக் குறுகியது. அவள் எதையும் சமாளிக்கும் துணிவுடன் கம்பீரமாகத் தலையை நிமிர்த்தினாள்.

பரிமளத்தைப் பார்த்தான் பாண்டியன். பிறகு தேவமனோஹரியையும் நோக்கினான். அசட்டுப் புன்னகை பாம்பாக—நல்ல பாம்பாக நெளிந்தது.

''யாரைக் கேட்கிறீங்க?''

"இந்தப் பத்திரிகையில் உள்ள இந்தப பெண்ணை" என்று ஆள்காட்டி விரலால் காட்டினார் சாந்தலிங்கம். கரிய பெரிய விழிகள் விரிந்தன. அழகான வீரம் மிக்க மீசை ஏறி இறங்கியது.

"பெயர் பரிமளம்! என்னைக் காதலிக்கிறாள். என்றால் அந்தக் காதலைத் திருப்பிக் கொடுக்க முடிய வில்லை" என்றான் பாண்டியன்.

குமாரி பரிமளத்தின் மேனி நடுங்கியது. "எஸ்.ஐ ஸார்! நான் பேச அனுமதி கொடுப்பீர்களா?" என்று கேட்டாள்.

சப் இன்ஸ்பெக்டர் அந்த மஞ்சள் பத்திரிகையின் தலைப்புச் செய்தியைத் தொடர்ந்து, அடியில் கிறுக்கி யிருந்த விவரங்களைப் படித்துக் கொண்டிருந்த உண்மை நிலையை அவள் உணரவே செய்தாள்.

கண்களை மேலே உயர்த்தினார் அதிகாரி. "ஊம்" கொட்டினார்.

"என்னைக் காதலித்தார் இவர். நான் இவரது எழுத்துக்களைக் காதலித்தேன். இப்போது அவர் மனம் மாறி விட்டார். என்றால் அப்படி மனம் மாற முடியவில்லை ஆனால் நான் கலியாணம் செய்து கொள்வதானால் இவரைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன்" என்றாள் குமாரி பரிமளம்.

"நீங்கள் படித்துக் கொண்டிருக்கிறீர்களே அந்தப் பத்திரிகையில் என்னைப் பற்றியும் என் தந்தையான வீரபாகு அவர்களைப் பற்றியும் யாரோ கொடுத்த அபவாதச் செய்திகளை நம்பி வெளியிட்டிருக்கிறார்கள். இவரும் நம்பி விட்டார். நீங்கள் நம்பக் கூடாது ஸார்!" என்றும் தொடர்ந்தாள். குரல் தழு தழுத்தது.

பாண்டியன் கேலியாகச் சிரித்தான்.

காவல் அதிகாரி வேடிக்கைப் பார்ப்பது போல பரிமளத்தை ஊடுருவினார்.

"ஒரு கேஸ் விஷயமாக வந்தேன். இன்னொரு கேஸ் காத்திருக்கிறது. உங்கள் காதல் விவகாரத்தைக் கேட்க எனக்குப் பொறுமையில்லை" என்றார்!

பிறகு அவளிடமிருந்து கண்களைத் திசைத் திருப்பி பாண்டியனை நோக்கினார்.

"நான் இந்தப் பத்திரிகையை எடுத்துச் செல்ல வேண்டும்" என்று சொல்லி சினிமா நேசன் பத்திரிகையை நான்காக மடித்து ட்ரவுசர் பைக்குள் நன்றாகத் திணித்தார் அவர்.

விபரீதங்கள் விளையாக முளைத்துக் கொண்டிருந்த விந்தையை ரசிக்கும் நிலையிலா பாவம், பரிமளம் இருந்தாள்? அவர் புறப்பட்ட போலீஸ் ஜீப்பை விட்டுப் பார்வையை விலக்கினாள். எம்பித் தாழ்ந்த அழகிய மார்பகத்தை தடவி விட்டுக் கொண்டாள். சரிந்து விழவிருந்த சேலையைச் செம்மை செய்தாள். கலங்கிக் கொண்டிருந்த கோல விழிகளைத் திசை மறுகச் செய்தாள்.

"பரிமளம், என் லெட்டரை காசி கொடுத்தாரா?" என்று கேட்டான் பாண்டியன்.

"கொடுத்தார்...கொடுத்தார்! உங்ககிட்டே தனியே பேசுவதற்காகத்தான் நான் காத்திருந்தேன். நீங்கள் மாடியில் குடித்துக் கொண்டு, 'இல்லை' என்று என்னிடம் சொல்லச் செய்திருக்கிறீர்கள் குடி போதையில் என் தன்மானத்தைப் பாதிக்கும் அளவுக்கு என்னை அவமானப்படுத்தி விட்டீர்கள்!" என்று குற்றப் பத்திரிகை வாசித்தாள்.

குடி போதையில்தான் பாண்டியன் மீண்டும் 'கட கட'வென்று நகைப்பொலி கக்கினான்.

"சினிமா நேசன், காரன் உங்களை—உன்னை அவமானப்படுத்தியதை விடவா நான் அவமானப்படுத்தி விட்டேன் புறப்பட்டுச் சென்ற எஸ். ஐ. என் ரசிகர். இந்தத் தேவமனோஹரி என்னை நேசிப்பவள். உள்ளே நிற்கும் காசி என் குடும்ப நபர். அந்நியர் மத்தியிலா

நான் உன்னைப் பற்றி ஏளனமாகப் பேசிவிட்டேன். நம் காதல் விவகாரம் என்றுவது 'பைசல்' ஆக வேண்டியதுதானே? சமூகம் என்பது நாலு பேர்! ஒன்றிரண்டு பேர் அல்லது குறைய இருப்பதில் தவறில்லை. இந்தச் சமுதாயத்தின் மத்தியில் நான் என் நிலையை உன் நிலையை அம்பலப்படுத்தியதில் தவறேது? தற்போது நீங்கள் இனி புறப்படலாம்! திருவாளர் வீரபாகு உங்களுக்காக காத்திருப்பார்!'' என்று கள்ளமாகச் சிரித்தான் சிறுகதை மன்னன்.

''மிஸ்டர் பாண்டியன்!...பண்போடு பேசுங்கள். மகளுக்காகத் தந்தை காத்திருப்பது சகஜமதானே? இந்தப் பரிமளத்தை மறுபடியும் நினைவு படுத்திக் கொள்ளுங்கள். நானே விதி! நானே உங்கள் விதி! உங்களுக்கு விதி!...பொய் பேசினால் தெய்வம் கண்களை அழித்து விடும் என்பார்கள்! உங்கள் கண்களை அழிக்கத் தெய்வம் தேவையில்லை! நான் ஒருத்தியே போதும்! மீண்டும் சொல்கிறேன். என் தோழியின் முன் சொல்லுகிறேன்!...நீங்களே என் கணவர்!... நீங்கள்தான் எனக்கு மாலையிடப் போகிறீர்கள்!...இது உண்மை! நான் மதிக்கும் என் கற்பின் மீது ஆணை இது! அன்றொரு நாள் இரவில் நான் உங்கள் முன் வைத்த சபததைை நான் மறந்து விடவில்லை! இனி நீங்கள்தான் எச்சரிக்கையோடு மனிதராக—பிரபல எழுத்தாளர் அதிவீரராம பாண்டியனாக நிலவிப் பழக வேண்டும். ஆமாம்!...என் அப்பா எனக்காகக் காத்திருப்பார்! போகிறேன்!...போய் வருகிறேன்!...நீங்கள் மனிதராகி விடுங்கள்!...'டடம்' கொடுக்கிறேன்!''

புயலாக மறைந்தாள் குமாரி பரிமளம்!

பாண்டியனை மாடி அழைத்தது போலும்!

# 34. எங்கே சமூக நீதி?

கனவுத் தென்றலாகப் புறப்பட்டு அதிவீரராம பாண்டியனின் பங்களாவை மிதித்த குமாரி பரிமளம் சோகப் புயலாக அங்கிருந்து புறப்பட்டாள். நினைவுகள் கனவுகளாகவும் கனவுகள் நினைவுகளாகவும் மாறிய— மாற்றப்பட்ட மனநிலையையே துணையாக்கி வழி மிதித்து வழி பிரித்து நடந்தாள். அவள் இதயம் துடித்தது. வலது கண் படபடத்தது. தோளில் சரிந்து கிடந்த டெரிலின் நைலக்ஸ் புடவையைச் சமப்படுத்திக் கொண்டே நடையைத் தொடர்ந்தாள். உடுத்துயர்ந்த இந்தப் புடவை அவளுக்குத் தொழிலதிபர் வீரபாகுவின் அறிமுகத்தை நினைவு படுத்தியது. மார்பில் ஊசலாடிக் கொண்டிருந்த தங்கச் சங்கிலி அவரது அன்பைப் பிரகடனப் படுத்திக் கொண்டிருந்தது; இடது கை மணிக்கட்டில் நுழைந்த 'லேடீஸ் ரிஸ்ட் வாட்ச்' அவரது பாசத்தை அஞ்சல் செய்து கொண்டிருந்தது. 'அப்பா? அப்பா!...' என்று அவளது உளமனம் விம்மி வெடித்தது. அழுது புலம்பியது; காது வளையங்கள் இரண்டும் விதியாகவும் வினையாகவும் சுழன்றுடின!

செங்கதிர்ச் செல்வனின் இளம் பொற்கிரணங்களிலே இப்போது சூடு பரவத் தொடங்கியிருந்தன.

பரிமளம் டம்பப் பையைப் பிரித்தாள். சிறுகதை மன்னன் அதிவீரராமபாண்டியனின் கடிதம்—தனக்கு அவர் எழுதிய கடிதம்—முடிவை உறுதிப்படுத்திச் சொல்லிக் காட்டிய அந்தக் கடிதம் பத்திரமாக இருக்கிறதா என்று பார்க்கவே—சோதித்துப் பார்க்கவே அவள் டம்பப் பையைத் திறந்தாள்.

பாண்டியனின் கடிதம் பத்திரமாகவே இருந்தது!

'பாண்டியன் கடிதம் மாதிரியே பாண்டியன்பால் நான் கொண்டிருக்கும் காதலும் பத்திரமாகத்தான்

இருக்கிறது!...' அவளது மனச்சாட்சி எந்த விதியை யும் சாடி வெற்றி கொள்ளும் தீரத்துடன் இவ்வாறு தனக்குத்தானே சொல்லிக் கொண்டது. அந்த விசித் திரமான அமைதியின் பலமே அவளுக்கு வாய்த்திட்ட பலம் போன்று ஓர் உள்ளுணர்வு உடலெங்கும் ஊடுருவிப் பாய்ந்து பரவியது.

'இன்று நான் புதிதாய்ப் பிறந்தேன்!' என்ற புதிய பாடத்தை அவள் மறந்துவிட மாட்டாள். நினைத்துக் கொண்டாள். 'ஆயிரம் வாசல் இதயம்' என்று பாடுகிறார்கள். இதயத்துக்கு ஆயிரம் வாசல்கள் உண்டுதான், மெய்தான். ஆயிரம் எண்ணங்கள் அவள் சிந்தையில் சுடர் தெறித்து விட்டன. அதுவும் உண்மைதான். ஆனால், எல்லா இதய வாசல்களிலும், எல்லா இதய நினைவுகளிலுமே அவளுக்கு அந்த ஒரு சபதம்தான் திரும்பத் திரும்ப எதிரொலி பரப்பியது.

பாண்டியனின் இறுதித் தீர்ப்புக் கடிதத்தை நினைத்துக் கொண்டாள் பரிமளம் 'நான் நல்லவன் அல்ல என்பதை இந்நேரம் நீங்கள் புரிந்து கொண்டிருப் பீர்கள்; அது போலவே, நீங்கள் நல்லவள் அல்லள் என்பதைப் புரிந்து கொள்ளவும் நான் தவறிவிட வில்லை!' என்று எடுத்த எடுப்பில் அவன் பாண்டியன் அபாய அறிவிப்புக் காட்டிய அந்த வாசகம் அவளைப் பாடாய்ப் படுத்தியதையும் அவளால், அத்துணை சுலப மாக மறந்துவிட முடியவில்லை.

கெல்லீஸ் எல்லையைத் தொட்டாள் அவள்.

'மிஸ்டர் பாண்டியன் நல்லவர் அல்ல என்பது புரிந்தது. அது ரகசியத்துக்கு வாய்ப்பில்லாத ஓர் உண்மைதான் இது!—தேவமனோஹரிக்கு பாண்டியன் எழுதிய கடிதமும் பாண்டியனின் படத்தை அலங் கரித்து வைத்திருந்த சரளாவின்—மோகினி அவதாரம் எடுத்தாற்போன்று ஒளி சிந்தும் குமாரி சரளாவின் சாதுர்யமும் அவளுள் ஏடு விரிந்தன சற்றுமுன் பாண்டியனின் பங்களாவுக்கு விஜயம் செய்து திரும்பிய சட்டத்தின் காவலர்களையும் அவள் நினைவில்

கொண்டாள். மாடியில் மிஸ்டர் ஜெகதலப்பிரதாபனுக காட்சி தந்த பாண்டியனை அவள் சந்திக்கவில்லை என்றாலும் அவளுக்கு அவனைப் பற்றிப் பூரணமாகவே தெரிந்தது என்று தான் மனப்பூர்வமாக நம்பினாள்.

'மிஸ்டர் பாண்டியன்! நீங்கள் நல்லவர் அல்லர்!— இது உங்களுக்குத் தெரிந்த உண்மை. இவ் வுண்மையை நானும் புரிந்து கொண்டேன் எப் போதோ புரிந்து கொண்டேன். ஆனால் நான் நல்லவள் அல்லள் என்று ஏசியிருக்கிறீர்களே உங்கள் கடிதத் திலே?—அதற்குக் காரணம்?—அதற்குச் சாட்சி?... கேள்வி அவள் மனக்கண் முன்னே விசுவரூபம் எடுத்தது. பாண்டியனின் இந்தக் குற்றச் சாட்டுக்கு அடிப்படைக் காரணம் சினிமா நேசன மஞ்சள் ஏட்டின் அநியாயமான-பொய்யான நேர்மையில்லாத அபவாதச் செய்திகள் தான்!...புரிகிறது!... அந்தக் காரணம் ஆதாரமற்றது என்பதை நிஜமாகவே பாண்டியன் புரிந்து கொள்ளத் தவறி விட்டாரா?...சாட்சி இல்லாத ஒரு குற்றச்சாட்டை எப்படி நம்பினார் அவர்?...' அவள் நெஞ்சத்தின் கேள்விக்குப் பதில் சொல்ல வேண்டிய பொறுப்பாளி பாண்டியன் அல்லவா? விழிகள் கசிந்தன

சமுதாயத்தின் பிரதிநிதிகளான மனிதர்கள் தங்கள் தங்கள் சிந்தனைகளை வழி நடையாக்கி நடந்து கொண்டும் பேசிக் கொண்டும இருந்தார்கள்.

குமாரி பரிமளம் விழிப்புக் கொண்டாள். 'தொழி லதிபர் வீரபாகு—என் தந்தை அன்று என் மானத்தைக் காத்த தெய்வம்!...அன்றைக்கு சரளாவின் மோட்டார் சைக்கிளில் என் மானத்தைப் பறிக்கச் சதி செய்த போது, வீரபாகு அவர்கள் மட்டும் காரில் வந்து ஆபத் துக்கு உதவியிருக்காவிட்டால் அப்போதே என் மானம் கப்பல் ஏறியிருக்கும். நான் நிர்வாணக் கோலத்தில் நடுச்சந்தியில் நின்றிருப்பேன்?...அப்படிப்பட்ட ஒரு மகத்தான உதவியைச் செய்தவர் வீரபாகு!...அவர் என் தந்தைக்கு நிகரானவர்!...அத்தகைய ஒரு தெய் வத்தை-என்னைத் தன் மகளாக்கிக் கொண்டுள்ள அந்த

மனிதரை—என் அப்பாவை மனசில் கொண்டு இந்தப் பாண்டியன் என்னைச் சந்தேகப் படுகிறார்!... கடவுளே!...' சாரா காலையில் தன் வீட்டில் வீரபாகுவைப் பற்றிக் குறிப்பிட்ட பேச்சையும் அவள் ஞாபகம் செய்து கொண்டாள். சமுதாயத்தின் கண்ணோட்டத்தில் ஒரு பெரும் பணக்காரராகத் தோன்றும் அவர்—தொழிலதிபர் வீரபாகு ஒரு 'பெண் லோலனா'கவும் அதே சமுதாயத்தின் கண்ணோட்டத்தில் காட்சி தருகிறார் என்றும் அத்தகைய ஒரு விசித்திர மனிதரோடு பாசத்துடன்—பண்புடன் பழகினால் கூட சமுதாயத்தின் கண்களுக்கு, அப்பழக்கம் விபரீதமாகத் தோன்றுவதில் வியப்பில்லை என்றும் எச்சரித்தாள் சாரா!—'பாண்டியனைப் போல் வக்கிரப் புத்திகளால் அலைக்கழிக்கப்பட்ட அற்ப மனிதர்கள் பட்டியலில் இந்தச் சாராவையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். சாராவின் குருட்டுப் புத்தி கொண்ட எந்தச் சமூகத் துரோகியோ அனுப்பிய அபவாதச் செய்திகளை நம்பி, பங்களூர் மஞ்சள் பத்திரிகை கூறும் பொய்யை மெய்யாக்கி ஒரு செய்தியாக்கி வெளியிட்டு விட்டான்?... அந்தப் பொய்யை இந்த மனிதர்கள் நம்புகிறார்களே? பொய்யை நம்பத் துணியும் மனிதர்களைக் கொண்டு வாழும் இந்தச் சமுதாயம் ஒரு சமுதாயமா? பொய்யினின்றும் பிரிந்து—பொய்யைப் பிரித்து, உண்மையைப் புரிந்து கொள்ளவும்—சமூகத்துக்குக் கடமை இல்லையா?... வெளிப் பார்வைக்கு அழகாகத் தோன்றும் சைனபஜார் பார்வைக்குத் தெரியாமல் ஆபத்தை உள்ளடக்கி வைத்திருக்கிறதே! அம்மாதிரி தான் இந்தச் சமுதாயம்!... மெய்யை நிலைநாட்ட வேண்டிய சமுதாயம், பொய்யை நம்பி விட்டதே!... தெய்வமே! சமூக நீதி எங்கே?...'

கெல்லீஸ் பஸ் நிலையம் வந்தது.

குமாரி பரிமளத்தின் இதய வானில் ஒரு புத்தம் புதிய மின்னல் துவண்டு தெளிந்தது. அந்த மின்னலில் பிரகாசத்தில் அவள் இருட்டைக் கடந்து

வெளிச்சத்துக்கு வந்தது போன்று நின்றாள். தலைநிமிர்ந்தாள். நேர் கொண்ட பார்வையைச் செலுத்தி நின்றாள்.

'சமுதாயம் கிடக்கட்டும்....என்னையும் அப்பா வீரபாகுவையும் சம்பந்தப்படுத்தி அவதூறுச் செய்திகள் அநியாயமாக வெளிப்படுத்திய சினிமா நேசன் மஞ்சள் பத்திரிகையின் செய்தி பொய் என்பதை நான் நிலைநாட்ட வேண்டாமா?...பொய், பொய்தான் என்று நிரூபிக்கப்பட்டால் அப்பால் உண்மையை எங்களது தந்தை மகள் பாசம் என்கிற மெய்—உண்மை தன்னாலே இந்த அருமைத் தமிழ்ச் சமுதாயத்தின் கண்களுக்கு நிலைநிறுத்தப்பட்டு விடாதா? எனக்கும் வீரபாகுவுக்கும் இடையே பிணைப்புக் கொண்டுள்ள மகள்—தந்தை பாசம் புனிதமானது என்ற உண்மையை நான் அறிவேன் அப்பாவான வீரபாகு அறிவார். தெய்வம் அறியும்! இவை மட்டும் போதாது; சமூகமும் அறியவேண்டும்!... ஆமாம்; சமூகம் அறிந்தால், அப்பால் என் காதலர் மிஸ்டர் அதிவீரராமபாண்டியனும் அறிந்து கொள்ளுவார்!...ஆமாம்!...அதுவே இந்தச் சமுதாயத்தை வெல்ல நேரிய வழியாகும்!...இல்லையேல் இந்தச் சமுதாயத்துக்கு ஒரு இடை வழி கிடைத்துவிடும்!... உண்மை இதுவே!...பாண்டியனை வெற்றி கொள்வதற்கு முன், இந்த ஒரு கடமையையும் இப்போது நான் உடனடியாகச் செய்து ஆகவேண்டும்!..."

ரத்ததானம் பெற்ற பாங்கில் அவள் புதிய மனம் கொண்டு ஆணவமான புன்னகையைத் தன்னுடைய கவர்ச்சி மலிந்த இதழ்களிலே நெளிய விட்டாள், குமாரி பரிமளம். இப்போது பாண்டியனின் கடிதம்...அவள் முடிவு அவளுக்கு ஒரு பிரச்னையாகத் தோன்றவேயில்லை! 'இந்தப் பரிமளத்தை மீண்டும் நினைவுபடுத்திக் கொள்ளுங்கள். இந்தப் பரிமளமே விதி!...நானே உங்கள் விதி!...உங்களுக்கு விதி!...மீண்டும் சொல்கிறேன். என் தோழி தேவமனோஹரியின் முன்னே சொல்கின்றேன். நீங்களே என் கணவர்!...நீங்கள்தான் எனக்கு மாலையிடப் போகின்றீர்கள்!' என்று அவள்

சூள் உரைத்த சம்பவம், சனிக்கிழமை இரவு பாண்டி யன் முன்னிலையில் நடத்திக் காட்டிய நீதி விசாரணைப் படலத்துக்கு மறு ஒத்திகை ஆனதோ?

காலம் யாருக்கும் கட்டுப்படுவதில்லை என்கிறார் களே, இந்த வாதம் நிஜம்தானா?

பொய்!

பின் இந்தக் காலம் பரிமளத்துக்கு மட்டும் கட்டுப் படுவானேன்?

அவளுடைய கைக்கடிகாரத்தில் காலம் கட்டுப் பட்டுக் கிடந்தது, கட்டுண்டும் கிடந்தது. கட்டுண்டு கிடப்பதால்தான் காலம் ஓடுகின்றதோ?

யார் கண்டார்கள்!

குமாரி பரிமளம் தன்னுள்ளாக நமட்டுச் சிரிப்புச் சிரித்துக் கொள்ளத் தவறவில்லை. பாண்டியன் முன்னே பல்வேறு சந்தர்ப்பங்களில் செய்த சபதங் களும், உரைத்த சூள்களும், வாதிட்ட செய்திகளும் அவளுக்கு ஏனோ மலைப்பாகத் தோற்றம் தந்தன. என்றாலும் உண்மையை நிலைநாட்ட வேண்டிய பொறுப்பு ஒன்றுதான் இப்போது அவளுக்கு விதி அருளிய ஒரு கடமையாக, வினை அருளிய ஒரு பொறுப் பாக நிர்ப்பந்தக் கட்டளை போன்று தரிசனம் கொடுத்தது.

இந்தக் கடனை எப்படி நிறைவேற்றுவது?

அவள் பாரிமுனை செல்ல முடிவிட்டிருந்தவள் மறு விநாடி தன் திட்டத்தை மாற்றிக் கொண்டாள். கெட்ட கனவின் கெட்ட நிழலென அச்சுறுத்திய முருகன் கோவில் குருக்களான புண்ணியகோடியைப் பற்றி தோன்றிய சம்பவத்தை நினைக்கும் நேரமா இது? ..

மேற்கு மாம்பலத்தில் தன்னுடைய சின்னஞ்சிறு குடிலின் முன்னே மோகினி போன்று அழகே உருவாகத் தோன்றிய அருமைத் தோழி சரளாவை எண்ணிக் கொண்டாள். சரளாவிடம் தொழிலதிபர் வீரபாகு மஞ்சள் பத்திரிகையான சினிமா நேசன்

பத்திரிகையைப் பழக்கம் உண்டா என்று விவரம் கேட்ட நிகழ்ச்சியையும் அவள் அக்கேள்விக்கு 'பழக்கம் உண்டு' என்கிற போக்கில் பதிலிறுத்ததையும் நினைவு படுத்திக் கொண்டே நடந்தாள்.

புரசைவாக்கம் நெடுஞ்சாலையில் 'ராக்ஸி' தியேட்டர் பஸ் நிறுத்தம் வந்தது.

அலுவலகத்துக்குச் செல்லப் போவதில்லை பரிமளம்!—தியாகராய நகர் செல்லப் போகின்றாளாம்!

திரும்பவும் அவளுக்கு மீண்டும் அதிர்ச்சி ஏற்பட்டது பாண்டியன் தன் காதலை நிராகரித்து வழக்கம் போல் சொன்ன—எழுதிய பாண்டியனின் கடிதத்தை மறைத்துவிட்டு தொழிலதிபர் வீரபாகு விடம் வேண்டுமென்றே பொய்யைப் புனைந்துரைத்த தன்னுடைய போக்கை—பேச்சாக நினைத்துக் கொண்டாள். அப்பாவிடம் பொய் பேசி விட்டேன், 'என்னை மிஸ்டர் பாண்டியன் கல்யாணம் செய்து கொள்ள இசைந்து விட்டார்,' என்று அப்பாவிடமே பொய் சொல்லிட்டேன்!...

பொய்யை நம்பிய அப்பா, 'ஆபட்ஸ்பரி பங்களா, சுசீலா கச்சேரி என்று ·பிரமாதமாகத் திட்டம் போட்டுட்டாங்க!... அப்பாகிட்டே உண்மையைச் சொல்லாமல தப்ப வழியில்லை!...பாவம்!...'

பஸ் இன்னமும் வரவில்லை.

நெஞ்சின் வலி பாதங்களில் வைரம் பாய்ச்சியது போலும்!

வெய்யில் தாளவில்லை.

நெரிசல் தாங்கவில்லை.

பரிமளம் இருப்புக் கொள்ளாமல்—நிலைகொள்ளாமல் தவித்தாள். பஸ்ஸுக்கு நிற்கும் மனிதர்களுக்கு அவள் ஒரு காட்சிப் பொருளாகி விட்டாளா? சே! என்ன மனிதர்கள்!... என்று வருந்தினாள்; ஆத்திரப் பட்டாள். ஓர் ஓரமாக ஒதுங்கினாள். தேவமனோஹரியை யும் சரளாவையும் இன்று சந்திக்க வேண்டும் என்று

யோசனை செய்தவளாக, ஒதுங்கியபோது "டேய், சினிமா நேசன் இந்த வாரப் பத்திரிகையிலே ஒரு பெண் போட்டோ முதல் பக்கத்திலே வெளி வந்திருக்கே, அந்தப் போட்டோவுக்குடைய குட்டி இவள்தாண்டா! ஷோக்காக இருக்காளே! நல்ல பெண்ணடா!...' பலே கைகாரிதான் போல!... இல்லாட்டா, பெரும் பணக்காரரான வீரபாகுவை தன் வலையிலே சிக்கவைத்துவிட முடியுமா?" என்று ஒரு நாகரிக வாலிபன் அநாகரிகமாகப் பேசிய பேச்சைக் கேட்டாள்.

'ஐயோ தெய்வமே!—' தவித்தாள் பரிமளம்.

சப்-இன்ஸ்பெக்டர் சாந்தலிங்கம் அதோ, ஜீப்பில் பறந்து வருகிறார்!...

"அப்பா!...அப்பா!..."—குமாரி பரிமளம் தரையில் சாய்ந்தாள்!...

# 35. பாவத்துக்குக் கூலி!

தொழில் பிரமுகர் திருவாளர் வீரபாகுவின் பங்களாவிலே என்றுமில்லாத அமைதி பரிபாலனம் செய்து கொண்டிருந்தது. அந்த ஆழ்ந்த அமைதிக்கு வாய்த்திட்ட சோதனை போன்று, தொலைபேசி பெருங் குரலெடுத்துக் கூச்சல போடத் தொடங்கியது.

மங்களம் இருந்திருந்தால், இந்நேரம் ஓடிவந்து தொலைபேசிக் குரலுக்கு மதிப்புக் கொடுத்திருப்பார்கள். அவள் அப்பொழுது அங்கு இல்லை. அவளும் பெங்களூர் பங்கஜமும் சைஞபஜாருக்கு இம்பாலாவில் சென்று விட்டார்கள். டிரைவர் மஜீத்தின் கடமை உணர்வு, அவனது இயல்பான துப்பறியும் கதை ரசனைக்கு அப்பாற்பட்டதுதான்.

அழத் தொடங்கிய குழந்தை அழுகையை நிறுத்தாமல் அடம்பிடிப்பது மாதிரி தொலைபேசி இன்னமும் அலறிக் கொண்டுதான் இருந்தது.

இப்போதுதான் வீரபாகு சுயப் பிரக்ஞை எய்தலானார். எதிர்ப்புறத்தில் நிலைக்க விட்டிருந்த சலனமடைந்த தன் பார்வையை அவர் திசைமாற்றிக் கொண்டார். "ஸார், டெலிபோன்!" என்ற அச்சம் இணைந்த நினைவூட்டலின் அடையாளக் குரலும் அவரது செவிகளில் விழாமல் இல்லைதான்! 'ஊம்' என்று அழுத்தமான ஆத்திரத்தோடு எழுந்தார்; நிற்க முடியவில்லை; தள்ளாடினார்; பிறகு சமாளித்துக் கொண்டு நடந்தார். பாதங்களில் லேடி சாட்டர்லீவி' என்ற அந்த நாவல் சிக்கியது. சிக்கலைத் தீர்க்கத்தானு தெரியாது வீரபாகுவுக்கு?

"ஹலோ!"

"எஸ்...வீரபாகுதான் பேசறேன், ஸ்பீக்கிங் ப்ளீஸ்!...ஓ!...எஸ் ஐ சாந்தலிங்கமா? அடடே, என்னுங்க விசேஷம்?..."

"உங்க பரிமளம் கெல்லீஸ் ராக்ஸி தியேட்டரண்டையுள்ள பஸ் ஸ்டாப்பிலே மயங்கி விழுந்து கிடக்குது!"

"ஆ! ஐயையோ!...அப்படிங்களா? என்னோட டாட்டர் பரிமளத்தின் மாரேஜ் விஷயமாக ப்ளான் போட்டுக்கிணு இருந்தேன் அது சம்பத்தமாகத்தான் என் மிஸஸ் கூட சைனு பஜார் வரை போயிருக்கிறுள். எஸ் ஐ ஸார், பரிமளத்துக்கு ஒண்ணும் ஆபத்து இல்லீங்களே? அதை உங்களுக்குத் தெரியுங்களா?"

"தெரியும். அப்புறம் நான் உங்களை மீட் பண்ணுகிறேன். முதலில் அந்தப் பெண்ணை வந்து அழைச்சிட்டுப் போங்க. யாரோ ஒரு பிள்ளையாண்டான் என்னவோ அபாண்டம் பேசியிருக்கான். அதைக் கேட்டு அதிர்ச்சியடைஞ்சு உடனே 'அப்பா— அப்பா'ன்னு கதறிக் கீழை தரையிலே மயங்கி விழுந்திடுச்சாம்!...ஒரு உண்மை புரியுதுங்க. பெண் அதீதமான அழகோடு இருப்பதும், ஆண் அளவுக்கு மீறி அயோக்கியத்தனம் செய்யறதும் சமுதாயத்தின் மத்தியிலே தீராத பிரச்னைகளாகத்தான் ஆயிடுதது!

"ஆல் ரைட்! எனக்கு செக்ரட்டேரியட்டிலே அவசர ஜோலி இருக்கு!"

எதிர் முனையில் நிலவிய டங் என்ற சத்தத்தைக் கேட்ட பிறகுதான் வீரபாகு பதறித் துடித்தவராக ஏதேதோ சலனங்களோடு செய்தி வாங்கிக் கருவியை வைத்தார். கொவ்வைப் பழங்களாகச் சிவந்து கிடந்த கண்கள் கண்ணீரில் நீந்தின. அந்தக் கண்ணீரின் பாசக்கரையிலே பரிமளம் ஒதுங்கிக் கரை சேர்ந்திருந்தாள்.

"அம்மா பரிமளம்! மகளே!" அவரது உதடுகள் விம்மின.

"ஓ! மிஸ்டர் அதிவீரராமபாண்டியன் என்னைக் கல்யாணம் செஞ்க்சுகிட சம்மதிச்சிட்டாருங்க, அப்பா!" என்று அதிவீரராமபாண்டியனின் பங்களா வாசலில் இன்பம் சுரக்க எழில் சுரக்கத் தெரிவித்த பரிமளத்தின் சொற்கள் அவருள் எதிரொலித்தன! 'எஸ் ஐ சாந்தலிங்கம் ஏன் அப்படிச் சொன்னார்?...பரிமளத்தையும் என்னையும் உதாரணங்களாக மனசிலே நினைச்சுக்கிணு தான் அப்படிச் சொன்னாரோ? சினிமா நேசன்காரன் அபவாதம் எழுதினனே, அதுகளை படிச்ச எவனோ தப்பி என்னவோ உளறியிருப்பான். அதைக் கேட்டுட்டு, பரிமளம் மயக்கம் போட்டு விழுந்திடுச்சுப் போல!'

நிற்க நேரம் ஏது?

வரவேற்புக் கூடத்தின் தாழை விலக்கினார் வீரபாகு. அழைப்பு மணியை அழுத்தி ஓடிவந்த காவற்காரனிடம் ஓடிப்போய் டாக்ஸி கொண்டு வருமாறு பணித்தார்.

ஒளிந்து கிடந்த புத்தம் புதிய 'ஹீபான் ஸில்க்' புடவை இப்போது ஒளி வெள்ளத்தில் மிதந்து கிடந்தது.

வீரபாகு அதை எடுத்தார். "ஓய்!" என்று குரல் கொடுத்தார்.

அழகு மோகினி அவதாரம் எடுத்து வந்து நின்றது.

"இந்தா, உடுத்திக் கொள்! கேவலம் ஒரு குள்ள நரி ஒரு வேங்கைகிட்டே வாலாட்ட முடியாது என் கிறதை இப்போவாவது நீ புரிஞ்சிக்கிறு இருப்பாய்! ஆறு உன்னோடே விளையாட்டு, ஆசைப்பட்டு நீ விளை யாடிய விளையாட்டு என் மகள் பரிமளத்தை முச்சந்தி யிலே மயக்கம் போட்டு விழச் செஞ்சிடுச்சே! பாவி நீ! இந்தாப் பணம்! ஆயிரம் இருக்கு! பாவத்துக்குக் கூலி!" என்று புத்தம் புதிய பத்து ரூபாய் நோட்டுக் களை வாரி வீசினர். 'ஆட்டோமாட்டிக்' காமிராவைப் பத்திரமாக எடுத்து வைத்தார் அவர்.

வரவேற்புக் கூடத்தில் ரம்மியமான அழகு மீண்டும் குடிபுகுந்தது!

பழைய 'நெடி'கூட இல்லை!

"நீ இனி புறப்படலாம்! என் வேலை முடிந்து விட்டது!"

"ஓ! உன்னோடே 'வானிட்டி பாக்' வேணுமா? இதோ!" என்று 'கட கட'வென்று பேய் போலச் சிரித்த படி அந்த டம்பப் பையிலிருந்த பொருள்கள் அனைத்தை யும் எடுத்து காட்ரெஜ் பீரோவில் வைத்துப் பூட்டி விட்டு வெறும் பையை—காலிப் பையை வீசினர்.

"போ! போய் விடு!" என்று ஆணையிட்டார். "என் மானத்தைப் பறித்தாய் நீ! என் மகளுக்கும் களங்கம் கற்பித்தாய்! இப்போது உன் மானம் என் கையில்!...மறந்து விடாதே, ஓடு!"

மோகினி அவதாரம் முடிந்து விட்டதா என்ன?

அந்த முடிவின் ஆரம்பம் என்ன?

கஞ்சமலர்ப் பாதங்களின் மெல்லிய ஓசை அடங்கி விட்டது.

கூடம் வெறிச்சோடிக் கிடந்தது!

டாக்ஸியின் குழல் சத்தம் கேட்டது.

தொழிலதிபர் வீரபாகு கதவைப் பூட்டிக் கொண்டு சாவிக் கொத்தும் தானுமாக வெளி முகப்பிற்கு வந்தார்.

சூடேறிய வெய்யில் சூடேற்றிக் கொண்டிருந்தது.

அப்போது சிறுகதை மன்னன் அதிவீரராம பாண்டியனின் புதிய கார் முகப்பில் வந்து நின்றது!

அந்தக் காரில் பரிமளம் இருந்தாள்!

பரிமளம் புழுதியில் வீசப்பட்ட நாதவீணையாக காட்சி தந்தாள்!

"அம்மா பரிமளம்!" என்று தன்னுடைய அந்த ரங்க சுத்தியான பாசம் முழுவதையும் குரலாக்கிக் கூவி அழைத்தபடி, வழிந்த விழிநீரை வழித்துக் கொள்ளக் கூட நினைவிழந்து, பாண்டியனின் 'டாட்ஜ்' காரின் அருகே விரைந்தார் வீரபாகு. காரைப் பார்த்ததும், காருக்குடைய நபரைச் சட்டென்று அவருக்கு நினைவு வரவில்லை. காரிலிருந்து இறங்கித் தயக்கம் காட்டி நின்ற பாண்டியனைக் கண்டவுடன் தான், 'இது மிஸ்டர் பாண்டியனின் கார்' என்ற உணமை விளங்கத் தொடங்கியது. பரிமளத்தோட வருங்காலக் கணவர் மிஸ்டர் பாண்டியன்! என்ற இன்ப நினைவு அவருள் தோன்றியதும், இன்பத் தவிப்பு அவருள் கிளர்ந் தெழத் தொடங்கியது. புதிய மலர்ச்சியையும் நூதன மான அமைதியையும் மீட்டுக் கொண்ட நினைவில்— நிலையில் அவர் பாண்டியனை நோக்கினார்

"வாங்க, மாப்பிள்ளை!" என்று பரிவுடன் வர வேற்றார்.

காரின் பின் கதவைத் திறந்து விட்டபடி மயக்க நிலையில் ஸ்மரணை தப்பிக் கிடந்த பரிமளத்தை எப்படி உள்ளே கொண்டு போய்ச் சேர்ப்பது என்ற பிரச்னை யில் மனம் குழம்பித் தவித்த எழுத்தாளன் பாண்டியன் குழம்பிய கண்களோடு வீரபாகுவை ஏறிட்டு நோக்கினான்.

அந்தப் பார்வையின் புதிர்ச்சுழலை ஊகிக்க நேர மின்றி, பரிமளாவைக் கூர்ந்து பார்த்த வீரபாகு தலையைத் தாழ்த்தியபடி காரின் பின் ஆசனத்தை அடைந்து, நினைவு தப்பிய பரிமளத்தைத் தூக்கி அணைத்த வண்ணம் தோள்களில் போட்டுக் கொண்டு,

புதையல் எடுத்தவனின் பூரிப்போடு தன்னுடைய பங்களாவின் அந்தம் நிறைந்த வரவேற்புக் கூடத்தில் ரத்தின ஜமுக்காளத்தில் கிடத்தினர். அப்போதுதான் அவருக்கு நல்ல மூச்சு திரும்பியிருக்க வேண்டும். வந்து நின்ற டாக்ஸியின் ஞாபகமும் அப்போதுதான் வந்தது போலும்! கைதட்டி வேலையாளைக் கூப்பிட்டு ஒரு ரூபாய்ப் பணத்தைக் கொடுத்தனுப்பினர் பிறகு இரண்டு முறை தொலைபேசியின் எண்களைத் திரும்பத் திரும்பச் சுற்றினர். 'ஞான பண்டிதா! எங்க பரிமளத்தை நல்லபடியாகக் காப்பாற்றிக் கொடு, அப்பனே! என்னோட இன்பக் கனவையும் நிறைவேற்றி வச்சுடு!' என்று சூன்யத்தில் நின்றாடி—நிறைந்தாடிப் பழகிய இளமையைக் கைதொழுதார்.

குழப்பத்திற்குட்பட்டவனாக, வந்த காலோடு இன்னமும் நின்று கொண்டுதானிருந்தான்.

"உட்காருங்க!" என்றார் வீரபாகு.

பாண்டியன் அவ்வேண்டுகோளைச் செவிமடுத்ததாகவே தோன்றவில்லை.

'எங்க பரிமளம் எல்லாம் சொல்லிச்சு!"

"ஓ! அப்படியா?" என்றான் பாண்டியன்.

வீரபாகுவின் பார்வை பரிமளத்தின் மீது ஆரோகணித்திருந்தது. எனனவோ எண்ணியவர் போன்று பதட்டத்துடன் நடந்து பரிமளத்தின் மூக்கடியில் விரல்களைப் பதித்துப் பார்த்தார், மறுகணம் அவரது கறுமை உதடுகளிலே அமைதிப் புன்னகை நெளியத் தலைப்பட்டது.

"நான் ஒண்ணும் நம்பர் அயோக்யன் என்று உங்களை முதன் முதலிலே பார்த்ததும் என்னை அறிமுகப்படுத்திக்கிட்டதை நீங்க மறந்திருக்க முடியாது. அப்படிப்பட்ட அயோக்யனுக்குக் கிடைத்த ஒரு வரப் பிரசாதம் போல எனக்கு பரிமளம் மகளாகக் கிடைச்சிருக்கு, மிஸ்டர் பாண்டியன்! உங்க கையிலே குறைகள் நிரம்பியிருக்கிற உண்மையை—ரகசியத்தை தெள்ளத் தெளியப் புரிஞ்சுக்கிட்டுங்கூட உங்களோட

எழுத்துக்களையே பேரில் கொண்டுள்ள ஒரே மயக்கத்திலே உங்களைக் காதலிக்க—உங்களைக் கல்யாணம் பண்ணிக்கணும்னு சிவபெருமானுக்காக ஊசி முனையிலே தவம் செஞ்ச பார்வதி தேவி மாதிரி, தவம் செஞ்சு, அந்தத் தவமும் பலிச்சிட்டுது. என் சொந்த விருப்பு வெறுப்புகளுக்கு அப்பாலே எங்க பரிமளத்தோட ஆசைதான் எனக்கும் என் மனைவி மங்களத்துக்கும் ஒரே லட்சியமாக இருந்து கொண்டு வருது!" என்றார்.

பிரமை பற்றி நின்ற பாண்டியன் குறுக்கிட்டு என்னவோ சொல்ல வாயெடுத்தான்.

அப்போது:

இம்பாலாவிலிருந்து மங்களமும் பங்கஜமும் இறங்கி உள்ளே நுழைந்தார்கள்!

# 36. மாஜி காதலன்!

"வாங்க மாப்பிள்ளை!" என்று அன்புடன் வரவேற்றவாறு உள்ளே பிரவேசித்த மங்களம், கூடத்தில் கிடந்த பரிமளத்தைக் கண்டதும் பதை பதைத்துப் போய் விட்டாள்.

"ஐயையோ!" என்று ஓலம் பரப்பினாள். "என்னுங்க நேத்திக்கு நம்ப பரிமளத்திற்கு...விதியின் கூத்து முடிஞ்சிட்டுதுன்னு சந்தோஷபட்டுக்கிணு இருக்கிறப்ப இப்படியொரு பயங்கரமா?" என்று பதறித் துடித்தாள். கண்ணீர் மாலை நீண்டது.

"சினிமா நேசன் பத்திரிகையைப் படித்த இளவட்டங்கள் பரிமளத்தைக் கண்டு ஏதோ ஏசிப் பேசிக்கிட்டு இருந்ததை உங்க பரிமளம் கேட்க நேர்ந்திருக்கிறது. உடனே மயங்கிச் சுருண்டு விழுந்திட்டுதாம்! இந்தக் காட்சியை என்னோட சப் இன்ஸ்பெக்டர் சிநேகிதர் பார்த்திட்டு, உடனே எனக்கு போன் பண்ணினார். என் காரிலே பரிமளாவைப் போட்டுக்

கொண்டு ஓடிவந்தேன்!" என்று விவரம் சொன்னான் பாண்டியன்.

"எனக்கும் அந்த எஸ். ஐ. டெலிபோனிலே தகவல் தெரிவித்தார். நான் டாக்ஸி பிடிச்சிக்கிட்டு புறப்பட்ட சமயத்திலே நம்ப பாண்டியன் வந்திட்டார், பரிமளத்தைக் கொண்டுகிணு!" என்று ஆருயிர்த் துணையிடம் செய்தியின் நடப்பை விவரித்தார் வீரபாகு.

டிரைவர் நாலைந்து பெரிய பொட்டலங்களைக் கொணர்ந்து வைத்துச் சென்றார்.

"வீரபாகு ஸார்! நான் புறப்படுறேன். வேலைகள் நிறைய இருக்கு. நாளைக்கு ஷூட்டிங் வேறு வச்சிருக்கானுக!" என்று நிலை பெயர்ந்தான் சிறுகதை—சிறுத்தையான அதிவீரராம பாண்டியன்

"உங்களுக்கு வேலைகள் நிரம்ப இருக்கிறதிலே அதிசயம் ஏதும் கிடையாதுங்க பாண்டியன். கல்யாணம்னு மாப்பிள்ளை வீட்டைக் காட்டிலும் பெண் வீட்டுக்குத்தான் வேலைகள் கூடுதலாக இருப்பது சகஜம் என்றாலும் கூட, உங்க பங்குக்கு நடக்க வேண்டிய காரியங்களை நீங்க ஒண்டியாகத்தானே செஞ்சாக வேணும்! புரியாமல் இல்லே! இருங்க. பரிமளம் சுயநினைவு அடைஞ்சதும் புறப்படலாம். மங்களம், மாப்பிளளைக்கு டிக்ரி காப்பி போடு. நம்ப பரிமளம் பிரபல எழுத்தாளர் பாண்டியனின் உடைமையாக ஆனப்புறம், இனி தர்மராஜன் வந்தால்கூட, நம்ப பெண்ணோட உயிரை அசைக்கவே முடியாதாக்கும்! பங்கஜம், நீங்க பங்களூருக்கு ட்ரங்கால் போட்டுப் பேசிடுங்க. உங்க பையனையும் வரச் சொல்லிடணும். இன்னும் நாலைந்து நாளிலே மாரேஜ் நடந்து முடிஞ்சிடும்!"

சம்பந்தப்பட்ட நபர்களின் முகங்களை வசம் பார்த்துத் திரும்பி பேசிவிட்டு, பாண்டியனை ஏறிட்டு விழித்தார் வீரபாகு.

முகம் வெளிறி நின்ற பாண்டியன் இப்போதும் வாயைத் தூக்க முடியாமல் போய்விட்டது.

டாக்டர் சாரி வந்து விட்டார்!

மின் விசிறிகள் நளினம் பயின்ற பாவனையில் அழகாகச் சுழன்று மெல்லிய பூங்காற்றை வாரி வழங்கிக் கொண்டிருந்தன.

டாக்டர் சாரி அசகாய சூரர். ஸாரி என்று அவர் சொல்லாவிட்டால், அப்புறம் அவரது நாடிக்குழலின் திசைப் பக்கமே தலை வைத்துப் படுக்கப் பயப்படு வானும் திருவாளர் யமன். அவ்வளவு கெட்டிக்காரர் என்று பொருள்.

"வாங்க, டாக்டர் ஸார்!"

"எஸ்...எஸ்!" என்று சொல்லி, சிகரெட் விழாமல் புகையை விழச் செய்தவாறு உள்ளே ஒயிலாக வந்து நின்ற டாக்டர் சாரி, மூக்குக் கண்ணாடியைச் சரிப் படுத்திக் கொண்டு பூட்ஸ் காலோடு முழந்தாளிட்டுக் குந்தி, குமாரி பரிமளத்தைப் பரிசோதித்தார்.

கணங்கள் பேய்க் கணங்களாகச் சிரித்தன.

வீரபாகுவும் மங்களமும் உயிர்களைக் கைகளில் பற்றியவாறு உலகத்துத் தெய்வங்களை எல்லாம் நெஞ் சங்களில் நிறுத்தி தொழுத வண்ணம் நின்றார்கள்.

பாண்டியனின் சிந்தனை எங்கோ திசை தப்பிச் சுழன்றது போலும்!

ஊசி மருந்துப் புட்டிகள் இரண்டு காலி!

"வீரபாகு ஸார், இந்தப் பெண் யார்?"

"பெயர் பரிமளம்!"

"உங்களுக்கு என்ன சொந்தம்?"

"என்னோட டாட்டராக்கும்!"

"இஸ் இட் ஸோ? அப்படியா?...உங்கள் மகளா இது?"

"என் சொந்த மகள் மாதிரி, டாக்டர் ஸார்!"

"அப்படியென்றால்...?"

"இந்தப் பெண் பரிமளத்தைத்தான் நான் அடாப்ட் செஞ்சுக்கிடப் போறேன், அடுத்த வாரம்!"

"ஓஹோ! உங்களுடைய சுவீகாரப் புத்திரின்னு சொல்லுங்கோ!"

"ஆமாங்க!..."

பரிமளத்தின் கோலமலர் விழிகள் இனியாவது திறக்கக் கூடாதா, தெய்வமே?

வீரபாகுவும் மங்களமும் உயிர்க்கழுது துடிதுடித்தார்கள், பாவம்!

ஆமாம், பாவ புண்ணியத்தின் ஜனத்தொகைக் கணக்கு பாலன்ஸ்ஷீட் உருவாக்கும் பெறும் வேளை கெட்ட வேளைதானு அது?

"டாக்டர், கேஸ் எப்படி இருக்குங்க?"

"ஸீரியஸ் கேஸ்தான். ஆனால் உயிருக்கு ஒன்றும் பயம் இல்லே!"

"நல்ல காலம், நாங்க பிழைச்சிட்டோம். எங்க பரிமளம் பிழைச்சு எழுந்தால்தான் நாங்க உயிர் பிழைக்க முடியுமுங்க!" என்று தம்பதி இருவரும் மாறி மாறிப் பரவசத்துடனும் தவிப்புடனும் பேசினார்கள்.

"ஓ! அவ்வளவு பாசமா உங்களுக்கு, பொண்ணு மேலே! மிஸ்ஸ் வீரபாகுவோட புதிய பாசம் என்னைத் திகைக்க வச்சிட்டுது!...உங்க பாசம் எனக்கு ஆறுதலாக இருக்கு!" என்றார் டாக்டர்.

டாக்டரின் பார்வை மீண்டும் நோயாளிப் பெண் மீது மொய்க்கத் தலைப்பட்டது.

"வீரபாகு ஸார்! இவ்வளவு அபூர்வமான தெய்வீக அழகு படைச்ச பெண்ணைப் பார்த்ததும் கையெடுத்துக் கும்பிடணும்னு தோணுச்சு. என் பொறுப்புணர்ச்சியிலே அந்த நினைப்பை மாற்றிக்கிட்டேன். இவ்வளவு அழகான பெண்ணை நல்ல மாப்பிள்ளையாகத் தேர்ந்தெடுத்துக் கல்யாணம் செஞ்சு வச்சுடுங்கோ!...பை தி பை!...ஆமாம் இத்தனை சர்வ லட்சணம் படைச்ச

பொண்ணுக்கு ஹிஸ்டீரியா எப்படிப் பிடிச்சுது? அதுவும் தொழில் பிரமுகரான உங்களோட மகளாக ஆனதுக்கப்புறம் எப்படி இந்த விசித்திர நோய் இந்தப் பெண்ணை அட்டாக் பண்ணுச்சு? கவலைகள், வேதனைகள், குழப்பங்கள் எல்லாம் இதோட மனசைத் தாக்கி, மூளையையும் தாக்கி இருக்கு. கேஸ் நிலைமையைப் பார்த்தால் இப்போது முதல் தடவையாக இப்படி மயக்கம் ஏற்பட்டிருக்க வேணும்னு தோணுது! ஓ!... அப்படித்தானே?... ஆல்ரைட். இனியாவது உங்க புதல்விக்கு அமைதியும், ஆறுதலும், மகிழ்ச்சியும் உண்டாகச் செய்யுங்க! அது உங்க கடமை! நம்ப சினிமாவிலே வந்து டாக்டர் சஸ்பென்ஸை வைத்துச் சொல்லறதாட்டம்தான நானும் சொல்ல வேண்டி இருக்கு. அதிர்ச்சி எதுவும் ஏற்படக் கூடாது உங்க பொண்ணுக்கு!"

அடுத்த சிகரெட் எரிந்தது.

"அப்படியே செய்கிறேன், டாக்டர். நீங்க தெய்வம்!"

"நோ!...நோ! நான் வெறும் டாக்டர்! தெய்வம் எங்கே? நான் எங்கே? என் சொந்த மகள் சரளா கிட்டே அந்தக் காலத்திலே இப்படித்தான் சொல்வேன்!"

'சரளா' என்ற பெயரைக் கேட்டதும் வீரபாகுவின் முகம் ஏன் அப்படிச் சுழல் வட்டம் போடுகிறது?

குமாரி பரிமளத்தின் உதடுகளில் லேசான அசைவு படர்ந்தது.

வீரபாகு தம்பதிகள் ஆனந்தக் கடலாடினார்கள்.

குமாரி பரிமளத்தின் மீன் விழிகள் மெள்ள மலர்ந்தன.

வீரபாகு தம்பதிக்கு ஆனந்தம் தலைகால் புரியவில்லை.

"டாக்டர், எங்க பரிமளத்தைப் பாருங்க. கண் திறந்திட்டுது!"

"தெய்வம் 'கண் திறந்திட்டுதுண்ணு அர்த்தம்!" என்றார் டாக்டர். புறப்பட ஆயத்தப்பட்டார்.

"அப்பறம் வாங்க!" என்று சொல்லிக் கொண்டே நாடிக் குழலை சிவபெருமான் பாம்பை கழுத்தில் சுற்றிக் கொண்ட மாதிரி போட்டுக் கொண்டு நகர்ந்த தருணத்தில், சிந்தனை வசப்பட்டு நின்ற பாண்டியனைப் பார்த்தார், டாக்டர் சாரி.

"யார் இவர்?" என்று விசாரித்தார்.

"இவர்தான் பிரபல எழுத்தாளர் அதிவீரராம பாண்டியன்!"

"ஓ! அப்படியா? வெரிகுட்!" என்று மகிழ்ந்த டாக்டர், வலியச் சென்று பாண்டியனின் கைகளைப் பெருமை துள்ளக் குலுக்கினார்.

பாண்டியன் கருவக் களி துலங்க அமர்த்தலாகப் புன்முறுவல் காட்டினான். சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்தான். அவனது புதிய மீசையும் பழைய கிர்தாவும் இப்போது கம்பீரமாகவே திகழ்ந்தன!

பரிமளத்தின் தெளிந்த பார்வையில் இப்போதுதான் பாண்டியனின் உருவம் நிழலாடியது. "மிஸ்டர் பாண்டியன்!" என்று ஆனந்தம் மேலிட விளித்தவாறு தலையணையினின்றும் தலையைத் தூக்க முயன்றாள் அவள்.

வாசலில் சப்-இன்ஸ்பெக்டர் சாந்தலிங்கம் வந்து கொண்டிருக்கின்றார்!

"மிஸ்டர் பாண்டியன் தான் எங்க பரிமளத்தோட காதலராக்கும்!" என்று பெருமையும், பெருமிதமும் சுழிக்க தெரிவித்தார் வீரபாகு.

"டாக்டர்! நான் குமாரி பரிமளத்தின் மாஜி காதலன்!" என்று சிறுகதை மன்னன் அதிவீரராம பாண்டியன் சலனமிழந்த தொனியில் தனக்கே உரித்தான அகந்தையோடு தெரிவித்தான்!...

# 37. பாரிஜாதப்பூ!

...ிப் பொட்டிலே பேய் அறைந்து விட்ட மாதிரி கண்மூடிக் கண் திறக்கும் அந்த ஒரு நொடிப் பொழுதிலே கதிகலங்கிப் போய்விட்டார் தொழிலதிபர் வீரபாகு.

என்ன சொல்கின்றான் அதிவீரராம பாண்டியன்?

சிறுகதை மன்னன் பாண்டியன் என் இப்படித் தீர்ப்பு வழங்குகின்றான்?

வீரபாகுவின் தந்தை மனம் வெடித்துச் சிதறி விடும் போலிருந்தது.

தன்னை பரிமளத்தின் மாஜி காதலன் என்று டாக்டர் சாரியிடம் அறிமுகப்படுத்திக் கொள்கிறானே பாண்டியன்?...ஐயையோ!...என்ன புதுமை இது? என்ன புதுவினை இது? இவன்தான் விதியா? இல்லை இவனேதான் வினையா? தெய்வமே!...வடிவேலனே!— தவித்தார் வீரபாகு விழிவெள்ளம் ஆடிப் பெருக்காக வழிந்தோடிக் கொண்டிருந்தது. வெளியே எரித்துக் கொண்டிருந்த புது வெய்யிலின் கொடுமை உள்ளே நின்ற அவரைச் சாடிக் கொண்டிருந்தது தனக்கே உரிய அகம்பாவத்தோடும் தனக்கே உரித்தான மிடுக் கோடும் முடிவு கூறிய பாண்டியனை விழுங்கி விடுபவரென ஆத்திரத்தோடு பார்த்தார் அவர் பிறகு அவரது கண் நோக்கு தரையில் கிடந்த நாதவீணையின் மீது ஓடியது

ஓடிவிட்ட பாக்கியத்தின் ஏமாற்றத்தைத் தாங்க முடியாமல் தவித்து உருகிக் கொண்டிருந்த குமாரி பரிமளம் தன்னுடைய எஞ்சி நின்ற பலத்தைக் காட்டிய வண்ணம் மெல்ல எழுந்தாள். “மிஸ்டர் பாண்டியன்!” என்று அன்புடன் ஆதரவுடன் பரிவுடன் குயிலாகக் கூவினாள். கோலச் சிறுவிழிகள் தரை மீன்களாயின.

புறப்படத் தொடங்கிவிட்ட ‘விதி’ நிற்குமா, என்ன?

பாண்டியன் சடக்கென்று நின்றான். "பரிமளம்! உன் பாண்டியன் இறந்து விட்டான்!..." என்று சொல்லிக் கொண்டே, அங்கிருந்து நகரலானான் அவன்.

"ஐயையோ!" என்று கதறினாள் பரிமளம்! திருமதி வீரபாகு 'நெஸ்கா:பே' காப்பியோடு வந்து நின்றாள்.

காப்பியின் மணம்தானா அவனைத் தடுத்து நிறுத்தி விடப் போகிறது?

வீரபாகு ஏமாற்றம் அடைந்த காட்டு வேங்கை யாக சிலையாக நின்றார். கண்ட கனவெல்லாம் பொய் யாகி விட்டாற்போன்ற ஏக்கத்தோடு நின்றார். அட பாவி!...இன்னமுமா உன் சோதனை முடியவில்லை? வினை வினையாகும்; விதியும் விளையாடுமாம்!...நீயும் விளையாடுகிறாயே? அப்படியென்றால், நீ யார்? நீ தான் விதியா? இல்லை, நீயே தான் வினையா? அவரது தந்தை மனம் தூண்டிற் புழுவானது. பாண்டியன் தன்னைத் திருமணம் புரிந்து கொள்ளச் சம்மதித்து விட்டதாக பாண்டியனின் பங்களா வாசலில் சொன்னாளே பரிமளம்?

எது பொய்?

எது உண்மை?

வீரபாகுவின் பார்வை பரிமளத்தை நாடியது.

பரிமளம் அம்பிகைச் சிலையாகவே இன்னமும் நின்று கொண்டிருந்தாள்!...

உள்ளே சென்ற வீரபாகு வெளியே வந்தார்.

"காப்பி சாப்பிடுங்க. மாப்பிள்ளை!" என்று கெஞ்சினாள் மங்களம்

பாண்டியன் திரும்பிப் பார்த்துவிட்டு கடகட வென்று பேயாகச் சிரித்தான். "உங்க காப்பி என்னை மயக்க முடியாது!...நான் சிறுகதை மன்னன் பாண்டி யன். என்னை இனியேல் எந்த மோகினி அவதாரமும் மயக்கிவிட முடியாது!" என்றான். யாரோ வரும் காலடி ஓசை கேட்டது.

யார் வருவது?

டாக்டர் சாரிதான் போய் விட்டாரே? திரும்பினார் வீரபாகு.

அங்கே போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர் சாந்தலிங்கம் நின்றார். அவர் கையில் சினிமா நேசன் மஞ்சள் பத்திரிகை வெள்ளை வெளேரென்று காட்சித் தந்தது!

வீரபாகு வெறி பிடித்த வேங்கையாகி சாந்தலிங்கத்தையும் அவர் பற்றி நின்ற மஞ்சள் ஏட்டையும் மாறி மாறிப் பார்த்தார். பிறகு பாண்டியனையும் பார்த்தார்.

பாண்டியன் 'நான் புறப்படுகிறேன்.' என்று சொல்லி புறப்பட்டான். அவன் கையில் அவனுடைய புதிய டைரி இருந்தது.

'நில்' என்று ஆணையிட்டார் வீரபாகு.

"வீரபாகு ஸார்! தானாகப் பழுக்காத கனியை தடிக்கொண்டா பழுக்க வைக்க வேண்டும்" என்று குறுக்கிட்டார் எஸ் ஐ. சாந்தலிங்கம்.

"சாந்தலிங்கம் இது எங்கள் குடும்ப விவகாரம். நீங்கள் இப்போது காட்சியளிப்பது போலீஸ் உடையில். ஆகவே இப்போது உங்களுக்கு எங்கள் விஷயத்தில் குறுக்கிட உரிமை இல்லை!" என்று வீறு கொண்டு முழங்கினார் வீரபாகு.

சாந்தலிங்கம் புதிர்போலச் சிரித்தார்.

வீரபாகு எதையோ எண்ணி முடிவு கொண்ட நிலையில் ஒரு கணத்திற்குள் உருமாறினார். அவர் பாண்டியனை அண்டி நடந்தார். வழியில் காலில் சிக்கிய பரிமளத்தின் டம்பப் பையை ஒதுக்கக் குனிந்தார் அப்போது வெளியே தலைநீட்டிப் பார்த்தது. அதிவீரராமபாண்டியனின் கடிதம்!......எடுத்தார்! "பாண்டியன்!" என்று கூவியவராக பாண்டியனின் தோள்களைப் பற்றியவாறு அவனைக் கைப்பிடியாக இழுத்து கொண்டு உள்ளே சென்றார் வீரபாகு.

கதவுகள் பூட்டிக் கொண்டன.

பரிமளத்தின் சுயப் பிரக்ஞை கொஞ்சம் கொஞ்சமாக நழுவிக் கொண்டிருந்தது!

அடைக்கப்பட்ட கதவுகளுக்கு மத்தியிலே அடைபடாத உள்ளங்கள் இரண்டு ஒன்றுக்கொன்று மாறு

பட்ட மாற்றப்பட்ட சூழலிலே தவித்துக் கொண்டே இருந்தது.

பரிமளத்தின் தனி அறை அல்லவா?...

வீரபாகு பதட்டத்துடன் அதிவீரராமபாண்டிய னின் அந்தக் கடிதத்தைப் படித்துவிட்டு பாண்டியனை ஏறிட்டு நோக்கினர். நீர்ப்படலம் பார்வையைத் தடுத்தது, சமாளித்துக் கொண்டார்.

'பாண்டியன், நீங்கள் நல்லவன் நல்ல என்பது ஊரறிந்த ரகசியம் அதே போல் நானும் நல்லவன் அல்ல என்பதும் ஊரறிந்த உண்மை. ஆனால் என் மகள் பரிமளாவும் நல்லவள் அல்லள் என்று நீங்கள் தீர்ப்புக் கூறி விட்டீர்களே? இதுதான் உங்கள் முடிவா?'' என்று சின்னக் குழந்தை மாதிரி விக்கலுக்கும் விமமலுக்கும இடையில் கேட்டார் தொழிலதிபர் வீரபாகு. ஸில்க் ஜிப்பா பளபளத்தது; கண்களும் பள பளத்தன.

"ஆமாம்!"

"காரணம்?"

"நான் சொல்லித்தான் அந்தக் காரணத்தைப் புரிந்து கொள்ள வேண்டுமா தாங்கள்? சமுதாயம் சொல்கிறதே...சினிமா நேசன் சொல்கிறதே?...

"சினிமா நேசனின் தீர்ப்புத்தான் சமுதாயத்தின் தீர்ப்பா?"

"அதைப் பற்றி நிர்ணயம் செய்து கொள்வது உங்கள் பொறுப்பு!..."

"அப்படியென்றால் உங்கள் முடிவுதான் என்ன?"

"சமுதாயத்தின் பார்வையில் ஒரு ஸ்திரிலோலனுக்குக் காட்சியளிக்கும் செல்வச் சீமானை உங்களுடைய மகளாக பரிமளத்தை நான் ஏற்க முடியாது!—அதன் விளைவாகப் பரிமளத்தை என் இன்னுயிர்த் துணை யாக ஏற்க நான் தயாராக இல்லை! இதுதான் என் முடிவு!" வீரபாகு காட்ரெஜ் பீரோவைத் திறந்தார்.

இப்போது அவர் கையில் 'ரிவால்வர்' இருந்தது. அதற்கு மத்தியில் சில காகிதக் குப்பைகளும் புகைப் படங்களும் இருந்தன. பத்திரப்படுத்தி வைக்கப்பட் டிருந்த 'ஆட்டோமாட்டிக் காமிரா'வும் துணை இருந்தது.

"பாண்டியன்! இந்தக் காகிதங்களைப் பாருங்கள், உங்கள் முன் மோகினி அவதாரம் எடுத்து வந்தாளே குமாரி சரளா. அவள் சினிமா நேசனுக்கு இம்மாதிரியான ஆபாசச் செய்திகளை எழுதி அனுப்பியிருக்கிறாள்! துப்பு அறிந்து கண்டுகொண்ட நான் அவளது வாய் மூலமாகவே இந்த உண்மைகளை அறிந்தேன். நீங்கள் அந்த மோகினி சரளாவை அனுபவிக்கப் பாடுபட்டுத் தோற்றீர்கள்! நான் வென்று விட்டேன். அவளை! இதோ நானும் சரளாவும் இன்பம் துய்த்த காட்சி! என் மானத்தைப் பறித்த அந்தப் பாவி சரளாவின் மானம் இப்போது என் கைகளில் ஊசலாடுகிறது. நாளைக்கு இதே படம், இதே சினிமா நேசனுக்குப் போய்ச் சேர்ந்துவிடும்!...உங்களையும் சரளா விட்டு வைக்கவில்லை! பாருங்கள் இதோ!' என்று எரிமலையாக வெடித்த வீரபாகு, காகிதங்களை அவன் முன் வீசினார்

அதிவீரராம பாண்டியன், சிறுகதை மன்னன் அதிவீரராமபாண்டியனின் நிலையைக் கடந்து குறையும் நிறையும் பெற்ற சாதாரண மனிதனாக நின்று அக் காகிதங்களைப் பார்த்தான்

"நான் புறப்பட வேண்டும் வீரபாகு ஸார்" என்றான் பாண்டியன். வேர்வை ஓடியது.

"வீரபாகு பேயாகச் சிரிக்கலானார்." என் மகள் பரிமளத்தின் கதை அற்புதமானதுதான். ஆனால் முடிவை இனியாவது மாற்றி விடுவீர்களா, பாண்டியன்?... சமுதாயத்தின் கோரக் கண்களுக்க—இதயமில்லாத கண்களுக்கு நான் ஒரு அயோக்கியனாகக் காட்சியளித்தேனே தவிர, தெய்வப் பெண்ணான பரிமளத்தின் தந்தை என்ற அளவில் நான் இந்தச் சமுதாயத்தின் பார்வைக்குக் காட்சி கொடுக்கத் தவறவில்லையே!...என் துயரம என் சொந்த விஷயம்!...அது என் துரதிருஷ்டமும் கூட. 'அத்துன்பம் என் உயிருள்ள' மட்டும் என்னை வாட்டி வதைத்துவிடும். ஆனால் பரிமளத்தின் கதைக்கு ஒரு முடிவு வேண்டும்! அந்த முடிவுக்கு முடிவு சொல்ல நீங்கள் தயாராக வேண்டும். இல்லையேல்?..." என்று தடுமாறினார் வீரபாகு.

"நான் ஓர் அற்ப மனிதன்!" என்றான் அதிவீரராம பாண்டியன்.

"என் மகள் பரிமளத்திற்கும் ஒரு முடிவு வேண்டும்!"

'அவள் தெய்வப் பெண் என்றுதான் நீங்களே சொல்லி விட்டீர்களே?"

"ஓஹோ! சரி நீங்கள் இனி புறப்படலாம்! ஆமாம்; என் மகள் பரிமளம் ஒரு தெய்வப் பெண்ணே தான்! உன் போன்ற அற்ப மானுடர்களுக்குக் கிடைக்கக் கூடாத தெய்வப் பெண்ணேதான்! ஊம்... புறப்படுங்கள்!'

வீரபாகு கதவுத் தாழ்களை விலக்கி விட்டார்

சிறுகதை மன்னன் அதிவீரராம பாண்டியன் தனக்கே உரிய கம்பீரமாக அகம்பாவத்துடன் அங்கு இருந்து புறப்படப் போனான்.

அப்போது, 'டுமீல்' என்று பயங்கரச் சத்தம் வெடித்தது

நின்றான் பாண்டியன்!

"அப்பா! அப்பா!" என்று வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்து ஓடோடி வந்தாள் குமாரி பரிமளம்.

ஓர் அதிர்ச்சிக்கு வேறொரு அதிர்ச்சி மருந்தாகி விட்டதோ?

ரத்தத் துளிகளுக்கு மத்தியில் பாண்டியனின் பழைய டைரி பிரிந்தபடி காட்சியளித்தது.

> 'பரிமளம் மெய்யாகவே ஒரு தெய்வப் பெண்! அற்ப மனிதனான எனக்குக் கிடைக் கக் கூடாத பாரிஜாதம் அவள்! அவளை— என தெய்வத்தை நான் மறக்க முடியுமா?... ஊஹூம்! அந்தப் பாரிஜாதப் பூவை நான் மறந்தே ஆக வேண்டும்—இந்தப் பிறவியில்! இல்லையேல், தெய்வம் பொறுக்காது!..."

தன் எழுத்துக்களினின்றும் பார்வையை விலக்கினான், சிறுகதை மன்னன் அதிவீரராம பாண்டியன்! மறுகணம், "பரிமளம்!...பரிமளம்!..." என்று ஓலம் பரப்பினான்!

இரத்தம் எவ்வளவு அழகாகத் தரிசனம் தருகிறது...!

ஆஹா...!...

நிறைந்தது